

# தேசிய இலக்கியம்

## பெரிய புராணம்

பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன்

கழக
வெளியீடு

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,

கிளைகள் :
திருநெல்வேலி-6, மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சி-2 சேலம்-1

கழக வெளியீடு : 1928

முதற் பதிப்பு : ஏப்ரல், 1966
இரண்டாம் பதிப்பு : 1975
மூன்றாம் பதிப்பு : 1979
நான்காம் பதிப்பு : நவம்பர், 1992

O81, IC62
N92

DESIYA ILAKKIYAM
Periya Puranam

மாருதி பிரஸ்,
173, பீட்டர்ஸ் ரோடு,
சென்னை-600 014.

# படையல்

'உண்ணும் சோறும், பருகு நீரும், தின்னும் வெற்றிலை பாக்கும் எல்லாமும் பெரியபுராணமே' என்று கருதி வாழ்ந்த காலஞ் சென்ற என் தந்தையார் 'பெருஞ்சொல் விளக்கனார்' திரு. அ. மு. சரவண முதலியார் அவர்கட்கு நன்றி செலுத்தும் முறையில் இந் நூலைப் படையல் செய்கிறேன்.

# பதிப்புரை

சைவத் திருமுறைகளுள் ஒன்றான பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் மாக்கதை பக்திக் காப்பியம் எனப் போற்றப் பெறுவதால் பலரால் நன்கு ஆழமாகப் படிக்கப் படுவதில்லை. பெயரில் அமைந்துள்ள 'புராணம்' என்ற சொல்லே சிலசமயம் கட்டுக் கதையோ என எண்ணத் தோன்றலாம். பெரிய புராணத்தைப் பொறுத்தவரை அது ஒரு வாழ்வியற் காப்பியம் ஆகும். இந்த நோக்கில் இதனை யாரும் பார்க்காத நிலையில் பேராசிரியர். உயர்திரு. அ.ச. ஞானசம்பந்தம் அவர்கள் புதிய கண்ணோட்டத்துடன் பெரிய புராணத்தை ஆய்ந்து இந் நூலைப் படைத்துள்ளார்.

பெரிய புராணம், சைவ நாயன்மார்களின் உண்மை வரலாறு ஆகும். இதில் காணப்பெறும் பெரும்பாலான நிகழ்ச்சிகள் பல்வேறு கல்வெட்டுகளாலும் வரலாற்று நிகழ்ச்சிகளாலும் உறுதி செய்யப் பெறுகின்றன. இந்த அளவு ஒரு வரலாற்றுக் காப்பியமாகப் படைத்திருக்கும் சேக்கிழார் பெருமானை என்றென்றும் போற்றுதல் வேண்டும்.

தமிழிலக்கியத்தைப் புதுப்புதுக் கோணங்களில் நோக்கித் திறனாய்வு செய்வதில் தலைசிறந்து விளங்குபவர் பேராசிரியர் அவர்கள். திறனாய்வுக் கலையைத் தமிழில் அறிமுகப்படுத்துவதற்காக 'இலக்கியக் கலை' யைப் படைத் தவர். கம்பராமாயணத்தை ஆய்வு செய்து 'கம்பன் கலை' படைத்தவர். இதே போக்கில் பெரிய புராணத்தையும் ஆய்வு செய்து பரந்து பட்டுக் கிடக்கும் பாரத நாட்டில் வாழும் எல்லா இன மக்களின் பிரதிநிதிகளாக உள்ள நாயன் மார்களின் வரலாற்றை எடுத்துக் கூறும் நூலாதலால் பெரிய புராணத்தைத் 'தேசிய இலக்கியம்' என்று துணிந்து எழுதி யுள்ளார்.

பெரிய புராணத்தைப் பரப்புவதையே தம் வாழ்நாட் பணியாகக் கொண்டு வாழ்ந்து மறைந்த பெருஞ்சொல் விளக்கனார் அறிஞர் அ.மு. சரவண முதலியார் அவர்களின் ஒரே மகனார் என்ற முறையில் பேராசிரியர் அ ச ஞா. அவர்கள் பெரியபுராணத்தை ஆய்வு செய்து இரண்டு அரிய நூல்களைப் படைத்துள்ளார். தேசிய இலக்கியம், பெரிய புராணம் ஓர் ஆய்வு-இவ்விரண்டுமே இரண்டு மாணிக்கங்கள் தமிழர்கள் இவற்றைப் போற்றிப் படித்துப் பயன்பெறவேண்டும்.

தேசிய இலக்கியம் எனும் இந்நூலைக் கழக வழி வெளியிட வாய்ப்பளித்த பேராசான் அவர்கட்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

—சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# முன்னுரை

"தொன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடு சூழ்கலை வாணர்களும் இவள் என்று பிறந்தவள் என்று உணராத இயல்பினை" உடைய தமிழைத் தாய்மொழியாகப் பேசும் மக்களைத் தமிழர்கள் என்று குறிப்பிடுகிறோம்; இந்திய உப-கண்டத்தின் தென் கோடியில் 'வட வேங்கடம் தென் குமரி ஆயிடை' யுள்ள நிலப்பரப்பில் வாழ்கின்றவர்கள் இவ் வினத்தார்.

எக்காலத்து எங்குத் தோன்றியவர்கள் இவர்கள்? வெளிநாட்டிலிருந்து இவண் வந்து குடியேறினவர்களா? அன்றி, இங்கேயே தொன்றுதொட்டு வாழ்ந்து வருகின்றவர்களா? என்பது பற்றிய ஆராய்ச்சி இன்னும் முடிந்தபாடில்லை. ஆனால், 'மொகஞ்சதாரோ, 'ஹரப்பா' முதலிய இடங்களில் கிடைத்த புதைபொருள்கள், இப் பழந் தமிழ் மக்களின் பண்பாடு எங்கெல்லாங்கூடப் பரவியிருந்தது என்று ஓரளவு கூறுவதற்கு இடமளிப்பதாய் உள்ளது. மிகப்பழைய தமிழ் இலக்கியங்கள்கூடக் "கல் தோன்றி மண் தோன்றாக் காலத்து வாளோடு முன் தோன்றிய மூத்த குடி'' என்று சேர, சோழ, பாண்டியரைக் குறிப்பிட்டுச் செல்கின்றன. ஏனவே, சரித்திரம் தோன்றுவதற்குப் பல்லாயிரம் ஆண்டு

களுக்கு முன்னரே தமிழர் நாகரிகமும் மிகச் சீரிய முறையில் வளம்பெற்று விளங்கிற்று என்று நினைய வேண்டியுள்ளது. மிகப் பழையதும் செறிவுடையதுமான 'தொல்காப்பியம்' போன்ற ஓர் இலக்கணம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரீத் தோன்ற வேண்டுமானால், அதற்கு முன்னரீப் பல்லாயிரம் ஆண்டுகளாக இம்மொழி சிறந்த இலக்கியங் களைப் பெற்றுத் திகழ்ந்திருத்தல் வேண்டுமென்று நினைப் பதில் தவறு ஒன்றுமில்லை. 'பிளினி' போன்றவர்கள் தம்முடைய குறிப்புகளில் பாண்டி நாடு, அதனை ஆட்சி செய்த பெண் அரசியார் அந் நாட்டில் கிடைத்த அளப்பருஞ் செல்வம் ஆகியவற்றைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர் என்றால, தமிழ் இனத்தின் பெருமை வெறும் ஏட்டளவில் இல்லாமல் மெய்யாகவே பிறர் கண்டு வியக்கும் வண்ணம் விளங்கிற்று என்று நினைக்கலாம்.

இத்தகைய ஒரு நாகரிகம் இத்தனை ஆயிரம் ஆண்டு களாக இந் நாட்டில் இடையீடு இல்லாமல், நிலைபெற்று வந்துள்ளது என்பதும் அறிந்து வியத்தற்குரியது. உலகின் பிறபகுதிகளில் காணப்பட்ட கிரேக்க, ரோமானிய, எகிப்திய, மெசப்பட்டோமிய நாகரிகங்கள் இன்று 'பொய்யாய்க் கனவாய்ப் பழங்கதையாய் மெல்லப் போய் விட்டன'. எத்தனையோ புயற் காற்றுகள், சூறாவளிகள் அடித்துங் கூட இத் தமிழ் நாகரிகம் இன்றும் வாழ்ந்து வளர்ந்து வருகின்றது என்றால், இதனுடைய ஆணிவேர் 'மிகவலுவானதாக இருத்தல் வேண்டுமென்பதில் எள்ளளவும் ஐயமில்லை.' பிளேட்டோவும் அரிஸ்டாட்டிலும் தோன்றி வளர்த்த நாகரிகங்கள் இன்று மறைந்துவிட்டன. ஆனால் இத் தமிழ் நாகரிகம் மட்டும் இன்றும் இருந்து வருகிறது

என்றால் அதற்குரிய காரணம் எதுவாகும் என்று ஆராய வேண்டியுள்ளது.

மிக நீண்ட முறையில் சிந்தித்து ஆராய்வதற்குரிய ஒரு கருத்தாயினும் சுருங்கிய அளவில் இதனைப் பற்றி ஒன்று இரண்டு சொல்லலாம். கிரேக்க நாகரிகங்கள் போன்றவை இன்று இல்லாமல் போனதற்கு அடிப்படையான காரணம், அந் நாட்டு இலக்கியங்களும் அறிஞர் கண்ட காட்சிகளும் மக்கள் வாழ்வோடு ஒட்டியதாக அமையவில்லை. வேறு வகையாகக் கூற வேண்டுமேயானால், 'பிளேட்டோ' போன்ற அறிஞர்கள் "city state" போன்ற நூல்களையும், அரிஸ்டாட்டில் போன்றவர்கள் "பாட்டு இயல்" (poetics) போன்ற நூல்களையும் எழுதிய காலத்தில், அவ்வெழுத்துக்கள் மக்கள் வாழ்வோடு தொடர்பு அற்றவையாயிருந்தன. மாபெரும் படைப்புகளான இந்நூல்கள் எத்துணைச் சிறந்தவையாக இருப்பினும் இந்த நூல்கள் பேசும் நாகரிகத்தைக் கொண்டு செலுத்த வேண்டிய மக்கள் இல்லாமல் போய்விட்டனர். இன்னும் விளக்கமாக இதனைச் சொல்ல வேண்டுமானால், பிளேட்டோ நூல்கள் எழுதிய அதே நேரத்தில் கிரேக்கப் பொது மக்கள் எவ்வாறு வாழ்ந்தனர்? பசித்த சிங்கத்தினிடம் கணவன்மார்களைத் தூக்கி எறிந்து அச் சிங்கங்கள் அவ் அப்பாவி மனிதர்களைக் கிழித்துத் தின்பதை அவர்கள் மனைவிமார்களைப் பார்க்கு மாறு செய்தார்கள். பிளேட்டோவின் மாபெரும் தத்துவங்கள் எங்கே? கணவனைச் சிங்கத்திடம் தூக்கி எறிந்து அவன் மனைவியை வேடிக்கை பார்க்குமாறு சொல்லுகின்ற பொதுமக்கள் வாழ்வு எங்கே? அதே போன்றுதான் காரியலேனஸ் போன்ற வீரர்கள் பிறந்த ரோமாபுரியில் பெண்கள் முத்துக்களைத் திராட்சை மதுவில் கரைத்துக்

குடிக்கின்ற அளவுக்குக் கேளிக்கை வாழ்வு வாழத் தொடங்கிவிட்டார்கள். இம் முறையில் பொதுமக்கள் வாழ்வும் அந் நாட்டுப் பேரறிஞர்கள் எழுதுகின்ற எழுத்தும் எவ்விதத் தொடர்பும் இல்லாமல் போய்விட்ட காரணத்தால் அவ்வெழுத்துக்கள் இன்றும் நிலைபெற்று இருக்கவும், அம் மக்களின் நாகரிகம் மட்டும் அழிந்து ஒழிந்தது.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை இந்நிலை மாறி இருக்கக் காண்கிறோம். சங்கப் புலவர்கள் பாடல்கள் அற்றை நாள் தமிழர்களின் வாழ்வு, குறிக்கோள், விருப்பு வெறுப்புகள், குறைவு நிறைவுகள் ஆகியவற்றை அப்படியே படம் பிடித்துக் காட்டுவதுடன் அத்தகைய வாழ்விலிருந்து சிறந்த குறிக்கோள் வாழ்க்கையை அடையும் வழி எது என்பதையும் காட்டி நிற்கிறது.

தமிழ்க் கவிதையின் சாரமான இந்த அடிப்படை சங்க காலத்தில் இருந்து இன்று வரை தமிழ் இலக்கியத்தில் விளங்கக் காண்கிறோம். உலகத்திற்கு ஒரு பொதுமறை தந்த வள்ளுவர்கூடக் கூடுமானவரை அவ் இலக்கியம் மக்கள் வாழ்வோடு பொருந்தியதாக இருக்கவேண்டுமென்ற அடிப் படையிலேயே பாடிச் சென்றுள்ளார். இதனால் மிகப் பழைய தமிழ் இலக்கியங்களைப் படிக்கும்போது தமிழ் மக்களுடைய நாகரிகத்தை, உளப்பாங்கை அந் நூலின் கவிதைகள் பிரதி பலிக்கின்றன என்று துணிந்து கூறலாம். வாழ்வும் இலக்கியமும் ஒன்றையொன்று பின்னிக்கிடந்த காரணத்தால் தான், இலக்கிய வளம், வாழ்வின் வளத்தை அடியொற்றி இருந்த காரணத்தால்தான் இன்று வரை அவ் வாழ்வும் அதனை அடியொற்றி வந்த இலக்கியமும் நின்று விளங்கக்

காண்கிறோம். மக்கள் வாழ்வு மாறிப் போகும் சமயங்களில் அறிஞர்கள் தோன்றி அதனை நல்வழிப்படுத்த முயன்று உள்ளனர். அவ்வாறு அறவுரை கூறி நல்வழிப்படுத்துவதிலும் முரட்டுத்தனத்தைக் கையாளாமல் மக்கள் மனம்போனபடி ஓரளவு அவர்கள் பின்சென்றே அறிஞர்கள் திருத்தியுள்ளனர். இக் காரணத்தால் தமிழ் மக்கள் தம்மைத் திருத்துவதற்காகத் தோன்றிய இலக்கியங்களைக்கூட மருந்தாக நினையாமல் இலக்கியம் என்றே நினைத்து அதில் ஊறிவிட்டனர். அவ்வாறு ஊறியதால் அவர்கள் வாழ்வோடு இணைந்த இலக்கியங்கள் மெல்லமெல்ல அவர்களுள் புகுந்து அவர்கள். வாழ்க்கையைத் திருத்தும் பணியைச் செய்யத் தொடங்கியது

இலக்கியத்தின் நோக்கம் அல்லது குறிக்கோள் யாது என்ற வினாவிற்குத் திறனாய்வாளர் இருவகை விடை அளிப்பர். கற்றார்க்கு இன்பஞ் செய்வதுடன் அவர்கள் வாழ்வைத் திருத்திச் செம்மை செய்வதும் இலக்கியத்தின் பயன் என்பர் ஒரு சாரார். படிக்கும் பொழுது இன்பஞ் செய்வது தவிர, வேறு ப்யனை விளைக்கக் கூடாது என்பர் மற்றொரு சாரார். ஆனால் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை யில் முதற்கொள்கையே வலிவுற்றிருந்தது; இருந்தும் வருகிறது. இந் நாட்டில் தோன்றிய எந்த ஒரு சிற்றிலக்கியம் கூடப் பண்பை வளர்க்கும் பணியை ஓரளவு செய்யாமல் போகவில்லை. அவ்வாறு செய்யாத இலக்கியங்கள் தமிழ் நாட்டைப் பொறுத்தவரை போற்றுவாரற்று வழக்கு ஒழிந்தன. எனவே, படிக்கும்போது இன்பம் செய்வதோடு பின்னரும் நிலைத்து நின்று வாழ்வைத்திருத்தும் நல்லதொரு பணியைச் செய்கின்ற ஒன்றையே இலக்கியம் என்று நம் நாட்டவர்கள் கருதினார்கள்,

பெரிய புராணம் என்று வழங்கப் பெறும் திருத்தொண்டர் புராணம் தோன்றியது இக் காரணத்தை அடிப்படையாகக் கொண்டுதான். இந் நூல் தோன்றிய காலத்தில் தமிழ்நாடு எந் நிலையில் இருந்தது; இந் நூல் தோன்றியிராவிட்டால் இது எந் நிலையை அடைந்திருக்கும் என்பவற்றையெல்லாம் "குறிக்கோள்" என்ற தலைப்பில் விரிவாக ஆராயப் பெற்றுள்ளது. வாழ்க்கையில் குறிக்கோள் ஒன்று இல்லாமல் இன்ப வேட்டை ஒன்றையே கருத்தாகக் கொண்டு தலை கீழாகப் போய்க்கொண்டிருந்த தமிழ் மக்களைக் கை தூக்கி நன்னெறி காணச் செய்வதே சேக்கிழாரது குறிக்கோள் என்பதை நன்கு உணரமுடியும். எத்துணைச் சிறந்த பாடலா யினும், கவிதை நயம் பொங்கி வழிவதாயினும் அப் பாடல் படிப்பவர்களுக்கு நிலையான பயனை வழங்கவில்லையானால் அவப் பாடலாகவே அவை முடியும். அதே நேரத்தில் அறவுரை கூறுவதை வெளிப்படையாகத் தெரிவித்துக் கொண்டு முந்திரிக் கொட்டைபோல் நீதி வழங்கத் தொடங் கினால் சிறந்த பாடல் என்ற இலக்கணத்திலிருந்து வழுவிவிட நேரிடும். ஆகவேதான் போலும், தாம் எக் காரணத்தைக் கொண்டு இதனைப் பாடத் தொடங்கினார் என்று சேக்கிழார் தெரிவிக்கவே இல்லை. பாடல் நயத்திற்காக மக்கள் படிக்கத் தொடங்கினால், பாடலின் உட்பொருள் தானே சென்று மக்கள் மனத்தில் தங்கிவிடுமென்ற பேருண்மையைச் சேக்கிழார் நன்கு அறிந்து இருந்தார். அதனால்தான் போலும் உவமை கூறவேண்டிய இடங்களிலெல்லாம் பக்திச் சுவை சொட்டும், வாழ்வை நன்னெறிக்கண் செலுத்தும் உவமைகளாகவே பாடிச் செல்கின்றார். வானம் இருண்டது என்பதற்கு ஓர் உவமை கூறவேண்டுமானால் "அஞ்சு எழுத்தும் உணரா அறிவினார் நெஞ்சம் என்ன இருண்டது நீண்ட வான்" என்று பாடிச் செல்கிறார்.

இதனையடுத்து மற்றொரு குறிக்கோளும் சேக்கிழாருக்கு இருந்திருத்தல் வேண்டும். தமிழ் மக்கள் தம்முடைய மரபை, பண்பாட்டை இழக்கத் தொடங்கியவுடன் தேசிய மனப் பான்மையையும் இழக்கத் தொடங்கிவிட்டார்கள். இந் நிலை, இவ்வினத்தின் அழிவுக்கே வித்திட்டுவிடுமென்ற உண்மையை உணர்ந்த ஞானசம்பந்தர் தவறாமல் தம்மை "தமிழ் ஞானசம்பந்தன், முத்தமிழ் விரகன்" என்றெல்லாம் கூறிக்கொண்ட அடிப்படையைச் சேக்கிழாரும் நன்குணர்ந்து இருக்கின்றார். ஆகவேதான், தமிழ் மக்களை ஒன்று திரட்டும் தேசிய இலக்கியமாகவும் இது பயன்பட வேண்டுமென்ற கருத்தில் பெரிய புராணத்தைப் பாடிச் செல்கின்றார். 'பிற வழக்குகளையெல்லாம் தமிழ் வழக்கு வென்றது' என்று ஞானசம்பந்தர் புராணத்தில் சேக்கிழார் பாடிய கருத்து இதுவேயாம். தமிழ்த் தேசியம் குறுகிய மனப்பான்மையுடையது அன்று; வரம்புகளையெல்லாம் கடந்து நிற்பது; ஜாதி, சமயம் முதலிய போலிக் கொள்கை களைக் கடந்து நிற்பது என்ற கருத்தையெல்லாம் சந்தர்ப்பம் வரும்பொழுது பாடிச் செல்கின்றார் இக் காப்பிய ஆசிரியர். பிறப்பில் அந்தணராகிய ஞானசம்பந்தரை ஒருமுறைகூட "ஐயர்" என்று அழைக்காத, பாடாத, சேக்கிழார் மற்றொரு புதுமையையும் செய்கின்றார். பிறப்பால் ஐயராகிய திருஞானசம்பந்தர், பிறப்பால் ஹரிஜனராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணரை இரண்டு முறை "ஐயரே" என்று அழைக்குமாறு செய்கிறார். இது மட்டுமல்லாமல் தில்லைவாழ் அந்தணர்களாகிய பெருமக்கள் திருநாளைப்போவாரை (நந்தனாரை) "ஐயரே" என்று அழைக்குமாறு சேக்கிழார் காப்பியம் பாடுகின்றார். தமிழ்நாட்டில் பிறந்தவர்கள் இறைவன்பால் அன்பு பூண்டவர்கள் யாராக இருப்பினும்,

அவர்கள் அனைவரும் ஒரே கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். வேறு பாடற்றவர்கள், ஒரு தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் என்ற கருத்தையெல்லாம் நம் மனத்தில் பதியுமாறு பாடிச் செல்கின்றார்.

பன்னெடுங்காலம் பெரிய புராணத்தில் ஊறி, திளைத்து பேசி, வாழ்ந்த என் தந்தையார் இளமையிலேயே பெரிய புராணச் சுவையை எனக்கு ஊட்டத் தொடங்கினார். அதன் பயனாக மிக இளமைக் காலந்தொட்டே இந் நூலினுள் திளைக்கின்ற வாய்ப்பைப் பெற்றேன். புத்தம் புதிய கருத்துகள் என்று இக்காலத்தில் போற்றப்பெறுகின்ற பல் வேறு கருத்துக்கள் பெரிய புராணத்தில் இடம்பெற்றிருப்பதை பல்லாண்டுகளாகத் தமிழ் மக்கள் வாழும் இடமெல்லாம் சென்று பறையறைவித்த என் தந்தையார் திருவாளர் அ. மு. சரவண முதலியார் அவர்கள் பெரிய புராணத்தில் கொண்டிருந்த ஈடுபாட்டுக்கு ஓர் அடையாளமாகும் இந் நூல். புதிய புதிய அல்லல்களில் சிக்கித் தவிக்கும் தமிழ்ச் சமுதாயம் பெரிய புராணத்தைக் கற்பதன்மூலம் மீண்டும் தலை நிமிர்ந்து வாழ முற்படுமென்று நம்புகிறேன்.

பெரிய புராணம் குறித்த மேலும் பல விளக்கங்களை இந்நூலாசிரியனது ''பெரிய புராணம்து - ஓர் ஆய்வு'' என்ற நூலில் காணலாம்.

தேசியம் என்பதே சரி. தேசீயம் என்பது பிழை. இந்நூலில் முதற்பக்கத்திலும் 20ஆம் பக்கத்திலும் பிற பக்கங்களின் தலைப்பிலும் ''தேசீய'' என நேர்ந்த பிழை திருத்தம் பெறத்தக்கன.

அ. ச. ஞானசம்பந்தன்

# பொருளடக்கம்

# தேசீய இலக்கியம்

## 1. தோற்றுவாய்

உலகில் மக்கள் பேசும் அனைத்து மொழிகளிலும் கடவுள் சம்பந்தமான இலக்கியம் உண்டு. இவ்வகை இலக்கியத்தைச் 'சமய இலக்கியம்' என்று கூறலாம். தமிழை அல்லாத வேறு மொழிகளில் ஏனைய இலக்கியங் களோடு சமய இலக்கியமும் உண்டு. ஏனைய இலக்கியங் கள் மிகுதியாகவும் சமய இலக்கியங்கள் ஓரளவு குறை வாகவும் இருக்கும். ஆனால், தமிழ் மொழியில் சமய இலக்கியம் ஏனைய இலக்கியத்தோடு போட்டிபோடும் அத்தனை அளவுக்கு மிகுந்திருக்கிறது. உலக மொழிகளில் மிகச் சிறந்த அதிகமான பக்திப் பாடல்கள் தமிழில் தான் இருக்கின்றன. வெறும் தமிழில் மட்டும் கற்றவர்கள் தம் மொழிப்பற்றினால் இதனைக் கூறுகிறார்கள் என்று கருதிவிட வேண்டா. 'திருவாசகத்தை' எலும்பு உருக்கும் (bone melting) பாட்டு என்று கூறிய கிறிஸ்துவப் பெரியார் ஜி. யூ. போப் அவர்களிலிருந்து திரு சி.பி. இராமசாமி ஐயர் வரை பலருங் கூறிய உண்மையாகும் இது.

சங்க இலக்கியம் என்று கூறப்படும் தொகுப்பினுள் பத்துப் பாட்டில் 'திருமுருகாற்றுப்படை' இருக்கிறது. ஏனைய 'புறநானூறு', 'நற்றிணை' முதலிய எட்டுத்தொகை நூல்களுள் கடவுள் வாழ்த்துக் காணப்படுவதோடு நூலுள்ளும் ஆங்காங்கே கடவுள் பற்றிக் குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றை யடுத்து இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கூறப் படும் சிலப்பதிகாரத்திலும் கடவுள் பேசப்படுகிறார் அவரை வழிபடும் பல்வேறு கூட்டத்தாரின் (பாலைவனத்தில் வேடர்

களின் வழிபாட்டு முதல் ஆயர் குலத்தாரின் திருமால் வழிபாடு வரை) வழிபாட்டு முறைகளும் பேசப் பெறுகின்றன. அடுத்துத் தோன்றிய 'மணிமேகலை' பௌத்த சமயத்தைப் பரப்பவே எழுந்த நூலாகும். கி.பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டினது என்று கருதப்படும் உதயணன் கதையாகிய 'கொங்குவேள் மாக்கதை' முதலும் இறுதியும் கறையான் உண்ட நிலையில்தான் இன்று கிடைத்துள்ளது. எனினும், இடையில் காணப்படும் குறிப்புகளில் பல சைன சமயக் கருத்துகளை வெளியிடுகின்றன. இதன் பிறகு, ஏழாம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரை தோன்றிய இலக்கியங்கள் அனைத்தும் சமய இலக்கியங்களே. 'தேவாரம்', 'திருவாசகம்', 'நாலாயிர திவ்ய பிரபந்தம்',' திருமந்திரம்', 'திருவிசைப்பா', 'திருப்பல்லாண்டு ஆகிய இவைகளே இம்மூன்று நூற்றாண்டுகளிலும் தோன்றிய நூல்கள். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் கம்பன் காப்பியமும் பத்தாம் நூற்றாண்டில் சிந்தாமணியும் பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பெரியபுராணம் எனப்பெறும் திருத்தொண்டர் புராணமும் தோன்றின. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று சிலராலும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று சிலராலும் கூறப்பெறுகிற இரண்டில் ஒரு காலத்தில் காப்பியங்களின் முடிமணியாகிய கம்பராமாயணம் தோன்றிற்று. இந்த நூல் களுள் எவை சமயச் சம்பந்தம் இல்லாதவை? கி.பி. பன்னிரண் டாம் நூற்றாண்டின் பின்னர் நேற்று வரை தோன்றிய நூல்கள் எண்ணிறந்தன. ஆனால், அவற்றுள் பல புற்றீசல் வாழ்வுடையன. பிறந்த உடனேயே இறந்தவை பல. சில ஆண்டுகளில் இறந்தன சில. ஆனால், காலத்தை வென்று எஞ்சிய ஆசிரியர்களில் குமர குருபரரும் சிவப்பிரகாசரும் சிறந்தவர்கள். இவ்விருவருமே சமய இலக்கியங்கள் செய்த வர்கள்.

இவ்விடைக் காலத்தில் தோன்றிய 'ஸ்தல புராணம்', 'உலா', 'பிள்ளைத் தமிழ்', 'தூது', 'கலம்பகம்', 'குறவஞ்சி,

முதலிய நூல்களில் எவை சமயத் தொடர்பு இல்லாதவை? புரட்சி செய்து கவிதையிலும் புரட்சியைப் புகுத்திய கவியரசர் பாரதியாரும் 'பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்' என்று பாடிவிட்டு, அடுத்த அடியிலேயே 'பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்' என்றல்லவா பாடினார். அவ்வாறாயின், சமயம் இல்லை என்று கூறிக்கொண்டு வெளி வரும் நூல்கள் இல்லையா என்று கேட்கலாம். இவ்வாறு கூறும் நூல்கள் அன்று இல்லை; இன்று உண்டுதான். ஆனால், இவை காலத்தை வென்று நிற்குமா என்பது வினா?

தமிழ்மொழியில் தோன்றிய இவ்விலக்கியங்கள் ஒருபுற மிருக்க, 'தொல்காப்பியம்' முதல் 'புறப்பொருள் வெண்பா மாலை' ஈறாக உள்ள இலக்கண நூல்களும், 'சூடாமணி' 'பிங்கலந்தை' நிகண்டுகளும் (அகராதிகள்) சமயத்தொடர் புடையவையே இவை ஒருபுறம் இருக்க, வேற்றுச் சமயத்தவர்கள் இயற்றிய நூல்களும் சமயத் தொடர்புடையன வாகவே உள்ளன. கிருஷ்ணப்பிள்ளை இயற்றிய 'இரக்ஷண்ய யாத்திரீகம்' முதல் உமறுப் புலவர் செய்த 'சீறாப்புராணம்' வரை அனைத்தும் சமய இலக்கியங்களே. அவ்வாறாயின், தமிழ் நூல்களில் சமயத் தொடர்பு இல்லாத நூல்களே இல்லையா என்று கேட்கலாம். இருபதாம் நூற்றாண்டில் சில அரசியல் கொள்கைக்காரர்கள் எழுதியவை தவிர வேறு இல்லை. ஆனால், இவர்கள் எழுதிய நூல்கள் பழைய நூல்கள் போல் காலத்தை வெற்றி கொண்டு நிலைத்து நின்று 'இலக்கியம்' என்ற பெயரைப் பெற முடியுமா? என்றால், காலந்தான் இதற்கு விடை கூற முடியும் ஆனால், இந்நூல்களுள்ளும் பல தாம் தோன்றிய காலத்தில் பெற்ற மதிப்பை நாலு ஐந்து ஆண்டுகளுக்குள் இழந்து விட்டன என்பதைக் காணும்பொழுது பிற்காலத்தில் இவை நிலைத்து நிற்குமா என்ற ஐயம் புலப்படுகிறது

தமிழ் நூல்களில் சமயத் தொடர்பு எவ்வளவு தூரம் இருந்து வந்தது என்பதை இதுவரை கண்டோம். தமிழ்

இலக்கிய உட்கோள் இது என்று அறிந்த பிறகும் மீண்டும் சங்க காலத்திற்குச் செல்வோம்.

## 2 சங்கப் பாடலும் சமயப் பாடலும்

சங்க காலம் என்று கூறப்பெறுகிற காலம் கி.பி. முதல் நூற்றாண்டோடு முடிவடைந்துவிட்டது கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சிலப்பதிகாரமும், அதனை அடுத்து மணி மேகலையும் தோன்றின. இந்த இரண்டு பெருநூல்களுக்குப் பின், ஏறத்தாழ ஐந்நூறு ஆண்டுகள் தமிழ் இலக்கியப் பூங்காவில் சிறந்த மலர் ஒன்றும் பூக்கவில்லை. காரணம் தமிழை ஆதரியாத களப்பிரர் என்ற இனம் தமிழ்நாட்டில் கால்கொண்டு செங்கோல் ஓச்சியமையேயாம். ஏழாம் நூற்றாண்டில் ஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தோன்று கின்றனர். இவர்களை அடுத்தே பெரியாழ்வாரும், அவர் மகளாகிய கோதையாரும் திகழ்கின்றனர். இவர்கள் அனை வரும் தமிழிலக்கியத்திற்குச் சிறந்த நூல்கள் ஆக்கித்தரினும், பழைய சங்க இலக்கிய முறையை விட்டு, முற்றும் புதிய முறையில் கவிதை புனைந்தனர்.

சங்க காலம் என வழங்கும் காலத்தில் சமயம் இருப் பினும், அது பின்னணியிலேயே இருந்து வந்தது. சமயத் துறையில் அநுபவம் பெற்ற பெரியோர்கள் பலர் திகழ்ந் திருந்தாலும், அவர்கள் பெற்ற அநுபவம் அவர்களுடனேயே இருந்துவிட்டது. உலகத்தார் கண்டு பின்பற்றும் வண்ணம் சமயத் துறையில் இலக்கியங்கள் தழைக்கவில்லை. திருமுரு காற்றுப்படையும் பரிபாடலில் சில பாடல்களும் தவிர, கடவுளரைப்பற்றிப் பேசும் நூல் ஒன்றும் தோன்றவில்லை இவ்வளவு பெரிய தமிழ் இலக்கிய உலகில் சமயம் பற்றி மட்டும் பேசக்கூடிய நூலொன்றும் தோன்றாதிருந்தது விந்தையே! அக் காலத்தில் சமயம் என்பது தனிப்பட்ட மக்களின் பண்பாக மிகுதியாக இருப்பினும், கூட்டமாகச்

சமயத்தைப் போற்றும் வழக்கம் குறைவாகவே இருந்திருக்கும்போலும் என்றுகூட நினைக்க இடம் தருகிறது. அவ்வாறு இருந்தமையினாலேதான் பெருநூல் செய்த திருவள்ளுவர், இளங்கோ முதலிய பேராசிரியர்கள் அனைவரும், தத்தம் சமயத்தை வெளிப்படையாகக் கூறாமலே இருந்துவிட்டனர் போலும்! இவ்வகை மரபு அப்பொழுது நிலைபெற்றிருந்தது, சமயச் சகிப்புத் தன்மைக்குச் (Religious tolerence) சிறந்த வாய்ப்பைத் தந்தது எனலாம் இவ்வாறு கூறுவதால் சமய உணர்ச்சியே இல்லாதிருந்த காலம் அது என்ற தவறான முடிவுக்கு வந்துவிடல் ஆகாது. பல சங்கச் செய்யுட்களில் இறை வணக்கம், கடவுளர் பெயர்கள் முதலியவை வருகின்றன. தம் சமயத்தை உயர்த்திப் பேசுதலும், பிற சமயத்தைத் தாழ்த்திப் பேசுதலும் சங்க நூல்களிலும், அதனை அடுத்த சிலப்பதிகாரத்திலும் காணப்பெறாதவை சிலப்பதிகாரத்தில் மாங்காட்டு மறையவன் கூற்று, தன் சமய உயர்வைக் குறிப்பாகக் கூறுவதன்மூலம் பிற்காலச் சமயப் பூசலுக்கு முன்னோடியாக அமைகின்றது. சமயப் பொறையினை வற்புறுத்தற்கே இளங்கோவடிகள் இந் நிகழ்ச்சி அமைத்தார்; எனினும், பின் வரப்போகும் பூசலை அறிமுகம் செய்வதாகவும் அமைந்துள்ளது. இத்தகைய வழக்குக்குப் பிள்ளையார் சுழி இட்டவர் மணிமேகலை ஆசிரியர் சாத்தனாரே ஆவர். அவர் காலம்வரையில் இலக்கியம், சமயப் பிரசாரத்திற்கு இடந் தரவில்லை. இலக்கியத்தில் சில பகுதிகளில் சமயம் இடம் பெற்றதுபோக, சமயத்தைப் பரப்ப இலக்கியத்தை ஒரு கருவியாகச் செய்த நிலைக்குச் சாத்தனாரே முழுப் பொறுப்பாளியாவர். சமயத்தைப் பரப்புவதையே தம் முக்கிய நோக்காகச் சாத்தனார் கொண்டுவிட்டமையால் பிற சமயங்களைக் குறைத்துப் பேசும் நிலை ஏற்பட்டுவிட்டது. பிறகு தோன்றிய நூல்களும் இவ் வழியைப் பின்பற்றத் தொடங்கின.

சங்க காலத்தில் நிலைபெற்றிருந்த தனிப்பட்டவர் போற்றும் சமயம், ஏழாம் நூற்றாண்டில் மெல்ல மறையத்

தொடங்கிற்று. களப்பிரர் ஆட்சியால் துன்புற்ற தமிழர் ஒற்றுமை பெற வேறு வழி இன்மையால் சமயத்தை அடிப்படையாகக் கொண்டு ஒற்றுமை பெற்றார்கள்போலும்! களப்பிரர்மேல் தமிழர்கொண்ட அரசியல் வெறுப்புப் பல வடிவங்களில் வெளிப்பட்டது. வேற்றுநாட்டுச் சரக்கு எதுவாயினும் அதன்மேல் வெறுப்புக்கொள்ளுமாறு செய்தது. கூட்டம் கூட்டமாகச் சமய வழிபாடு செய்தலும், தம் தம் சமயத்தைப் பரப்ப முயல்வதும் வழக்கத்துக்கு வந்தன. ஏழாம் நூற்றாண்டிற்கு முன்பும் பல அடியார்கள் தோன்றி இருப்பினும், கூட்டஞ் சேர்த்து, சமயத்தைப் பரப்ப முன்வந்ததாகத் தெரியவில்லை. சைனமும் பௌத்தமும் தமிழ் நாட்டில் பெற்ற செல்வாக்குக்கு, இவ்விதம் கூட்டமாகச் சேர்ந்து பிரசாரம் செய்தலும் ஒரு காரணமென்று சொல்லலாம். தமிழ் நாட்டில் என்றும் உள்ளனவாய சைவமும் வைணவமும் புதிதாகப் புகுந்த இம் முறையை மேற்கொள்ளத் தொடங்கின. பௌத்தத்தின் பெருமை கூற மணிமேகலை தோன்றியது போல பத்தாம் நூற்றாண்டில் சைனத்தின் பெருமைகூறச் சிந்தாமணி தோன்றியது. தமிழ்நாட்டுப் பெண் ஒருத்தியைக் காப்பியத் தலைவியாக மணிமேகலை எடுத்துக்கொண்டது போல் செய்யாமல், வேற்று மொழியில் கூறப்பெற்ற வரலாற்றைச் சிந்தாமணி கருப்பொருளாக எடுத்துக் கொண்டது. கவிதை முறையிலும், மணிமேகலை சங்க காலத்தில் பெரு வழக்கினதாக இருந்த ஆசிரியப்பாவை மேற்கொள்ள, சிந்தாமணி அதிலும் புதுவழி கண்டது. விருத்தப்பா அதுவரை பெருவழக்காய்த் தமிழ்நாட்டில் நிலவவில்லை. முதன்முதல் ஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் பாடல்களில்தான் விருத்தப்பாக்கள் மிகுதியாகத் தோன்று கின்றன. எனவே, அவற்றை அடுத்துத் தோன்றிய சிந்தாமணி அவ் விருத்தப்பாக்களைக் கொண்டே ஒரு பெருங் காப்பியமாக அமைந்தது.

இந் நிலையில் தமிழ்நாட்டில் தோன்றிய சமயப் புரட்சி யின் தலைவர்களாக ஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் நின்றனர். சைவ சமயத்தைப் பரப்பத் தங்கள் வாழ்க்கை

முழுவதையும் செலவிட்டனர். அந்தக் கொண்டிற்குத் துணையாகத் தங்கள் நெறியான வாழ்க்கை, அருஞ் செயல்கள் என்பவற்றோடு கவிதையையும் ஓர் உறுகருவி யாக அவர்கள் பயன்படுத்தினர். தேவாரப் பதிகங்கள் இறைவன் புகழ்பாடும் பக்திப் பாடல்களாக இருப்பதோடு சிறந்த கவிதைகளாகவும் இலங்குவதைக் காணலாம். ஆன்ம ஒருமைப்பாட்டை உண்டாக்கும் சமயப் பிரசாரத்திற்கு, ஆன்ம ஒருமைப்பாட்டை வளர்க்கும் கவிதை சிறந்த துணை யாவதை அனைவரும் அறிவார்கள். ஆகவே, அவர்கள் காலத்தில் தொடங்கிய இச் சமயப் பரப்பு நோக்கம் சைவ சமயத்தைப் பொறுத்தவரையில் பன்னிரண்டாம் நூற்றாண் டில், திருந்தொண்டர் புராணம் இயற்றிய சேக்கிழாருடன் முடிவடைந்தது என்று கூறலாம்.

சங்கப் பாடல்களும் சேக்கிழார் பாடல்களும் பெரிதும் வேறுபாடு உடையன. சங்கப் பாடல்களில் மனிதப் பண்பே பெரிதும் பேசப்பெற்றது. இதனை அடுத்து இயற்கை, அவ்வியற்கை மனத்தில் எழுப்பும் காட்சிகள் இவையே பெரிதும் இடம் பெற்றன. மேலும், மக்களைப் பற்றிய கவிதை களும், தனிப்பட்ட ஒருவர் வாழ்வில் நடைபெற்ற சிறு செயல் களையோ, பெருஞ்செயல்களையோ குறிப்பனவாய் இருந்தன. பொதுவாக மக்கள் வாழ்க்கையில் காணப்பெறும் குறிக்கோள் சங்கப் பாடல்களில் பேசப்பெற்றது. அக்கால மக்கள் மனம் இவ்வுலக வாழ்க்கையிலேயே பெரிதும் ஈடுபட்டிருந்தது. இகவாழ்வைச் செம்மை செய்து, மகிழ்ச்சியும் அமைதியும் அடையும் வழிகளே சங்கப் பாடல்களில் பெரிதும் இடம் பெற்றன. சமயத் தத்துவப் (Religious philosophy பாடல்கள் அக் காலத்தில் இன்மைக்குச் சங்கப் பாடல்கள் ஒரு பெரிய எடுத்துக்காட்டாகும். நீண்டகாலமாகத் தமிழ்நாட்டில் இலக்கியம் இம் முறையிலேயே வளர்ந்துவிட்டமையின் ஒரு புரட்சி தேவையாக இருந்தது. சங்கப் பாடல்களில் காணப்பெறாத சமயத் தத்துவம் பாடல்களில், போட்டி யிட்டுக்கொண்டு ஏழாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை தமிழ்நாட்டில் குவிந்தன.

சங்க கால மக்கள் வாழ்க்கை முறைக்கும் இடைக்கால (7 — 12 நூற்றாண்டு) மக்கள் வாழ்க்கை முறைக்கும் வேறு பாடு பெரிதும் உண்டு. தமிழ்நாடு, தமிழர் ஆட்சியில் நிலை பெற்றிருந்த அக்காலத்தில், தமிழ் மொழி ஆட்சி செய்த அக்காலத்தில், மக்கள் மனத்தில் நிறைந்திருந்த எக்களிப்பு அவர்கள் கவிதையிலும் இடம்பெற்றது. ஆனால், களப்பிரர், பல்லவர் என்ற வேற்றவர் ஆட்சியில் தமிழ்நாடு வந்தவுடன் இன்பத்தை வெளியே தேட இயலவில்லை· அதனை உள்ளே தேட முயன்றனர் தமிழர். அம் முயற்சியே சமயப் பாடல் களாக முகிழ்க்கலாயின. இவ்வாறு களப்பிரர் வந்து தமிழ் நாடு கொண்டதை மூர்த்தி நாயனார் புராணத்தில் சேக்கிழார்,

**'கானக் கடிசூழ் வடுகக்கரு நாடர் காவல்**
**மானப் படைமன் னன்வலிந்து நிலங்கொள் வானாய்**
**யானைக் குதிரைக் கருவிப்படை வீரர் திரண்ட**
**சேனைக் கடலுங் கொடுதென் திசை நோக்கி வந்தான்'**

(பெ. பு. —மூர்த்தி நாயனார் புராணம், 11.)

என அழகாகக் குறிக்கிறார்.

சங்க கால மக்கள் வாழ்க்கையில், அமைதி ஓரளவு நிலவியது. அக்காலத்து மன்னர்கள் தம்முள் ஓயாது போரிடினும் அவர்கள் பூசல் ஒரு குடும்பத்துள் நடை பெறும் பூசலாகவே இருந்து வந்தது. அப் பூசல்களால் மனத்துன்பம், உடல்துன்பம் நேரிட்டனவே தவிர, மன அமைதிக்கு ஊறுபாடு நேரவில்லை. மேலும் அத்தகைய பூசல்களை வாழ்க்கையில் இன்றியமையாத ஒரு பகுதியாக அவர்கள் ஏற்றுக்கொண்டனர். ஆனால், ஏழாம் நூற்றாண் டுக்குப் பிறகு, இந்நிலை மாறியது. சங்க காலத்தில் ஓயாது தமிழ் மன்னருள் போர் நடைபெற்றாலும் வெற்றிகொண்டு ஒரு நாட்டைப் பிடிந்தவனும் தமிழ் மன்னனே ஆவான். தோற்றவனும் தமிழ் மன்னனேயாவான். வென்றவன் பண்பும் சமயமும், பிடிபட்ட நாட்டினரின் சமயம், பண்பு

ஆகியவற்றுடன் வேறுபட்டவனல்ல; ஆதலின், தோற்ற நாட்டினர் ஓரளவு துன்பம் உறினும் உடனே தங்கள் துன்பத்தை மறந்துவிட்டனர். பழைய ஆட்சிக்கும் புதிய ஆட்சிக்கும் இடையே அவர்கள் வேறுபாடு ஒன்றையும் காண இயலவில்லை. எனவே, அவ்வமைதி அவர் கவிதை யிலும் பிரதிபலிப்பதைக் காண்கிறோம். சங்க காலத் தமிழன் பழுமரம் தேரும் பறவைபோல இன்பம் ஒன்றையே நாடிக் காலத்தைக் கழித்தான். ஆனால் ஏழாம் நூற்றாண்டு இவ்வகை வாழ்க்கையை அடியோடு மாற்றிவிட்டது. பல்லவப் பேரரசு தழைத்துநின்ற அக்காலத்தில் தமிழ்ப் பண்பாட்டில் ஒரு புதிய மாறுதல் கருக்கொள்ளலாயிற்று.

உலகமும் அதிலுள்ள இன்பமும் நிலையாமை உடையன என்பதைத் தமிழன் தன் நாட்டு ஆட்சி மாறுதல்களினா லேயே உணரத் தொடங்கினான். குறிக்கோளோடு உலக இன்பத்தில் தோய்ந்த சங்க கால நிலைமை, இடைக்காலத்தில் மாறி, கேவலம் இன்பம் ஒன்றையே மதிக்கும் நிலை ஏற் பட்டது. குறிக்கோள் தவறிய இன்பம் விரைவில் புளித்து விடுதல் இயற்கையன்றோ? அது புளிக்கவே, எஞ்சியது வெறுப்பு ஒன்றுதான். ஆனால், வெறுப்பு மட்டும் ஆக்கம் தராது. ஆதலின் ஆன்ம ஒருமைப்பாட்டில் தமிழ் மக்கள் விருப்பம் கொள்ளத் தொடங்கினர். அதன் பயனாக, வாழ்க்கை முறையும் குறிக்கோளும் மாறின. அதன் பயனே' சமயத்தில் மீண்டும் தமிழன் அடைக்கலம் புகுந்த செய லாகும். அமைதியை நாடி அலைந்த இவ் இனத்திற்கு. வேற்று நாட்டில் தோன்றிய சமயங்கள் முதலில் சிறப்புடை யனபோலத் தோன்றினாலும், நாளடைவில் வேண்டாதன வாயின. வேற்று நாட்டில் தோன்றிய சமயத்தின் சிறந்த அடிப்படையான கொள்கைகள் எல்லாரும் ஒப்புக் கொள்ளக்கூடியனவாக இருப்பினும், பல இயல்புகள் அச் சமயம் தோன்றிய அந் நாட்டுச் சூழ்நிலைக்கு ஏற்றனவாகவே இருக்கும். அத்தகைய சமயம் மற்றொரு நாட்டில் சென்று நிலைக்க முயலும்பொழுது புதிய நாட்டிற்கு ஏற்பத் தன்

புற இயல்புகளை மாற்றிக் கொள்ளாவிடின் அங்கு நிலை பெறுவது அருமை. இக் காரணத்தினாலேயே தமிழ் நாட்டில் புகுந்த எந்தச் சமயமும், சைவமும், வைணவமும் தாழும்படி இங்கு நீண்ட நாள் நிலைத்துநிற்க இயல வில்லை. அவ்வாறு தமிழ்நாட்டில் புகுந்த புதுச் சமயங் களில் உள்ள சிறப்பியல்புகளைச் சைவமும் வைணவமும் ஏற்றுக்கொண்டன. ஆனால், அச் சமயங்களை அப்படியே முழுதும் ஏற்றுக்கொள்ளவில்லை இந்த நாடு.

சங்க காலத்திலிருந்து, தமிழன், இன்பத்தையும் அதன் மறுதலையான துன்பத்தையும் ஏற்றுக்கொண்டு, ஒன்றுக்கு மகிழ்தலும் மற்றொன்றுக்கு வருந்துதலும் ஆகிய இயல்புகள் கூடுமானவரையில் தன் வாழ்க்கையில் புகாதவாறு செய் தான். இந்த நடுநிலையே சிறப்புடையது என்ற கருத்துடைய வனாதலால் இன்பத்தை வெறுத்து ஒதுக்குவதே வீடு பேற்றுக்கு வழி என்று அவன் நம்பவில்லை. ஆதலின், அவன் கண்ட கடவுளையும், பெண், ஆண் வடிவாகக் கண்டான். இக் கொள்கை தமிழினத்தில் நன்கு ஊறிவிட்ட மையின் இதற்குப் புறம்பான எதையும் ஏற்றுக்கொள்ள அவன் விரும்பவில்லை இறைவனையே பெண் வடிவில் கண்ட தமிழன், அப் பெண் இனத்தைத் தாழ்ந்தது என்று கருதும் எக் கொள்கையையும் ஆதரிக்க விரும்ப வில்லை. இந்த அடிப்படையில்தான் ‘முக்திக்கு நாயகி ஓர் பெண்பிள்ளை’ என்று திருமந்திரமும் பாடிச் செல்கிறது.

இவற்றை யெல்லாம் அடிப்படையாகக் கொண்டு தோன்றிய சமயப் புரட்சியின் சிகரந்தான் திருத்தொண்டர். புராணமாகும். இதனை ஆக்கிய பெரியார், சோழப் பேரரசில் முதல்மந்திரியாக இருந்த சேக்கிழார் ஆவர். அவரது கவிதை வன்மை முதலியன பெருங் காப்பிய ஆசிரியர் எவர்க்கும் சளையாதவை. ஏனைய ஆசிரியர்கள் செய்த செயலைக்காட்டிலும் அரிய செயல் ஒன்றையும் அவர் செய் தார். அதுதான் பக்திச்சுவைப் பிழம்பாக நிற்கும் காப்பி யத்தைப் பாடியதாகும்.

# 3. இலக்கிய அடிப்படை

திருத்தொண்டர் புராணத்தை இயற்றிய சேக்கிழார் 'அநபாயன்' என்ற சிறப்புப் பெயர் பூண்ட இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவர். (கி.பி. 1113-1250) என்பது ஆராய்ச்சியாளர் கண்ட முடிவாகும். பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இவ்வளவு சிறந்த காப்பியம் ஒன்று தமிழ்நாட்டில் தோன்றுவதற்கு என்ன இலக்கிய அடிப்படை இருந்தது என்பதைக் காண்டல்வேண்டும்.

எவ்வளவு சிறந்த இலக்கியமாயினும், ஒன்று தோன்ற வேண்டுமாயின், அது தோன்றும் காலம் அந்தத் தோற்றத்திற்கு உதவி செய்வதாகவே இருக்கும். பன்னிரண்டாம் நூற்றாண்டு இத்தகைய இலக்கியம் தோன்றத்தக்க நிலைக்களனாக இருந்ததா என்று ஆராய வேண்டும். முற்பகுதியிற் கூறியவற்றிலிருந்து ஏழாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் தொடங்கிய சமயப் புரட்சியின் முடிவில் எழுந்ததே இந்நூல் என்பது நன்கு விளங்கும். அந்தப் புரட்சி எவ்வளவு வலிவுடையதாக அமைந்திருந்தது என்பதற்குக் கீழ் வரும் வரலாறு சான்று கூறும்.

கூற்றுவ நாயனார் என்பவர் திருத்தொண்டத் தொகை பாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகளால் போற்றப் பெற்றவர்தாம். என்றாலும், அவர் களப்பிரர் இனத்தைச் சேர்ந்தவர். 'களந்தை முதல்வனார்' என்று பெரியபுராணம் இவரைக் கூறுகிறது. தமிழ் நாட்டை வெற்றி கொண்ட அவர், தில்லைவாழ் அந்தணர்களை நாடித் தமக்கு முடிசூட்ட வேண்டினார். ஆனால், அவர்கள் சோழர்களைத் தவிர வேறு யாருக்கும் முடிசூட்ட இயலாதென மறுத்துவிட்டாலும், அவருடைய வலிமைக்கு அஞ்சிய அவர்கள் சேர நாட்டிற்கு ஓடிவிட்டார்கள். சிறந்த சிவபக்தர் என்று அறிந்திருந்தும், களப்பிரர் என்ற காரணத்தால் தில்லை அந்தணர் அவருக்கு முடி கவிக்க மறுத்தார்கள் என்றால், நாட்டு மக்களின் மன நிலை எவ்வாறு இருந்ததென்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

மல்லல் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழ்அந் தணர்தம்மை வேண்ட அவரும் செம்பியர்தம்
தொல்லை நீடுங் குலமுத லோர்க்(கு) அன்றிச் சூட்டோம்
முடி' என்று
நல்கார் ஆகிச் சேரலன்றன் மலைநா டு அணைய நண்ணுவார்.

(பெ. பு —கூற்றுவ நாயனார், 4)

[மவுலி-கிரீடம்; செம்பியர்-சோழர்]

இவ்வித அரசியல் சூழ்நிலையே மக்கள் மனத்தில் புரட்சிக்குக் காரணமாக அமைந்தது. மக்கள் தம் மனத்தில் அமைதியைத் தேட இலக்கியத்தை நாடினர். அவர்களை ஒன்று சேர்க்கும் கருவியாகச் சமயத் தலைவர்கள் கவிதையை மேற்கொண்டனர். இந்த நிகழ்ச்சிக்கு இரண்டு நூற்றாண்டின் பின்னர்த் தோன்றிய ஆதிசங்கரர் தருக்கத்தை அடிப்படையாகக் கொண்டன்றோ தமது வேதாந்த சமயத்தை நிறுவினார்? சங்கரர் காலத்திற்குள் மக்கள் மனநிலை மாறி விட்டது என்றாலும், ஏழாம் நூற்றாண்டில் சிறந்த கருவியாக அமைந்து விளங்கியது கவிதையே. காரணம் சங்க கால நூல்களுக்குப் பின்னர், பெரு நூல் ஒன்றும் களப்பிரர் ஆட்சியில் தோன்றவில்லை. ஆகவே, பழமையைப் போற்ற விரும்பிய தமிழர் பழமை சிறந்ததற்குக் காரணமான கவிதையை மீண்டும் உயிர்ப்பித்தனர்.

அந்தக் கவிதையிலும் ஒரு பெரிய மாறுதல் நிகழ்ந்தது இக் காலத்தில்! சங்க காலத்தில் இயல், இசை, நாடகம் என முத்தமிழாகி வளர்ந்த தமிழ்மொழி, களப்பிரர் ஆட்சியில் மங்கிவிட்டது ஆனால், ஏழாம் நூற்றாண்டில் மறுபடியும் தலையெடுக்கும்பொழுது, தனது மூன்று வடிவத்திற்குப் பதிலாக இயல் வடிவில் மட்டுமே தோன்றியது. இசையும் நாடகமும் பழைய முறையில் மீண்டும் தலை எடுக்கவே இல்லை. சங்க காலத்தில், இம் மூவகைத் தமிழும் நன்கு வளர்ச்சி பெற்று வந்தமையாலேதான் இயற்றமிழ்ப் பாடல் களில் இசைக்குத் தலைமை இடம் தரவில்லை. பல்வகைப் பாடல்கள் தொல்காப்பியனாரால் குறிக்கப்படினும் பத்துப்

பாட்டு, எட்டுத்தொகை நூல்களுள் ஆசிரியம், கலி என்ற இருவகைப் பாடல்களைத் தவிர ஏனையவற்றைக் காண இயலவில்லை. இசைத் தமிழ் வேறாக வளர்ந்த காலத்தில், இயற்றமிழ்க் கவிதைகள் இசையாடை போர்த்துப் பல்வேறு வகையில் காட்சி வழங்கும் நிலை தேவைப்படவில்லை. பெண் குழந்தை இல்லாதவர்கள் தாமே, தம் ஆண் குழந்தைகட்குப் பெண் வேடம் இட்டுக்களிக்கின்றனர்? ஆனால், இந்நிலை, ஏழாம் நூற்றாண்டில் மறைந்து விட்டமையால் இயற்றமிழிலேயே இசை இடம் பெறும் தேவை பெரிதாயிற்று. அதனால்தான் இசைக்கு இடம் தரும் வன்மை பெற்ற விருத்தப்பா அரங்கமேறித் தன் முன்னோராய ஆசிரியம், கலி முதலியவற்றைத் தலைகாட்டாமற் செய்துவிட்டது. மேலும், மக்களின் வளர்ச்சிக்கு ஏற்பப் பல்வேறு உணர்ச்சிகள், கலப்பு உணர்வுகள் (mixed emotions) தோன்றலாயின. இவற்றை வெளியிட இசை இன்றியமையாததாயிற்று. நான்கு சீரை எல்லையாக உடைய ஆசிரியம் கலப்பு உணர்வுகளை வெளியிடத் தகுந்த கருவியன்று என்பது அனைவரும் அறிந்ததே. ஆதலின், விருத்தப்பாவே பெருவழக்கினதாய் ஆளப்பெற்றது. விருத்தப்பாக்களை முதன் முதலாக முழுதும் பயன்படுத்திக் காப்பியம் செய்த பெருமை 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கம்பனுக்கே உரியது. பாடுவதற்குரிய எல்லாப் பொருள்களைப் பற்றியும் பாடல்கள் தோன்றலாம்; என்றாலும் மக்களைப் பற்றிப் பாடும் பாடல்களே எல்லா மொழி இலக்கியங்களிலும் மிக்க சிறப்புற்று வளம் பெற்றன. அதன் காரணம் ஆராயப்பட வேண்டிய இடம் இது அன்று. சங்கப் பாடல்கள் அனைத்தும் மக்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சி பற்றிப் பாடப் பெற்றவை. தனி மனிதனுடைய முழு வாழ்க்கையையும் அடிப்படையாகக் கொண்டு தோன்றிய முதல் நூல் சிலப்பதிகாரமேயாகும். அதிலும், கோவலன் கண்ணகியினுடைய பிறப்பு, வளர்ப்பு முதலியனபற்றி ஒன்றும் கூறாமல், காப்பியம், திருமணத்தில் தொடங்கப்பெறுகிறது. அதனை அடுத்துத் தோன்றிய மணிமேகலையும் அத்தகையதே. இம்முறைக்கு மாறாக, காப்பியத்

தலைவன் பிறப்பு வளர்ப்பில் தொடங்கிப் பாடப் பெற்ற முதல் காப்பியம் கம்பராமாயணமேயாகும். அதனை அடுத்துத் தோன்றிய பெரிய புராணமும் இம்முறையை மேற்கொண்டது. ஆனால், கம்பன் காலத்தில் காப்பிய அமைதி இன்னவாறு இருத்தல் வேண்டும் என்று விரிவாகக் கூறும் இலக்கண நூல் ஒன்றும் இல்லை. இத்தகைய காப்பிய முறை தொல்காப்பிய னாரால் நினைக்கவும் படாதது ஆதலினால், தொல்காப்பியத் திலும் அதன் இலக்கணம், பேசப்பெறவில்லை. எவ்வளவு தான் நச்சினார்க்கினியர் தொல்காப்பிய அடிப்படையில் பின்னர்த் தோன்றிய சிந்தாமணியை அமைக்க விரும்பி அதற்கேற்ப உரை வகுத்தாலும், சிந்தாமணி போன்ற ஒரு காப்பியத்தைத் தொல்காப்பியர் கனவிலும் கருதினவரல்லர். எனவே, வடமொழி வழக்குப்பற்றியே நாட்டுப் படலம், நகரப் படலம் முதலியவற்றுடன் தேவர் சிந்தாமணியைப் பாடி இருப்பர் என்று தோன்றுகிறது. என்றாலும் நாட்டுப்படலம், நகரப் படலம் என்பன போன்ற பெயர்களையே இடுவதற்குத் தேவரும் விரும்பாதவராய், நர்மகள் இகம்பகம் என்ற பகுதி யிலேயே இவற்றை அமைத்துப் பாடிவிட்டார். அவருக்கு இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்வந்த சேக்கிழார் ஒருபடி முன் சென்று நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு என்ற தலைப்பு கள் தந்து தேவர் வழியைப் பின்பற்றினார். இது தமிழ் மொழியில் புதுமுறைக் காப்பியம் தோன்றி வளர்ந்த முறையை நன்கு அறிவிக்கின்றது.

நாட்டுவளங் கூறும் பகுதி, புலவனுடைய வன்மைக்கு ஏற்றபடி 'சிறப்பாக அமையும். திருத்தக்கதேவர் தாம் கூறிய நாட்டுவளத்தில் பெரிதும் மரபு பற்றிய வளங்களையே கூறிப் போனார். ஆனால், தாம் மேற்கொண்ட சரிதம் அரசனைப் பற்றியது என்பதை மறவாதவராய் இறுதிப் பாடலில், பொருளின் பெருமை கூறி, அது செய்யச் சிறந்தவிடம் ஏமாங்கத நாடு எனக் கூறினார்.

நற்றவம் செய்வார்க் கிடம்
தவம் செய்வார்க்கு மஃதிடம்
நற்பொருள் செய்வார்க் கிடம்
பொருள் செய்வார்க்கு மஃதிடம்
வெற்றஇன் மம்வியை விப்பான்
விண்ணுவந்து வீழ்ந்தென
மற்ற நாடு வட்டமாக
வைகுமற்ற நாடரோ

சேக்கிழார் தாம் மேற்கொண்ட நூலின் இயல்புக்கு ஏற்றபடியே ஆதியிலிருந்து அந்தம் வரையில் நாட்டுப் படலம் கூறுகிறார். காவிரியாறு வளமூட்டும் இயல்புக்கு உவமைகூற வருகிறார் ஆசிரியர். 'அண்ணல் பாகத்தை ஆளுடைய நாயகி உள்நெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது' என்று கூறுமுகத்தால் தமது புலமைச் சிறப்பை வெளியிடுகிறார். நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்பு இரண்டையும், தாம் பின்னர்க் கூறப்போகும் வரலாறுகள் நடைபெறுவதற்கு ஏற்ற நிலைக்களமாக அமையும்படி சேக்கிழார் மிக அழகாகக் கூறுகிறார். இதன் விரிவைப் பிறகு காண்போம்

சங்க காலப் பாடல்களும், ஏழாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுவரையில் தோன்றிய சமயப் பாடல்களும் தனி மனிதன் பெறும் உணர்ச்சியை வெளியிடும் பாடல்களாகவே பெரும்பான்மையும் இருந்தன. இவற்றை மேல் நாட்டார் உணர்ச்சி வெளியீட்டு இலக்கியம் (Subjective literature) என்று கூறுவர். இதனை அடுத்துத் தோன்றிய பகுப்பில் கம்பராமாயணம், சிந்தாமணி, பெரியபுராணம், முதலியவை விளங்குகின்றன. இவற்றில் மனிதன் தன்னுள் தான் மூழ்கி அநுபவங்களைக் காணாமல், புற உலகில் சென்று பெற்ற அநுபவங்களைக் குறிக்க முற்படுகிறான். இந்த வளர்ச்சி இம்மூன்று காப்பியங்களிலும் நன்கு வளர்ந்திருக்கக் காண்கிறோம். இத்தகைய முயற்சிக்கு அடிகோலியவர் இளங்கோவடிகள். ஆனால், சிலப்பதிகாரத்தில் வரும்

பாத்திரங்கள். பெருங்காப்பிய ஆசிரியர் பெரிதும் விரும்பும் பாத்திரங்கள் அல்ல. நடந்த ஒன்றைக் கூறவேண்டிய கடப்பாடு பெற்ற ஆசிரியர், குணாதிசயங்களை எடுத்துக் காட்டுவதற்காகவே பாத்திரங்களைப் படைக்கும் உரிமை அற்றவராகிவிடுகிறார். அதனால் பெருங்காப்பியத்தில் காண வேண்டிய உணர்ச்சிப் பெருக்கில் சில குறைந்தே காணப் பெறுகின்றன. இக் குறைகளை முழுதும் போக்கிக் காப்பியஞ் செய்தவன் கம்பனேயாவான். எனவே, திருத்தொண்டர் புராணம் தமிழ்நாட்டில் வளர்ந்த இலக்கியப் பெருக்கில் ஒரு சிறந்த உறுப்பாகவே அமைந்துவிடுகிறது.

காப்பியம் என்றாலே, அதில் தக்கதோர் இடத்தை வருணனைப் பகுதி பெற்றுவிடும். கவிதைக்கலை நன்கு தழைத்த காலத்தில் காப்பியம் தோன்ற ஆரம்பித்தமையால் வருணனைப் பகுதி மிகுதியாகக் காப்பியங்களில் இடம் பெற்றது. இயற்கை பற்றிக் கூறும் வருணனைகூடக் காலப் போக்கில் மாறுபடலாயிற்று, பத்துப்பாட்டில் ஒன்றான குறிஞ்சிப்பாட்டில் நூற்றுக்கணக்கான பூக்கள் குறிக்கப் பெறினும் அவை அகராதிபோல் அடுக்கப்பெற்றுள்ளன. இப் பூக்களின் பெயர்கூற வந்தாரே தவிர ஆசிரியர் இவ்விடத்தில் வருணனை பேச வரவில்லை என்பது உண்மைதான். ஆனால், மணிமேகலையில் மலர்வனம் புக்க காதையின் இறுதிப் பகுதி இவ்வாறே மலர்களையும் மலர்ச் செடிகளையும் கூறினும், தனி அழகு பெற்ற கவிதையால் புனையப் பெற்றுள்ளது. இதேபோல் பிற்கால இலக்கியங்கள் வருணனையை ஒரு தனிக் கலையாக வளர்த்துள்ளன. வருணிக்கப்பெறும் பொருள்களுள் பெண்ணும் ஒன்று. பெண்ணை வருணிப்பதில் சிந்தாமணியாசிரியர் மிகக் கை தேர்ந்தவர். பல இடங்களில் அளவுக்கு மிஞ்சிய வருணனையைத்தந்து கற்பவர் மனத்தைக் கலங்க அடிக்கும் இயல்பை அவர்பால் காணலாம். ஆனால், இந்தப் பிழையைச் சேக்கிழார் நீக்கிவிடுகிறார். காப்பியம் என்ற முறையில் சேக்கிழாரும் பெண் வருணனை கூறினும், தம் நூலின்

பெருமைக்கும், அமைதிக்கும் ஏற்பவே அந்த வருணனையை அளவுக்குள் நிறுத்திக்கொள்கிறார்.

இவற்றையெல்லாம் கொண்டு நோக்கின், சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம், தமிழ்நாட்டின் காப்பிய வளர்ச்சியின் ஒரு சிறந்த பகுதி என்பது நன்கு விளங்கும். ஆனால், புராணம் என்று பெயர் பெற்ற காரணத்தால்போலும் இன்று இக் காப்பியத்தை ஏனைய காப்பியங்களைப்போல் போற்றுவார் குறைவாக இருக்கின்றனர். 'பல்வேறு சரிதங் கூறும் இதனைக் காப்பியமாகக் கூறல் இயலுமா?' என்ற ஐயத்திற்கு விடை கூறுவார் போன்று சேக்கிழார் தடுத்தாட்கொண்ட புராணத்தின் இறுதியில், தமது காப்பியத் தலைவராகிய நம்பி ஆரூரர் திருத்தொண்டத் தொகை பாடிய சந்தர்ப்பத்துடன் அப் பகுதியை முடித்துக்கொள்கிறார். மேலும், அவர் கூறியனவற்றை விரித்துக் கூறுகிறேன் என்று கூறி, ஏனைய சரிதங்களை இடையே கூறத் தொடங்குகிறார்.

இதற்குமுன் யாரும் மேற்கொள்ளாத முறையில் இவர் காப்பியம் செய்தாலும், தமக்கு முன்னர்த் தோன்றிய நூல்களையெல்லாம் பழுதறக் கற்றுத் தேர்ந்துள்ளார் என்பது, இக் காப்பியத்தைக் கற்பார் அறியாமல் இருக்க இயலாது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஒவ்வோர் அடியில்தானே ஒவ்வோர் அடியாரைக் குறிக்கிறார்? அவ்வாறு இருக்க, அவர் சரிதத்தைக் கூறுகையில் இடைப்பிறவரலாகப் பிற சரிதம் கூறும் இந்நூலைக் காப்பியம் என்று கூறல் பொருந்துமா என்று கேட்பாரும் உண்டு. திருத்தொண்டத் தொகையை யன்றிக் கற்பார் அடியார்களில் ஒவ்வொருவரையும் பெயரளவில் சுந்தரர் குறிப்பிட்டுச் செல்கிறார் என்று நினைத்துவிட மாட்டார்கள். ஒவ்வோர் அடியாருடைய சரித்திரத்தையும் நன்றாக மனத்துட்கொண்டு. அச் சரிதத்தைப் பருப்பொருளாக நோக்குவார் என்ன கருத்துக் கொள்ளமுடியுமோ அதனை அவ்வடியார்க்கு அடை மொழிகளாகப் பெய்தே சுந்தரர் திருத்தொண்டத்தொகை பாடுகிறார். 'இல்லையே

என்னாத இயற்பகை', 'வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருள்' என்பன போன்றவை அவ்வந் நாயனாரின் வாழ்க்கையில் உயிர்நாடியாக இருக்கும் பகுதியைப் புலப்படுத்துகின்றன.

இன்னும் சில இடங்களில் பருப்பொருளாகச் சரிதத்தைக் கேட்பவர் தவறான சில முடிவுகட்கும் வருதல்கூடும். மெய்ப்பொருள் நாயனாரின் வரலாற்றைக் கேட்டவுடன் முத்திநாதன் என்ற பகைவனால் வஞ்சகமாக வெல்லப்பட்டவர் என்றும், கண்ணப்பர் என்றவுடன் படிப்பில்லாத வேடர் என்றும், தண்டியடிகள் என்றவுடன் குருடர் என்றும் நினைவு தோன்றுதல் இயற்கையேயாகும். தொகை பாடிய சுந்தரர் இச் சரிதங்களை நினைவுகூர்ந்து பாடினதுடன், இத்தகைய முடிவுகள் மனத்தில் வராமல் இருக்கத் தக்கபடி அடைமொழிகளை இவ்வடியார்களுக்குக் கூறிச் செல்லுதல் வியக்கத் தகுந்தது. 'வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருள்' என்று சுந்தரர் கூறினதைக் காண்க. படியாத வேடராகிய கண்ணப்பரை, 'கலைமலிந்த சீர் நம்பி கண்ணப்பர்' என்றும் குருடராகிய தண்டியடிகளை, 'நாட்டமிகு தண்டி' என்றும் சுந்தரர் குறித்துச் சொல்வது எதனை அறிவுறுத்துகின்றது?[1] சுந்தரர் திருத்தொண்டத் தொகையைச் சாதாரணமாகப் பாடவில்லை என்றும், இவ்வடியாருள் சிலரைத் தேவாசிரிய மண்டபத்தில் அவர் சந்தித்த செயல் அவருடைய வாழ்க்கையைத் திசைமாற்றித் திருப்பும் சிறப்பு வாய்ந்தது என்றும், அவர்கள் ஒவ்வொருவருடைய வரலாற்றையும் சுந்தரர் நின்று நினைந்து பாடுகிறார் என்றும் நினைக்க இடந்தருகின்றன. தம் காப்பியத் தலைவரின் வாழ்க்கைத் திருப்பத்திற்குக் காரணமான இவர்கள் வரலாற்றைச் சேக்கிழார் கூறினதில் அவர் இயற்றிய காப்பியத்தின் இயல்பு குறைந்துவிடாமை காண்க. மேலும், ஏனைய பெரியோர்கள் போல் சுந்தரரும் தம் ஆன்ம முன்னேற்றத்தை மட்டும் கருதிப் போய் இருப்பாரேல் பொதுவாகத்தமிழ் உலகும்

1 இக் கருத்தை 40 ஆண்டுகட்கு முன்னர்க் கூறியவர் என் தந்தையாராவார்.

சிறப்பாகச் சைவ உலகும் இப் பெரியோர்களை அறிய முடியாமல் போயிருக்குமன்றோ? இது கருதியேதான் சேக்கிழார் ஒவ்வொரு சருக்க முடிவிலும் காப்பியத் தலைவராகிய சுந்தரருக்கு வணக்கம் செலுத்துகிறார். 'ஈசன் அடியார் பெருமையினை எல்லா உலகுந் தொழுதேத்த......திருத் தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்' என்று அவரைச் சேக்கிழார் பாராட்டுகிறார்.

பல வகையாலும் நோக்குமிடத்துச் சேக்கிழார் புதிய வழியைத் தமக்கென வகுத்துக்கொண்டே இக் காப்பியம் செய்கிறார் என்பது நன்கு விளங்கும். காப்பியஞ் செய்தலே தமிழ் இலக்கியத்தில் புதிய மரபு என்றால், சேக்கிழார் இயற்றிய காப்பியம் அதிலும் புதுமை விளைக்கும் நெறியில் எழுந்தது. திருத்தக்கதேவரின் காப்பியத்தில் பல்வகைச் சுவையும் ஒவ்வோர் அளவுக்கு நிறைந்திருப்பினும் இன்பச் சுவை மிக்கிருப்பதை அறிவோம். இதன் எதிராக உலகியல் இன்பத்தை நாடி அடைந்து, அது புளித்துவிட்ட தமிழனின் மறுமலர்ச்சிக்கு எடுத்துக்காட்டாக இலங்குவது சேக்கிழார் காப்பியம். எனவே, அதில் பக்திச்சுவை மிகுதியாகக் காணப்படுகிறது. இங்ஙனம் புதிய வழியைத் தமக்கெனச் சேக்கிழார் வகுத்துக்கொண்டாலும் ஓரளவு காலத்தை ஒட்டிய கருத்துகளுக்கு அவர் ஆளாகாமல் இல்லை.

சுந்தரமூர்த்திகள் திருத்தொண்டத்தொகை, தமிழ் நாட்டில் தேசிய இயக்கத்தின் முடிபாகும். இக் கருத்தைப் பின்னர் விரிவாக ஆராய்வோம். அதனை நன்கு உணர்ந் திருந்தும், நூலின் பிற்பகுதியில் விரிவாகப் பாடியும் தம் கருத்தை விளக்கிய சேக்கிழார் கலைமரபை ஒட்டிப்போலும் உபமன்யு முனிவர் கதையைச் சேர்த்திருக்கிறார். தாம் செய்த இலக்கியம் நிலைப்பதற்கு இவை எல்லாம் இன்றியமை யாதன என அவர் நினைத்தார்போலும்.

சங்க காலத்தில் நிலவிய உணரவுக் கவிதை மறைந்து, வேற்று வடிவம் கொண்ட இடைக்காலத்தில் சிறந்து நின்ற

இளங்கோ, சாத்தனார், திருத்தக்கதேவர், சேக்கிழார், கம்பர் என்ற இவர் ஐவரும் இப் புதுமுறைக் கவிதையை வளர்த்திருக்கின்றனர். இவருள் இளங்கோவும் சாத்தனாரும் வாழ்க்கையை உள்ளவாறே கண்டு கூறும் கவிஞர் என்று கூறலாம். தேவர், உணர்வுக் கவிஞர் (Romantic Poet) என்று அழைப்பதற்குரியவர், சேக்கிழார் வாழ்க்கைத் தத்துவத்தின் அடிப்படையையும், அதன் பயனையும் அறிந்து கூறிய கவிஞர் என்று கூறலாம். கம்பரை இலக்கியக் கவிஞர் எனக் கூறலாம். முன்னையோர் இருவரும் பொருள்கள் உள்ள நிலையையும், தேவரும் கம்பரும் அவை எவ்விதம் இருக்கவேண்டும் என்று நாம் விரும்புகிறோமோ அந்த நிலையையும், சேக்கிழார், பொருள்கள் எவ்வாறு இருந்தால் நலம் பயக்குமோ அந்த நிலையையும் கூறும் கவிஞர்கள் ஆவர். கற்பனை என்பது இப் புலவர் பெருமக்கள் ஐவருக்கும் உரிமையாயினும், அக் கற்பனை பல்வேறு துறை களில் வேலை செய்திருக்கிறது. முதற் கவிஞர் இருவருக்கும் கற்பனை காலத்தோடு ஒட்டிய பொருள்களிலும் புதியன புனைவதிலும் பயன்பட்டிருக்கிறது. தேவருக்கும் கம்பருக்கும் அழகிலும் வியப்பிலும் அனுபவத்தைத் தோற்றுவிக்க இக் கற்பனை பயன்பட்டிருக்கிறது. சேக்கிழாருக்கு உயர்ந்த ஆன்ம முன்னேற்றத்தில் இது பயன்பட்டிருக்கிறது.

இளங்கோவுக்கு ஆழமும், சாத்தனாருக்கு வியப்பும், தேவருக்கு இன்பமும், சேக்கிழாருக்கு ஆன்ம ஒருமைப்பாடும் கம்பருக்கு இவை அனைத்தும் சிறப்பியல்புகளாக அமைந் துள்ளன.

## 4. தேசீய இலக்கியம்

ஏழாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் தோன்றிய சமயப் புரட்சியின் முடிபே பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற் பகுதியில் பெரிய புராணமாக முகிழ்த்தது என்று முன்னர்க் கண்டோம். ஒரு குறிப்பிட்ட கால எல்லையில், குறிப்பிட்ட

கருத்தின் முடிபாக இந்நூல் தோன்றிற்று என்ற காரணத்தால், பெரிய புராணம், முன்னும் பின்னும் தொடர்பற்றுத் தமிழ் இலக்கிய உலகில் ஒற்றையாக நிற்கிறதுபோலும் என்று கருதி விடவேண்டா. சிறந்த இலக்கியத்தை ஆக்கும் கலைஞன் தன் இனத்திலிருந்தும் காலத்திலிருந்தும் விடுபட்டு நிற்பவன் அல்லன். அவனுக்கு முன்னர் உள்ள காலத்தோடும் பின்னர் வரப்போகும் காலத்தோடும் தொடர்பு கொண்டிருப்பான். அவன் காலத்தில் வாழும் மக்களின் சிறந்த பண்பாடுகளை எடுத்துக் கூறும் ஆசிரியனும் ஆவான். அவன் இந்தத் தொடர்பு காரணமாக அவன் காலத்தில் வாழும் ஏனைய கலைஞர்களோடும் நாம் தொடர்புகொள்ள நேரிடுகிறது.

இரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய சிலப்பதிகாரத்திலிருந்து கம்பராமாயணம் வரையில் தோன்றிய காப்பியங்களை எடுத்து ஆராய்ந்தால், மேலாகக் காணப்பெறும் பல வேற்றுமைகள் போக, ஆழத்தில் உள்ள ஒற்றுமையும் நன்கு தெரியும். காரணம், இந்நூல்கள் நிலைத்த தமிழ் மரபை அடிப்படையில் கொண்டு, தமிழ் மரபு அறிந்த கலைஞர்களால் செய்யப் பெற்றமையேயாகும். பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய மூன்று பெருநூல்கள் சமயச் சார்புடனேயே தோன்றின. மூன்று பெரும் புலவர்கள் இந் நூற்றாண்டில் வாழ்ந்தனர். சேக்கிழாரும் கம்பரும் முறையே பெரியபுராணத்தையும் இராமாயணத்தையும் இயற்றினர். கம்பருக்குச் சற்று முன்னோ அன்றிப் பின்னோ தோன்றிய ஒட்டக்கூத்தர் தம் பல்வேறு நூல்களுக்கும் இடையே செய்த அரும்பெரும் நூல் தக்கயாகப் பரணியாகும். 'மூவருலா' பாடித் தம் மன்னரைச் சிறப்பித்த ஒட்டக்கூத்தர், தம் சிறந்த இலக்கியமாகிய பரணிக்கு, சிவபெருமான் கதைகளில் ஒன்றை எடுத்துக் கொண்டது ஆராய்தற்குரியது. காலத்தின் வேகமும் சூழ்நிலையும் கூடியே கூத்தரைத் 'தக்கயாகப் பரணி' பாடுமாறு செய்தது என்று கூறல் மிகையாகாது.

சங்க கால இலக்கியங்களில் திருமுருகாற்றுப்படை காணப்பெறுகிறது. சிலப்பதிகாரத்திலும் இறைவன் பெருமையும் அடியார் பெருமையும் பேசப்படுகின்றன. மணிமேகலையிலும் புத்ததேவன் பெருமையும் சமய வாழ்க்கையின் இன்றியமையாமையும் விரிவாகப் பேசப்படுகின்றன. சீவக சிந்தாமணி இன்பத்தை அளவுமீறிக் கூறினாலும் இடை இடையேயும் இறுதியிலும் சமய வாழ்க்கை பற்றிப் பேசியே நூலை முடிகிறது. பெரிய புராணமும், இராமாயணமும், தக்கயாகப் பரணியும் இவைபற்றியே பேசுகின்றன. இவை பல்வேறு சமயங்கள் பற்றிப் பேசுவது உண்மைதான். ஆனாலும், இவற்றிடையே உள்ள பொதுத் தன்மையைக் காணாமல் இருக்க இயலாது. தமிழ் இலக்கிய வரலாற்றைக் கற்பார் இப் பொதுத் தன்மையை அறிவதோடு இரண்டு சிறந்த உண்மைகளையும் அறிதல் வேண்டும். மிகப் பழங் காலந்தொட்டு இலக்கியத்தில் தொடர்ந்து காணப்பெறும் இதனையே தமிழ் இனத்தின் 'தேசீய மனப்பான்மை' (National trend) என்று கூறுகிறோம்.

ஒரு நாட்டின் தேசீய இலக்கியம் என்றால் என்ன? கிரேக்கம், ஆங்கிலம், ஃபிரெஞ்சு முதலிய மொழிகளில் தோன்றிய சில இலக்கியங்களை அந்நாட்டின் தேசீய இலக்கியம் என்று கூறினவுடன், அம் மொழி பேசும் தேசத்தில் அம் மொழியில் தோன்றிய இலக்கியங்கள் போலும் என்று பொருள்கொள்வது தவறு. ஒரு தேசத்தின் தேசீய இலக்கியம் என்பது, ஒரு குறிப்பிட்ட கால எல்லையில் அத் தேசத்தில் தோன்றிய இலக்கியங்களை மட்டும் குறிப்பதன்று. அத் தேச மக்களின் நாகரிகம், மனநிலை, பண்பாடு இவற்றையும், கால தேச வர்த்தமானங்களில் அவை பெற்ற மாறுதலையும் குறிப்பவையே தேசீய இலக்கியம் எனப்பெறும். இவர்களுள் ஒரு தனிப்பட்ட கலைஞன் முற்றும் புதுவழி வகுத்துக்கொண்டு சென்றிருக்கலாம். தான் ஆக்கும் கலையின் சிறப்பியல்புக்கு ஏற்ப ஒவ்வோர் சமயத்தில், ஒரு தனிப்பட்ட கலைஞன் அதுவரை அவன் நாட்டார் மேற்கொண்ட பழைய வழிகளை விட்டுப் புதுமுறையில் தன் கலையை ஆக்கிச் செல்வதையே

இவ்வாறு குறிக்கிறோம். சேக்கிழார் அவ்வாறு சென்றவர் தாம். என்றாலும் தமிழ் இனத்தின் சிறப்பியல்புகள் அவருடைய இலக்கியத்தில் இடம் பெறுகின்றன.

கிரேக்க தேசீய மனப்பான்மை என்று கூறியவுடன், கிரேக்கர்கள் அனைவரும் ஒன்றாகவே நினைத்தவர்கள்; அவர்கள் நினைவை அவர்கள் இலக்கியம் வடித்துத் தரு கிறது என்பது கருத்தன்று. பல்வேறு கிரேக்கர்கள் பல் வேறு நினைவுகளையும் கருத்துகளையும் கொண்டிருந்தனர் என்பதும், அவர் இலக்கியங்களும் பல்வேறு நினைவுகளை வெளியிட்டன என்பதும் மறுக்க முடியாத உண்மைகள். என்றாலும் இக் கிரேக்க இலக்கியங்களில் காணப்பெறும் மாறுபாடுகளையும் வேற்றுமைகளையும் கடந்து பார்த்தால் கிரேக்க இனத்தின் அழியாத சில பண்புகளை இவ் விலக் கியங்கள் வெளியிடுதலைக் காணலாம். இப் பண்புகளைக் கொண்டுதான் கிரேக்கர்களின் குறிக்கோள்கள் எவை எவை என்றும், வாழ்க்கைபற்றி அவர்கள் என்ன நினைத் தார்கள் என்றும் கூறுகிறோம்.

மேலே கிரேக்கத்திற்குக் கூறிய அனைத்தையும் அப்படியே தமிழ் இலக்கியத்திற்கும் கூறலாம். இப் பொதுப் பண்பாட்டை வைத்துதான் தமிழன் வாழ்க்கை, குறிக்கோள் முதலியவை இன்னவை என்று குறிக்கிறோம். கற்றறிந்த ஒவ்வொருவரும் உலகைச் சுற்றிப் பார்ப்பது அறிவு வளர்ச்சிக்குச் சிறந்தது என்று கூறுகிறோம். இன்றைய உலகை நாம் சுற்றிப் பார்ப்பதானால், இக் காலத் தில் வாழும் மக்களைப் பற்றி மட்டுமே அறிய முடியும். ஆனால், கடந்து போன காலங்களில் வாழ்ந்தவர்களைப் பற்றி அறிய வேண்டுமாயின் என்ன வழி உண்டு? அந் நாட்டு இலக்கியங்களே அதற்கு உதவுபவை.

ஒரு நாட்டின் இலக்கியம், அந் நாட்டு மக்களின் பண்பாடு முதலியவற்றை விரித்துரைக்கும் பல்வகைச் சாதனங்களுள் ஒன்று என்பது மட்டுமன்று; தலையாய

தும் ஆகும். இதிலிருந்து, இலக்கியம் என்பது, நாம் காணும் சரித்திரத்திற்கு உதவி செய்யும் கருவியாகத் திகழும் என்பதையும் அறியலாம். சரித்திரத்தைப் பொறுத்தமட்டில் ஒரு குறை உண்டு. ஒரு நாட்டின் சரித்திரம் அம் மக்களின் புற வாழ்க்கையையும், நாகரிகத்தின் புறப்பகுதியையும் மட்டும் குறிக்கும் இயல்புடையது. இவ்வுலக வாழ்க்கையில், வாழ்க்கையின் புறப் பகுதியில் அவர்கள் என்ன செய்து முடித்தார்கள்; எவற்றில் தோல்வியுற்றார்கள் என்பவற்றைமட்டுமே அந்தச் சரிதம் கூறுகிறது. ஆனால், அம் மக்களின் அக வாழ்க்கையில் என்ன நடைபெற்றது? மனத்துள் என்ன போராட்டங்கள் நடைபெற்றன, மன உலகில் என்ன சாதிக்க வேண்டும் என்று விரும்பினர்? எவ்வளவு தூரம் வெற்றி பெற்றனர் என்பவற்றை அறிய வேண்டுமானால் அவர்கள் இலக்கியம் ஒன்றுமட்டுமே துணைபுரிதல் கூடும்.

ஒரு சமுதாயத்தின் புற வாழ்க்கையும் அக வாழ்க்கையும் பெரிதும் தொடர்புடையன என்பதை மறத்தல் ஆகாது புற வாழ்க்கை செம்மையாக அமைந்தபொழுதுதான் அக வாழ்க்கை முன்னேற்றமடையும். சங்க காலத் தமிழன் வாழ்க்கையில் சமயத் துறையில் அவனுக்கு இருந்த உறுதிப்பாட்டைத் திருமுருகாற்றுப்படை அறிவிக்கிறது. இரண்டாவது, சிலப்பதிகாரத்திலும் இவ்வுறுதிப்பாடே காட்சியளிக்கிறது. ஆனால், சில இடங்களில் இது சிறிது ஆட்டம் கண்டுவிட்டதையும் அறிய முடிகிறது. கவுந்தி அடிகளுக்கு, மதுரை செல்லும் வழி கூறும் அந்தணனாகிய மாடலன், பவகாரணி, இட்டசித்தி முதலிய குளங்களில் அவர்களை மூழ்கிச் செல்லுமாறு கூறுவதும், அதற்குக் கவுந்தியடிகள் மறுப்புக் கூறுவதும் ஆழ்ந்து நோக்கற்குரியன. மாடலன் கூறியவற்றைச் சமணத் துறவியாகிய கவுந்தியடிகள் சமய வேறுபாட்டால் மறுத்துவிட்டார் என்று மட்டும் கொண்டு விடக்கூடாது. மக்களுள் உறுதி தளர்ந்து இது செய்யலாமா அது செய்யலாமா என்று ஊசலாடும் மனநிலை வந்த

யையே இப்பகுதி குறிப்பதாகக் கொள்ளல் வேண்டும். அடுத்துத் தோன்றிய மணிமேகலையில் தமிழ் இனத்தில் தோன்றிய இம்மன ஆட்டம் மிகுதிப்பட்டுக் காட்சி தருகிறது. எச் சமயமாயினும் அதனை அப்படியே எடுத்துக் கூறலா மல்லவா? அவ்வாறு செய்யாமல் மணிமேகலை தத்தளிப் பதை அந்நூல் நன்கு எடுத்துக்காட்டுகிறது. 'சமயக் கணக்கர்தம் திறம் கேட்ட காதை' என்ற ஒன்று மணிமே கலையில் தோன்றுவது அக்காலத் தமிழ் இனத்தின் மன நிலையைப் பளிங்குபோல் நமக்கு எடுத்து விளக்குகிறது. அடுத்துவரும் சிந்தாமணி, இவ்வாட்டம் அடங்கிக் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவு ஏற்படுவதை அறிவுறுத்துகிறது.

பூரணத் தெளிவு ஏற்படவில்லை என்பதை, 'பிள்ளையார் பிடிக்க அது வேறு ஒன்றாய் முடிந்தது' போல உள்ள அவ் விலக்கியமே சான்று பகரும். துறவின் மேன்மை கூறவந்த அவ்விலக்கியம், நிலையாமை கூறி மக்கள் மனத்தைத் திருப்பத் தோன்றிய அவ்விலக்கியம், இவற்றை ஓரளவு கூறி, இவற்றிற்கு நேர் முரணான சிற்றின்பத்தை மிகுதிப் படுத்திக் கூறியது தமிழ் இனத்தின் மனம் இன்னும் செம்மை யடையவில்லை என்பதையே நிறுவுகிறது. அக் காலத்தும் அதன் பின்னரும் தோன்றிய சமயாசாரியர்களும் ஆழ்வார் களும் தளர்ந்துவிட்ட இத்தமிழ் இனத்தை உறுதி நிலைக்குக் கொணர அரும்பாடுபட்டிருக்கின்றனர். அவர்கள் தோன்றிச் செய்த இவ்வரிய காரியத்தை ஏன் பௌத்தமும் சமணமும் செய்யவில்லை என்ற வினாத் தோன்றுமாகில் அது நியாய மானதே ஆகும்.

இவ் வினாவிற்கு விடை கண்டால் அதிலிருந்து பல உண்மைகள் வெளிப்படும். சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி ஆகிய மூன்று பேரிலக்கியங்களும் சிறந்த தமிழரால் ஆக்கப்பெற்றன என்பதில் தடை ஒன்றும் இல்லை இவற்றுள் முதலாவதாகிய சிலப்பதிகாரம் தமிழன் ஒருவன் சரிதங் கூறும் நூல். மணிமேகலையும் அவ்வாறே. என்றாலும் என்ன வேற்றுமை? மணிமேகலை சமயப் பிரசாரம் செய்த காரணத்தால் சிலம்பு பெற்ற பெருமையை அடைய

இயலாமல் போயிற்று. ஆனால், இதே சமயப் பிரசாரம் செய்த பெரிய புராணம் வெற்றியடையவும், இம் மணிமேகலை வெற்றி பெறாதது விந்தையன்றோ? இவை இரண்டிற்கும் இடையே தோன்றிய சீவக சிந்தாமணி சிலப்பதிகாரம்போல் தமிழன் சரிதம் கூறவில்லை. என்றாலும், சமயப் பிரசாரமும் செய்யவில்லை. செய்தாலும் இலை மறைவு காய் மறைவாகச் செய்ததே தவிர, மணிமேகலை, பெரிய புராணம் என்பவை போல நேரிடையாகச் செய்யவில்லை. எனவே, சமயப் பிரசாரம் செய்யாத சிலம்பு, சிந்தாமணி என்ற இரண்டையும் விட்டுவிட்டு, மணிமேகலையையும் பெரிய புராணத்தையும் எடுத்துக்கொள்வோம். இரண்டும் கவிதை நயம் உடையன என்றாலும், கூறப்பெற்ற பொருளால் ஒன்று நாட்டில் செல்வாக்கை இழந்தது; மற்றொன்று செல்வாக்கைப் பெற்றது. பௌத்தமும் சமணமும் உலகிடைத் தோன்றிய சிறந்த சமயங்களில் இரண்டு என்பதில் ஐயம் இல்லை. அவை தோன்றிய காலத்தில் அவற்றைத் தோற்றுவித்த மக்கள் இனத்திற்கு இவை பெரிதும் பயன்பட்டன. ஆனால், தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் இவை இரண்டும் ஏலாத சமயங்கள் ஆயின.

சிறந்த கொள்கைகளையுடைய பௌத்தம், துக்கம், துக்க உற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் என்ற அரிய உண்மைகளைக் கூறியிருப்பவும் கடவுள் பற்றிய ஆராய்ச்சியில் கவனம் செலுத்தவில்லை சமணமோ பெண் களுக்கு வீடுபேறு கிட்டாது என்னும் கொள்கையுடையது. இவை இரண்டும் சரியா, தவறா என்ற ஆராய்ச்சி இங்கு நமக்குத் தேவை இல்லை. ஆனால், இவை தமிழ் மனப் பண்பாட்டுக்குச் சிறிதும் ஒவ்வாதவை ஆகும். ஆகவே, தான் இவ்விரு சமயங்களும் எவ்வளவு பரவினும் தமிழ் நாட்டில் கால்கொள்ளாமற் போயின. இவற்றை ஆதரித்த இலக்கியங்களும் செல்வாக்குப் பெறாமற் போயின. ஆனால், சிலப்பதிகாரம் சைனர் இயற்றியதே எனினும் சமயப் பிரசாரம் ஒரு சிறிதும் செய்யாமல் பிற சமயக் கடவுளரை மிகுதியும் போற்றி, நெஞ்சை அள்ளும் காப்பியமாக மட்டும்

அமைந்துவிட்டது. ஆகவேதான் அந்த ஒரு நூல் மட்டும் இப்போது உண்மைக்கு மாறுபட்டு இன்றும் செல்வாக்குடன் வாழ்கிறது. இந் நாட்டுப் பண்பாட்டிற்கு ஏற்ப, இந் நாட்டு மக்களால் தோற்றி வளர்க்கப்பெற்ற சைவம், வைணவம் இவைபற்றிப் பேசும் நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றியவுடன் அவர்களைப் பின்பற்றி நாடு செல்லத் தொடங்கியது.

இத்தகைய நாயன்மார்கள் வரலாறு கூறப் புகுந்தமையின் பெரிய புராணம் ஒரு சிறந்த தேசீய இலக்கியம் ஆயிற்று. இதுபற்றிச் சற்று விரிவாகவே ஆராயலாம்.

ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத்தொகை என்ற ஒன்றைப் பாடினார். தம் காலத்திலும், தமக்கு முன்னரும் வாழ்ந்த சைவ அடியார்கள், தமக்குத் தெரிந்தவர்கள் அனைவருக்கும் 'அடியேன்' என்று கூறிப்போனார், சுந்தரர் அருளிச்செய்த 63 நாயன்மார்கள்தாமா. தமிழ்நாட்டில் அது வரை இருந்தார்கள்? அதற்குமேல் எத்தனையோ பேர்கள் இருந்திருக்கலாம். ஆனால், அவர் தமக்குத் தெரிந்தவரையில் கூறிச் சென்றார். தாம் அறிந்து கூற முடியாதவர்களை யெல்லாம் ஒருங்கு சேர்த்துத் 'தொகை அடியார்கள்' கூட்டத்தில் வைத்துக் கூறியுள்ளார்.

**பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்**
**பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்**
**சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்**
**திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்**
**முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்**
**முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்**
**அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்**
**ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.**

தமக்கு முன் இருந்தவர்கள், பின்னர் இருக்கப் போகிறவர்கள் ஆகிய அனைவரும் இதில் இடம் பெறுகின்றனர். ஆனால்

அவர் கூறிய பெயர்களைக் கூர்ந்து நோக்கின் சில ஐயங்கள் எழாமற் போகா.

தொகை அடியார்களைக் கூறும்பொழுது மிகப் பரந்த நோக்கம் உடையவராகக் காணப்படுகிறார் சுந்தரமூர்த்திகள். சிவ வழிபாடு ஒரு காலத்தில் உலகெங்கும் பரவி இருந்தது. அத்தகைய சிவனடியார்கள் தமிழ்நாட்டில் மட்டுந்தானா இருப்பார்கள்? எனவேதான், சுந்தரர் 'பத்தராய்ப் பணிவார்கள்', 'சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்', 'அப்பாலும் அடிச்சார்ந்தார்' இவர்கட்கெல்லாம் அடியேன் என்று கூறிச் செல்கிறார். இதிலிருந்து அவருடைய பரந்த மனப் பான்மை நன்கு விளங்கத்தான் செய்கிறது. என்றாலும் இக் கருத்துடன், முன்னர் உள்ள எட்டுப் பாட்டையும் இறுதிப் பாடலையும் படித்தால் சற்று வியப்பாகவே உளது. இவற்றில் கூறப்பெற்ற அடியார்களுள் ஒருவராவது தமிழர் அல்லாத வேற்று இனத்தவர் அல்லர். கூற்றுவ நாயனார் களப்பிரர் ஆயினும் தமிழ்நாட்டில் பிறந்தவர் என்று நினைக்கவேண்டி யிருக்கிறது. களப்பிரர் பல ஆண்டுகள் இங்குத் தங்கி ஆட்சி செய்தவர்கள். ஆதலால், அம் மரபில், வேற்றுச் சமயத்தவராகிய களப்பிரர் கூட்டத்தில், சைவராகக் கூற்றுவர் தோன்றியமையின் சேர்த்துக்கொள்ளப்பட்டார் போலும்!

இங்ஙனம் பொறுக்கி எடுத்துத் தமிழ்நாட்டில் தோன்றிய அடியார்களை மட்டும் கூறவேண்டிய காரணம் என்ன? தமிழ்நாட்டினர் அல்லாத ஏனையவர்களை அவர் அறிந்திருக்க மாட்டார் என்ற காரணம் வலிவுடையதாகத் தெரியவில்லை. தாம் அறிந்து தம் பாடல்களில் வேறு இடங்களிற் குறிக்கும் பெரியவர்களைக்கூடத் திருத்தொண்டத் தொகையில் குறிப் பிடவில்லை. மார்க்கண்டரும், பதஞ்சலியும் வியாக்கிர பாதரும் இதற்குச் சான்றாகும். மார்க்கண்டரைப் பற்றிப் பல பாடல்களில் குறிப்பிட்டு அவர் வரலாறு முழுவதையும்,

அந்த ணாளன்உன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரண மாக

**வந்த காவலன்தன் ஆருயிர் அதனை**
**வவ்வினாய்க்கு உன்றன் வன்மைகண்டு அடியேன்**
**எந்தை நீஎனை நமன்தமர் நலியின்**
**இவன்மற்று என்அடியான் என விலக்கும்**
**சிந்தையால் வந்துஉன் திருவடி அடைந்தேன்**
**செழும் பொழில் திருப்புன்கூர் உளானே.**

(அந்தணாளன் - மார்க்கண்டன்; வவ்வினாய் - யமனை உதைத்து உயிர் போக்கினாய்.)

என்ற திருப்புன்கூர்த் தக்கேசிப் பண்ணில் கூறுகிறார். அத்தகைய மார்க்கண்டரைத் திருத்தொண்டத்தொகையில் சேர்க்காதுவிட்டது வியப்பே! துருவித் துருவி ஆராய்ந்தாலும் இதற்குரிய காரணம் ஒன்றுதான் படுகிறது. அதாவது இவர்கள் தமிழ்நாட்டில் தமிழர்களாய்ப் பிறவாத காரணந்தான்.

சிறந்த சிவபக்தராகிய சுந்தரமூர்த்திகளை இவ்வாறு குறுகிய நோக்கங் கொண்டவராகச் செய்வது அடுக்குமா என்று சிலர் கோபமுறலாம். அவ்வாறாயின் இதற்குரிய காரணம் வேறு கூற வேண்டுகிறேன். இத்தகைய தமிழ் இனப்பற்று சுந்தரருக்கு எங்கிருந்து வந்தது? வேறு எங்கிருந்தும் இல்லை. தமிழர் இனப்போரை வெற்றியுடன் நடத்தித்தந்த திருஞானசம்பந்தரிடமிருந்தேயாகும். தமிழ் இனம் தலை தாழ்த்து களப்பிரர் ஆட்சியால் செயல் செத்துக் கிடந்த காலத்தில் அவ்வினத்தை ஒன்றுபடுத்தி ஒற்றுமை யூட்ட அத் தமிழர்களின் பழஞ்சமயமாகிய சைவத்தை தினைஊட்டித் தட்டி எழுப்பினார் திருஞானசம்பந்தர் என்ற அச் 'சிறிய பெருந்தகையார்.' 'சம்பந்தன் தன்னைப் பாடினான்' என்று பாட்டி கூறும் பழமொழி ஒன்று உண்டு தம்மைப் பாடும் அப் பெருந்தகை தம்மை எப்படிக் குறிக்கிறார் என்று காணல்வேண்டும். 'பெருகிய தமிழ் விரகினன்,' 'தமிழ்விரகன்' (3 இடங்கள்), 'நற்றமிழுக்கு இன்துணை ஞான சம்பந்தன்', 'தமிழ் ஞானசம்பந்தன்', 'தலைமகனாகி நின்ற தமிழ் ஞானசம்பந்தன்', தமிழ்முரசு கொட்டித் தமிழ்க்

கொடி ஏந்தித் தமிழ்க் கவிதையால் தமிழ்க் கடவுளைப் பாடி, தூங்கும் தமிழினத்தைத் தட்டி எழுப்பின வீரத் தமிழர் ஒருவர் உண்டு என்றால் அவர் ஞானசம்பந்தரல்லாமல் வேறு யார்? வேற்றவர் ஆட்சியால் வெறுமையும் வறுமையும் உற்று அல்லல் உழந்த தமிழரை வீறுகொண்டு எழச் செய்தவர். காழிவேந்தர் என்று தம்மையே கூறும் அவர், ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஆட்சி செலுத்தினார்.

தாமே தமிழைக் காப்பதாகக் கருதிக்கொண்டு கூவும் சிலர், தமிழக வரலாறு கூறும் இவ்வுண்மையை மறைத்தலாகாது. அன்று ஞானசம்பந்தர் இத் தமிழ் இனத்தைக் காப்பாற்றவில்லையானால் இன்று தமிழர் என்று கூறிக் கொள்ள ஓர் இனமே இல்லாமல் பூண்டற்றுப் போயிருக்கும்.

ஆகவே, அவர் வரலாற்றிலும் கவிதையிலும் மூழ்கி இருந்த சுந்தரமூர்த்திகள், தமிழர் அல்லாத ஏனையவரைத் தம் திருத்தொண்டத் தொகையில் பாடாததில் வியப்பு ஒன்றும் இல்லையல்லவா?

அத் திருத்தொண்டத் தொகையை அடியொற்றித் தோன்றிய பெரிய புராணம், இக் கருத்தை நன்கு அறிந்து, தமிழனின் தேசீய இலக்கியமாகத் தான் விளங்குதற்குரிய வழிகளை மேற்கொண்டது. இதனை இவ்வளவு தூரம் சேக்கிழார் உணர்ந்திருக்கிறார் என்பதற்குக் கீழ்வரும் பெரிய புராணப் பாடல் சான்றாகும். திருஞானசம்பந்தர் தோன்றினார் என்று கூறவந்த சேக்கிழாராகிய பழுத்த தமிழர்,

'வண்தமிழ்செய் தவம்நிரம்ப
மாதவத்தோர் செயல்வாய்ப்ப
'திசையனைத்தின் பெருமைஎலாந்
தென்திசையே வென்றேற
மிசையுலகும் புறவுலகும்
மேதினியே தனிவெல்ல

அசைவில் செழுந் தமிழ்வழக்கே
அயல்வழக்கின் துறைவெல்ல,
(பெ.பு.—திருஞான; 23, 24)

அவர் தோன்றினார் என்றல்லவா குறிக்கிறார்? இம்மட்டோ? 'தீந்தமிழ் சிறக்கவரு நாயகன்', ஓதாது உணர்ந்த முத்தமிழ் விரகன்', 'அருந்தமிழ் ஆகரர்', 'தமிழ் விரகர்' என்றெல்லாமல்லவா பெரிய புராணம் திருஞான சம்பந்தரைக் குறிக்கிறது? தில்லைவாழ் அந்தணர்களைக் கூறவந்தவிடத்து 'தென் தமிழ்ப் பயனாய் உள்ளவர்' என்றும், திருநாவுக்கரசரை தமிழ் ஆளியார்' என்றும் அல்லவா குறிக்கிறது?

எனவே பெரிய புராணம் பிற்காலத்தில் தோன்றிய ஸ்தல புராணங்கள் போன்றது அன்று என்பதும், தமிழனுடைய மானத்தைக் காக்கும் சிறந்த தேசீய இலக்கியம் என்பதும் இதனால் வெளிப்படுகின்றன. தேசீய இலக்கியமாகிய இது, அத் தமிழனுக்கே உரிய பக்தியாகிய சுவையைப் பாடியது.

## 5. பக்திச்சுவை பாடும் நூல்

சுவை மிகுந்த இலக்கியங்கள், எல்லா நாடுகளிலும் எல்லா மொழிகளிலும் நிரம்ப உள்ளன. ஒன்பது சுவைகளை எப் பெயர்களால் வழங்கினாலும் அவை இலக்கியத்தில் மலிந்து உள்ளன. காப்பியங்களும், பெருங்காப்பியங்களும் இச் சுவைகள் ஒன்பதும் விரவி ஆக்கப்பெறுகின்றன. என்றாலும், ஒவ்வோர் இலக்கியத்திலும் ஒவ்வொரு சுவை மிகுந்துக் காணப்பெறுதல் இயல்பு மனிதன் ஒவ்வொருவனும் பல பண்புகள் நிறையப்பெற்றவனே. ஆனாலும், அந்தப் பல பண்புகளில் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொன்று மிகுதியாக இருத்தலைக் காண்கிறோம். ஒருவனைப் பற்றிப் பேசும்பொழுது, மனிதன் நல்லவன்தான்; இருந்தாலும்

கொஞ்சம் முன்கோபம் அதிகம்'' என்றும், ''கொஞ்சம் அவசர புத்தி'' என்றும் கூறக் கேட்கிறோம் அல்லவா? இங்ஙனம் கூறுவதால் கூறப்பட்டவனிடம் வேறு பண்புகள் ஒன்றும் இல்லை என்பது கருத்தல்லவே; பல இருந்தும் அவனிடம் இப் பண்பு சிறப்புற்றது என்பதே கருத்தாகும்.

காப்பியத்தைப் பருப்பொருளாக நோக்குமிடத்து இந்தச் சிறப்பியல்பே நன்கு தெரியும். உட்சென்று காணுங்கால் ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு சுவை இருத்தலைக் காணலாம். ஆனால், முன்னர்க் கூறிய சிறப்புச் சுவை, காற்றைப்போல, காப்பியம் முழுவதும் நிறைந்து காணப்படும். காற்று எங்கும் இருப்பினும் ஒவ்வொரு சமயத்தில் மிகுதியாக அடிப்பதுபோல, காப்பியத்தின் சில இடங்களில் இச் சிறப்புச் சுவை மிகுதியாக இருக்கும். காற்றும் எங்கும் நிறைந் திருப்பதை நாம் ஓயாது உணர்வதில்லை; ஆனால், அதை அறியப் புறப்பட்டவுடன் எங்கும் இருப்பதை அறிகிறோம். இதேபோலக் காப்பியங்களில் உள்ள சிறப்புச் சுவை எங்கும் நிறைந்திருப்பினும் நாம் அதனைக் காணாமல் இருத்தலும் கூடும். காண முயன்றவுடன் அதன் இயல்பைக் காண்கிறோம். கம்பனது அரிய இராமாயணம் மிகப் பெரிய காப்பியமாக இருப்பதால் ஒவ்வொரு காண்டத்திலும் ஒவ்வொரு சுவை மிகுதியாக அமைந்துள்ளது. பருப் பொருளாக நோக்குமிடத்து எந்தச் சுவை மிகுதியென்று கூற முடியாமற் போய்விடுகிறது. சிந்தாமணி அவ்வாறு இல்லை. துறவு பூண்ட பெரியார் ஒருவரால் அப் பெருங்காப்பியம் இயற்றப்பெற்றிருப்பினும், இன்பச் சுவை அக் காப்பியத்தின் சிறப்பியல்பு என்பதை அனைவரும் அறிவர். சிலப்பதி காரத்தில் அவலச் சுவை சிறப்புப் பெற்றிருத்தலையும், மணிமேகலையில் பெருமிதம் சிறப்புப் பெற்றிருத்தலையும் ஆராய்ந்து காண்பார் எளிதில் உணரலாம்.

மேலே கூறிய காப்பியங்களில் காணப்படாத ஒரு சிறப்புச் சுவை பெரிய புராணத்தில் மிளிர்கிறது. ஒன்பது

சுவை இன்னவை என்று இலக்கணம் கூறுபவர் இச்சுவையை எதனுள் அமைப்பார்களோ தெரியவில்லை. பெரிய புராணம் இச் சுவையையே சிறப்பியல்பாகக்கொண்டு விளங்குவதை முதன்முதல் உணர்ந்து நமக்குக் கூறிய பெருமை மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களையே சாரும். தம் சேக்கிழார் பிள்ளைத்தமிழில், "பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ" என்று அவர் கூறினார். இங்ஙனம் கூறுவதால் ஏனைய சுவைகள் பெரிய புராணத்தில் இல்லையோ என்று ஐயுற வேண்டா. இச் சுவை 'நனி சொட்டுகிறது' என்றமையின், ஏனைய சுவைகள் தத்தம் அளவுக்கு ஏற்பச் சொட்டுகின்றன என்றே கொள்ளவேண்டும்.

பெரிய புராணம் முழுவதும் பக்திச் சுவை பல இடங்களில் எல்லையற்றுச் செல்கிறது. சேக்கிழார் மேற்கொண்ட காப்பியப் பொருள், இவ்வாறு அவர் கவிதை புனைய மிகுதியும் இடந்தரு கிறது. கம்பநாடன் மேற்கொண்ட கதை அவன் விரும்பிய பல் சுவைக்கும் இடம் தந்து நிற்பதுபோல், திருத்தொண்டர் வரலாறுகள் பக்தியாகிய சுவை சிறக்க வசதி அளிக்கின்றன.

இவ் உலகைப் பொறுத்தவரை இலக்கியங்களிலும் மக்கள் வாழ்விலும் மிகுதியாகக் காணமுடியாத சரக்கு பக்தியாகும். ஆகவே, அதனைப்பற்றிக் கவிதை புனைவது கடினம். கவிஞன் எந்தப் பொருளிலும் தான் முதலில் ஆழ்ந்து அநுபவித்துப் பிறகுதான் தன் அநுபவத்தைக் கவிதையாக வடிக்கிறான். ஆனால், பலரிடமும் காணப் பெறாத பக்தி என்ற இந்தச் சுவையில் கவிஞன் எவ்வாறு மூழ்க இயலும்? வாழ்க்கையில் காண இயலவில்லை என்றால், இலக்கியத் திலாவது அதிகம் பயிலும் அளவிற்கு இது இருக்கிறதா, என்றால் அதுவும் இல்லை. சங்க இலக்கியங்கள் சிந்தாமணி தேவாரம், திருவாசகம்முதலிய நூல்களில் சேக்கிழார் நன்கு தோய்ந்துள்ளார். என்றாலும், தேவாரதிருவாசகங்களைத் தவிர ஏனைய இலக்கியங்கள் பக்திச்சுவை அமைந்தன அல்ல. தேவார திருவாசகங்களும் அவற்றை இயற்றிய பெரியோர்கள்

தம் சுய அநுபவத்தில் ஆழ்ந்து நிலைத்ததன் பயனாகத் தோன்றிய நூல்களாகும். எனவே, அவை அகப் பாடல் என்று கூறத்தக்கவை. புறப்பாடல் (objective poetry) தொகுதியில் சேர்ந்த ஒரு காப்பியமாவது பக்திச் சுவையைச் சிறப்பியல் பாகக் கொண்டு விளங்கவில்லை.

சேக்கிழார்க்குப் பின்னும் இத்தகைய நூல் தோன்ற வில்லை என்றால் அதற்கு என்ன காரணம் என்பது ஆராய்ச்சிக்கு உரியதே. நால்வர்களைப் போலவே பன்னிரண்டு ஆழ்வார்களும் அருள் நூல்கள் அருளியிருப்பினும் காப்பிய முறையில் பக்தி நூலாக இலங்குவது பெரிய புராணம் ஒன்றுதான். அதற்கு முன்னும் இத்தகைய நூல் ஒன்று இல்லை. அதற்குப் பின்னரும் இதுவரை இல்லை. தனிப் பட்டவர் அநுபவத்தில் ஏற்பட்ட அன்புப் பெருக்குக் காரண மாகத் தோன்றிய பக்திப்பாடல்கள் நால்வருக்கு முன்னர் அதிகம் இல்லை என்றாலும், ஓரளவு உண்டு என்பதை அறிவிக்கத் திருமுருகாற்றுப்படையும், பிற்காலத்தில் வரதுங்கராம பாண்டியர் இயற்றிய 'குட்டித் திருவாசகம்' என்னும் திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாந்தி போன்ற பிற பாடல்களும் இருக்கின்றன.

பழங்காப்பியங்களில் ஒன்றாவது பக்தி நூலாக இல்லை என்று கூறினோம் அல்லவா? தமக்கு வழிகாட்டியாக ஒரு நூலும் இல்லாத காலத்திலும் சேக்கிழார் இத்தகைய அரிய நூல் ஒன்றை இயற்றியுள்ளார். ஆனால் அவருக்குப் பின்னர்த் தோன்றிய நூற்றுக்கணக்கான நூல்களுள் ஒன்றாவது இவ் வழியை மேற்கொள்ளாதது ஏன்? சேக்கிழார்க்குக் கிடைத்த வரலாறு போன்ற வரலாறுகள் பிற்காலப் புலவர்களுக்குக் கிடைககவில்லை என்று கூறுவது தவறாகும். எத்தனையோ பெரியோர்கள் அறுபத்து மூவருக்குப் பின்பும் தோன்றி யுள்ளனர். அவர்களைப் பற்றி நூல் இயற்றி இருக்கலாமே. பெரியார் வரலாறு ஒன்றுமே அகப்படவில்லை என்பதை வாதத்திற்காக ஒப்புக்கொண்டாலும், சேக்கிழாருடைய

வரலாறு எங்கே போய்விட்டது? இவ்வளவு அழகிய நூல் செய்த புலவர், பக்தர், அறிஞர், அமைச்சர், சான்றோர் ஆகிய சேக்கிழாரைவிடச் சிறந்த பாத்திரம் எங்கே கிடைக்கும் காப்பியம் செய்ய? ஏன் அவரைப்பற்றி ஒரு நூல் தோன்ற வில்லை? சேக்கிழார் புராணம் என்று இன்று வழங்கும் நூலில் எத்தகைய சுவையையும் காணமுடியாது என்பதை அதைப் படித்தார் நன்கு அறிவர். சேக்கிழாருக்கு முன்னும் பின்னும் இத்தகைய ஒரு காப்பியம் தோன்றாமைக்குக் காரணம் ஒன்றுதான். சேக்கிழாரைப் போன்ற கலைஞர் அவருக்கு முன்னும் தோன்றவில்லை; பின்னும் தோன்றவில்லை. அவரது கல்வி, அறிவு, புலமை, வாக்குவன்மை, கலைத்திறம், பக்தி முதலிய பண்புகளில் பலவற்றையும் பெற்றவர் முன்னும் பின்னும் உண்டு. ஆனால் இவை அனைத்தையும் ஒருசேரப் பெற்றவர் அவர் ஒருவரே.

இவை அனைத்தையும் பெற்றதோடு நின்றுவிடவில்லை அந்தப் பெருந்தகை. இவை அனைத்திலும் மேம்பட்ட ஒன்றையும் அவர் நிரம்பப் பெற்றிருந்தார். அதுவே அவருடைய பண்பட்ட மனம். பக்திச் சுவையில் ஈடுபடப் பண்பட்ட மனம் வேண்டும். அதைச் சேக்கிழார் பெற்றிருந்தார்.

அடியார்கள் இறைவன்மேல் பக்தி பூண்டுள்ளனர். அவ்வநுபவம் அவர்கள் அகமனத்தின் அடிப்படையில் நிறைகிறது. பிறகு அவ்வநுபவம் வெளிப்பட்டுக் கவிதையாக முகிழ்ப்பதும் உண்டு. அவ்வாறு வெளிவந்த கவிதைகளே தேவாரம், திருவாசகம், பிரபந்தங்கள் என்பவை. ஆனால், தம் அநுபவத்தைத் துணைகொண்டு சென்று பிறர் பெற்ற அநுபவத்தை அறிவது மிகமிகக் கடினம். இத்தகைய நிலைக்குக் கற்பனையின் உதவி தேவை. அக் கற்பனை, ஏனைய கவிஞர்கட்கு உதவுவதுபோல், இத்தகைய பக்திக் கவிதை புனையும் கவிஞனுக்குப் பயன்பட்டால் பயன் இல்லை. அறிந்ததுகொண்டு அறியாததை உணர்த்தும் பிற

புலவர்களின் கற்பனை போன்றது அன்று இது. உணர்வு உள்ளத்தில் அநுபவங்களை உண்டாக்கும் சக்தி வாய்ந்ததாக அது இருத்தல்வேண்டும். அப்பொழுதுதான் கண்ணப்பர் அன்பையும், சிறுத்தொண்டர் அன்பையும், 'இயற்பகை அன்பையும் கற்பனை செய்து காணக்கூடும். இவ்வளவும் செய்யும் அக் கற்பனை, பக்திநெறிக்குத் துணை செய்வதாக இருத்தல்வேண்டும். இங்ஙனமே சேக்கிழார் அதனைப் பெற்றிருந்தார் என்று கூறல் மிகையாகாது.

சேக்கிழாருடைய காப்பியத்தில் காணப்பெறும் அருமைப்பாடே, நம் போன்றோர் அதனை அநுபவிப்பதற்கு இடையூறாக நிற்கிறது. ஏனைய காப்பியங்களில் உள்ள ஏனைய சுவைகளை நாம் அனுபவிக்கிறோம். இயல்பாகவே சுவையுடைய அப் பகுதிகள் நம்மிடம் ஏற்கெனவே உள்ள அச் சுவைகளைக் கிளறிவிடுகின்றன; நம் மனத்தில் உள்ள சுவை, கவிதைதரும் சுவையை அதிகப்படுத்தி அநுபவிக்கச் செய்கிறது. நம்மிடம் அச்சுவை ஓரளவாவது முன்னரே இல்லையாயின் கவிதை தரும் சுவையை அநுபவித்தல் இயலாது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகைக் கவிதை மிகுதியும் பிடிப்பதற்கும், ஒவ்வொரு வகைக் கவிதை வெறுப்பைத் தருவதற்கும் இதுவே காரணம். காதற்சுவை உணராத இளஞ் சிறுவருக்கு அகப்பாடல் எவ்விதச் சுவையும் ஊட்டாது நிற்றல் கண்கூடு. இதனால் அகநானூற்றின்மேல் இழுக்குக் கூறல் தவறு அன்றோ? பெரும்பாலும் ஒவ்வொருவ ரிடத்தும் ஒன்பது வகைச் சுவைகளும் இயல்பாக அமைந் திருத்தலின், இலக்கியம் தரும் இப் பகுதிகளை அநுபவிக்க முடிகிறது. இவற்றில் ஒன்றிரண்டு குறைந்து இருத்தலும் உண்டு. ஆனால், மிகப் பெரும்பாலோரிடம் பக்தியாகிய சுவையைக் காணுதல் அரிது அன்றோ? ஆதலின் அதையே மிகுதியாகக்கொண்டு எழும் ஒரு காப்பியத்தைப் பெரும் பாலான மக்கள் அநுபவிக்க இயலாது.

பக்தியோடு கலந்த சிறந்த கற்பனைத்திறம் இருத்தலால் சிறந்த காட்சிகளை மனக்கண்முன் காண்கிறார் சேக்கிழார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் ஏழாம் நூற்றாண்டில் வசித்தவர். சேக்கிழாரோ பன்னிரண்டாம் நூற்றாண்டில் திகழ்ந்தவர். ஆனால், திருநாவுக்கரசர் நடந்துவரும் காட்சியை இதோ வர்ணிக்கிறார். நேரடியாக அப் பெருமானைச் சேக்கிழார் காணவில்லை என்பதை நாம் அறிவோம். ஆனாலும், தம் பாடல்மூலம் இன்று வாழ்கின்ற நாம்கூட அவரைக் காணுமாறு செய்துவிடுகிறார்.

**'தூயவெண் ணீறு துதைந்தபொன்**
**மேனியுந் தாழ்வடமும்,**
**நாயகன் சேவடி தைவருஞ்**
**சிந்தையும், நைந்துருகிப்**
**பாய்வது போல்அன்பு நீர்பொழி**
**கண்ணும், பதிகச் செஞ்சொல்**
**மேயசெவ் வாயும் உடையார்**
**புகுந்தனர் வீதியுள்ளே.'**

(பெ. பு.—நாவுக்கரசர்; 140)

*(தாழ்வடம் - உருத்திராட்ச மாலை: நாயகன்...சிந்தை— இறைவன் திருவடி மறவா மனம்.)*

**'மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந்**
**திருவடிவும், மதுர வாக்கில்**
**சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின்**
**மாலைகளும், செம்பொற் றாளே**
**சார்வான திருமனமும், உழவாரத்**
**தனிப்படையும் தாமும் ஆகிப்**
**பார்வாழத் திருவீதிப் பணிசெய்து**
**பணிந்தேத்திப் பரவிச் செல்வார்'**

(பெ. பு.—நாவுக்கரசர்; 225)

பக்திச்சுவை சொட்டப் பாடும் சேக்கிழாரது கவித் திறத்தால் நாவுக்கரசரை நேரே காண்பதுபோல் நாம் காண முடிகிறது. இத்தகைய கவிதைகளை நன்கு அநுபவிக்க

வேண்டுமாயின் ஆசிரியரைப்பற்றியும் நன்கு அறிதல் வேண்டும். ஆசிரியரது மனநிலையேகூடச் சில இடங்களில் கவிதைக்குப் பொருள் விரிப்பதாக இருக்கும். சங்ககாலப் பாடல்களையும், சிலப்பதிகாரத்தையும் அநுபவிப்பதற்கு அவற்றை ஆக்கிய கலைஞர்களின் வாழ்க்கைபற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற தேவை இல்லை. இளங்கோவடிகளைப்பற்றி ஆதாரமுள்ள ஒரு தகவலும் இதுவரையில் கிடைக்கவில்லை. என்றாலும், சிலப்பதிகாரத்தை அநுபவிக்கவும், அது நெஞ்சை அள்ளும் காப்பியம் என்று காணவும் அவரைப்பற்றிய வரலாறு தேவையாக இருக்கவில்லை. ஆசிரியரைப்பற்றித் தெரிந்தால்தான் இந் நூலை நன்கு அநுபவிக்க முடியும் என்று இதனைப்பற்றிக் கூறமுடியாது. ஆனால், இதனுடன் ஒருங்கு தோன்றியதாகக் கூறப்பெறும் மணிமேகலைபற்றி அறியவும், அதனை அநுபவிக்கவும் வேண்டுமாயின் சாத்தனாரைப்பற்றி நன்கு அறிந்துகொள்ளவேண்டும். இல்லாவிடின் மணிமேகலையைக் கற்கலாம்; அறியலாம்; அநுபவிக்க இயலாது.

'டான்டே' (Dante) என்ற அறிஞர் 'தெய்வீக இன்பியல்' நாடகம் என்ற ஒன்றை எழுதியுள்ளார். ஆனால், திறனாய்வாளர் அனைவரும் கூடி, இந் நாடகத்தை நன்கு அநுபவிக்கவேண்டுமாயின் 'டான்டே'யின் வாழ்க்கை வரலாறு அவசியம் தெரிந்திருக்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்துள்ளனர். இதற்குக் காரணம் ஒன்றுண்டு. சிற்சில நூல்களில், கவிஞன் தன்னை வேறாகப் பிரித்துக்கொண்டு விடுகிறான். தனது இலக்கியத்தில் நம்மோடு சேர்ந்து அவனும் மூன்றாம் மனிதன்போல் உலவுகிறான். அத்தகைய இலக்கியங்களில் அவன் உதவியின்றியும், அவனைப்பற்றி ஒன்றும் அறியாமலும் நாம் புகுந்து அநுபவிக்கலாம். அவனைப்பற்றி அறிந்துகொள்வதால் இலக்கியத்தை அதிகமாக அநுபவித்தோம் என்று கூறுவதில்லை. ஆனால், 'டான்டே'' சாத்தனார், சேக்கிழார் போன்றவர்கள் இயற்றிய

காப்பியங்களில் அவர்களை அறிந்துகொள்ளாமல் நுழைவதால் பாதிப்பயனையே அடையமுடியும்.

அமைச்சர் பதவியிலிருந்து அதனை நீத்துத் துறவு பூண்டவர் சேக்கிழார். அரசனையும் அவனது செல்வத்தையும் நன்கு மதித்தவர். புகழ் என்னும் ஏணியின் உச்சிப்படிக்கு மிக இளமையிலேயே சென்றவர். அத்தகையவர் மனம் மாறித் துறவு மேற்கொண்டார் என்பது அவர் வாழ்க்கையில் அறியவேண்டிய ஒரு பகுதியாகும். இளமைக் காலத்தில் ஒருவன் விரும்புகின்ற அத்தனை பேறுகளும் நிறைந்திருந்தும் சேக்கிழார் அவற்றை உதறித் தள்ளி உள்ளத் துறவு பூண்டார் என்றால், தக்க காரணம் ஒன்று இருக்கத் தானே வேண்டும்? உலகில் உள்ள இன்பம் நிலையாதது என்ற உண்மை தெரிந்தபின் தோன்றிய மன உறுதி அல்லது வைராக்கியமே அவரைத் துறவுபூணச் செய்தது. மனத்தில் உள்ள பற்று முதலியவற்றை நீக்கி விட்டால் அம் மனத்தில் வேறு பொருள்கள் நிரம்பவேண்டும். மனம் ஏதாவது ஒரு பொருளைப் பற்றிக்கொண்டுதான் நிற்கும். ஆகவே, சேக்கிழார் தம் தூய மனத்தில் இறைவனிடம் அன்பு அல்லது பக்தியை நிரப்பிவிட்டார். அந்தப் பக்தியானது அவரது காப்பியம் முழுவதும் நிறைந்து நிற்கிறது. அவர் கூறிய அடியார்களின் புற வாழ்க்கையை வரலாற்றுமூலம் நாம் அறிதல்கூடும். எனினும், அவர்களுடைய மனநிலையை, அகமனத்தை அல்லது பண்பை அறிய முடியாது. அவற்றை அறியவேண்டுமாயின் சேக்கிழார் ஒருவரே அறியமுடியும். அவர் தாம் அறிந்ததைக் காட்டினால் ஒழிய நாம் அதனைக் காணுவது இயலாது. அடியார்களின் வாழ்க்கையை அறிந்து கொண்டால் ஒழிய பல சமயங்களில் அவர்கள் செய்யும் செயல் களுக்குப் பொருள் விளங்காமல் நாம் அல்லற்பட நேரிடும்.

செல்வத்தையும் குழந்தையையும் தாம் கொண்ட கொள் கைக்காக விருப்பத்துடன் தியாகம் செய்யும் மனப்பான்மை ஒன்று. ஆனால், அந்தத் தியாகத்தின் சிறப்பை அறியும்

மனப்பான்மை வேறு. என்ன மனநிலை இருந்தால் இந்தக் காரியம் செய்ய முடியும்? அத்தகைய மனநிலையை நம் போன்றவர்கள் கற்பனை செய்வதுகூட இயலாது. இவ் வடியார்கள் தாம் கொண்ட கொள்கைக்காக எத்தகைய தியாகத்தையும் செய்தனர். ஏறத்தாழ அதே மனப்பான்மை கொண்டிருந்தமையால்தான் சேக்கிழார் அந்தத் தியாகங் களின் உட்கருத்தை அறிய முடிந்தது. சேக்கிழார் போலவே இன்னும் சிலரும் இக்கருத்தை அறிந்திருக்கலாம் எனினும் அவர்கள் கவிதைக் கலை கைவரப் பெறாதவர்களாக இருந்திருக்கலாம். இவை இரண்டும் ஒருங்கே வாய்க்கப் பெற்றமையின் சேக்கிழார் பெரிய புராணத்தை இயற்றினார்.

நாயன்மார் வரலாறுகளையும், அவற்றில் சிறப்புடன் மிளிரும் பக்திச் சுவையையும் வேண்டாதவர்களுக்குக்கூடப் பெரிய புராணம் பயன்படும். ஒவ்வொருவரும் எல்லா வகை இலக்கியத்திலும் ஈடுபட வேண்டும் என்று கூறுவது மிகை யாகும். இலக்கியம் என்பது பலவகைப் பண்பாடுகளும் நிறைந்த பல்வேறு பாத்திரங்களைப்பற்றிப் பேசுவது. அவ் விலக்கியத்தைக் கற்கின்ற நமக்கும் தனிப்பட்ட சில குணங் களும் பண்பாடுகளும் உண்டு. எனவே, இலக்கியத்தை நாம் கற்கையில், நம் கருத்திற்கும் இலக்கியம் கூறும் கருத்திற்கும் முரண்பாடு ஏற்படுதல் இயற்கை. எது சிறந்தது என்ற வினாத்தோன்றி நம் பழைய கொள்கைகளுடன் போராட நேரிடுதலும் உண்டு. இலக்கியம் கூறும் அனைத் தையும் நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது இல்லை. என்றாலும், நம்மிலும் வேறுபட்ட அக்கருத்துகளுடன் பழகு வதால் நன்மையே தவிரத் தீமை இல்லை. நம்முடைய கொள்கைகள் சீர்திருத்தம் அடையும். விடாப்பிடியாக நாம் கொண்டுள்ள கருத்துகளோடு ஏனையவற்றை ஏற்றுக் கொள்வதற்கு ஏற்ற சகிப்புத்தன்மை வளரும். இவையே இதனால் பெறும் பயன்கள். மனிதனுடைய பண்பாட்டைச் செம்மைப்படுத்த இலக்கியம் உதவும் பல வழிகளில் இதுவும் ஒன்று.

கத்தோலிக்க மதத்தின் விரோதியான 'மில்டன்' எழுதிய 'சுவர்க்க நீக்கத்'தை எந்தக் கத்தோலிக்கராவது, கொள்கை காரணமாகக் கற்கவேண்டா என்று விடுவதுண்டா? அத்தகைய மனநிலை நம்மிடமும் வளரவேண்டும். அதுவே மனிதன் பெற்ற பண்பாட்டின் அறிகுறியாகும். அல்லற்பட்டு உளையும் மனத்திற்கு அமைதி தரக்கூடுமானால், அவ் விலக்கியம் எந்தச் சமயத்தைச் சார்ந்ததானால்தான் என்ன? நோய் தணிக்கும் மருந்தில் இன்ன நிறம் வேண்டுமென்று கூறுவாரும் உண்டோ? குறிப்பிட்ட ஓர் இலக்கியம் நம் பண்பாட்டை வளர்க்குமா? அன்றி மிருகத்தனத்தைத் தட்டி எழுப்புமா? என்பதைத்தான் நாம் அறியவேண்டும். முன்ன தாயின் எதுவும் விரும்பத் தக்கதே. பக்தி அல்லது அன்பு என்பது கடவுளிடம் செலுத்தப்பட்டாலும், மக்களிடம் செலுத்தப்பட்டாலும் ஒன்றுதான். அன்பு என்ன செய்கிறது? பொறிபுலன்களை அடக்கி, விலங்கு உணர்ச்சியை ஒடுக்கி மனத்தில் அமைதியைத் தருகிறது. இத்தகைய அமைதி வேண்டா என்று கூறும் நல்லார்கள் உலகில் உண்டானால், அவர்களுக்குப் பெரிய புராணம் வேண்டா; ஏனையோர் அனைவரும் துய்க்கக்கூடிய முறையிலேயே அது அமைந்திருக்கிறது.

## 6. குறிக்கோள்

'மில்டன்' என்ற கவிஞன் 'சுவர்க்க நீக்கம்' என்ற அரிய பெருங் காப்பியத்தை இயற்றினான். அதை அவன் இயற்றி 300 ஆண்டுகள் ஆகின்றன. இன்று வரையில் நூற்றுக்கணக்கான திறனாய்வு நூல்கள் மில்டனைப்பற்றித் தோன்றியுள்ளன மில்டனுடைய 'குறிக்கோள் யாது? என்ற ஒரு செய்தியை மட்டும் ஆய்கின்ற நூல்கள் பலப்பல. இங்ஙனம் தோன்றிய நூல்கள் அனைத்தும் மிகச் சிறந்தன என்று இங்கே கூற வரவில்லை. ஆனால், மேல் நாட்டார் தம் இலக்கியங்களின்பால் கொண்ட ஆர்வத்திற்கு இஃது ஓர்

எடுத்துக்காட்டாகும். 'மில்டன் கவிஞனும் அல்லன்: அவன் இயற்றியது காப்பியமும் அன்று; சுவர்க்க நீக்கத்தின் காப்பியத் தலைவன் சாத்தான்தான்' என்று கூறும் நூல்களிலிருந்து, 'முக்காலத்தும் மில்டனை ஒத்த காப்பியக் கவிஞர்கள் தோன்றவில்லை' என்று கூறும் நூல்கள் வரை தோன்றி விட்டன. ஆனால், நம் தமிழ்மொழியைப் பொறுத்தமட்டில் எத்தனையோ இலக்கியங்கள் இருந்தும் ஒரு திறனாய்வு நூலும் இல்லாமல் போய்விட்டது.

சமீப காலத்தில் மில்டனைப்பற்றி சி. எஸ். லூயி என்ற அறிஞர் ஒரு நூல் வெளியிட்டார். அதன் தொடக்கத்தில் அவர் கீழ்வருமாறு கூறுகிறார்: 'கார்க் மூடிகளைக் கழற்றும் சுழல் கம்பி (cork screw)யிலிருந்து, மாதா கோவில் வரை உள்ள பொருள்களில் எதனைப்பற்றி ஆராயப் புகுந்தாலும், ஆராய்பவன் முதலில் அந்தப் பொருள் என்ன வேலைக்காகச் செய்யப்பட்டது? எவ்வாறு அதனைப் பயன்படுத்தவேண்டும்? என்ற இரண்டையும் அறிந்துகொள்ள வேண்டும். இவற்றை நன்கு அறிந்துகொண்ட பிறகுதான் 'குடி நிறுத்தவாதி' (Temperance worker), சுழல்கம்பி தவறான பயனுக்கு ஏற்பட்டது என்று சொல்லலாம் பொதுவுடைமைவாதி, மாதா கோவில் தவறான பயனுக்கு ஏற்பட்டது என்னும் முடிவுக்கு வரலாம். முதலில் எதிரே இருக்கும் பொருளை நன்கு அறிந்து கொள்ளவேண்டும். சுழல்கம்பி பெரிய டின்களைத் திறப்ப தற்கும், மாதா கோவில் யாத்திரிகர்கள் உணவருந்துவதற்கும் ஏற்பட்டுள்ளன என்று நினைக்கும் அறியாமை உடையவர்கள் அவற்றின் பயனைப்பற்றி ஆராய்வது தவறு. 'சுவர்க்க நீக்கம்' கற்கப் புகும் ஒவ்வொருவரும், மில்டன் அதனை என்ன கருத்துடன் செய்தான் என்பதை அறிதல் வேண்டும்.''

இந்த மேற்கோள் ஓரளவு நீளமானதுதான். ஆனாலும், நமக்குப் பெரிதும் பயன் தருவதாகும். சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் புராணத்தின் பயனை ஆராய்வதற்கு முன், லூயி சொல்வதுபோல அவர் என்ன கருத்துடன் அல்லது

குறிக்கோளுடன் அதை இயற்றினார் என்று தெரிந்துகொள்ள வேண்டும். பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கம்பனுடைய இராமாயணமும் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் பெரிய புராணமும் தோன்றின. கம்பரும் சேக்கிழாரும் காப்பியங்களையே இயற்றினும் இருவருடைய குறிக்கோள்களும் வேறுபடுவதை ஆழ்ந்து நோக்கினால் காணலாம். இவ்விருவரும் இரண்டு பெரு நூல்களையும் என்ன காரணங்களால் இயற்றினர் என்பதைத் தெளிவாக அறிய நம்மால் இயலாது. சேக்கிழாருடைய வரலாற்றைக் கூறும் நூல் ஒன்று கிடைக்கிறது அவர் இந்தப் புராணம் பாடுவதற்கு, அந் நூல் கூறும் காரணம் பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. சிந்தாமணி என்ற சைன காப்பியத்தின்மேல் சேக்கிழார் கொண்ட வெறுப்பாலே இதனை இயற்றினார் என்று அந்நூல் கூறுகிறது. சைவராகிய சேக்கிழார் சைன சமயத்தினிடம் வெறுப்புக் கொண்டிருந்தார் என்பதை ஓரளவு ஒப்புக்கொள்ளலாம். கவிஞரும் புலவருமாகிய சேக்கிழார் நல்ல கவிதையாகிய சிந்தாமணியிடம் வெறுப்புக்கொண்டார் என்று கூறுவது அவருடைய புலமைக்கு இழுக்குக் கற்பிப்பதாகும். இந்த உண்மையைச் சேக்கிழார் புராணம் பாடியவர் அறியவில்லை; மேலும், அவர் பாடல்களைப் பார்க்கும்பொழுதே. ஒரு கவிஞனது மன நிலையை அறியமுடியாதவர் அவர் என்பதை நன்கு அறியலாம். ஆகவே, சைன சமயக் காப்பியமாகிய சிந்தாமணிக்கு எதிராக ஒரு காப்பியம் செய்வதே சேக்கிழாருடைய குறிக்கோள் என்று கூறுவது தவறு.

கம்பன் என்ன காரணத்தால் இராமாயணத்தை இயற்றினான் என்று அறுதியிட்டுக் கூறத்தக்க சான்று ஒன்றும் இல்லை. ஒன்று மட்டும் நிச்சயம். இவ்விரு பெரும் புலவர்களும் வேறுவேறு குறிக்கோள்களைக் கொண்டே தம் நூல்களை இயற்றினர் என்று கூறலாம். தமிழில் ஒரு சிறந்த காப்பியம் செய்யவேண்டும் என்ற எண்ணம் மட்டுமே கம்பனுடைய மனத்தில் இருந்திருக்க வேண்டும். அந்த எண்ணம் நல்ல முறையில் நிறைவேறுவதற்குத் தக்கபடி

விரிவாக அமைந்த கதையை அவன் எடுத்துக்கொண்டான். சேக்கிழாரோ காப்பியம் இயற்றவேண்டும் என்ற எண்ணத்தை முதலில் கொண்டவரல்லர். சீர்குலைந்திருந்த தமிழ் நாட்டைச் சீர்படுத்துவதே அவருடைய முதல் நோக்கம் 'எதுபற்றிப் பாடலாம்?' என்ற வினாவைச் சேக்கிழாரும், 'எத்தகைய பாடல் பாடலாம்?' என்று கம்பனும் தம்மைத்தாமே கேட்டுக் கொண்டார்கள் என்று கூறலாம். சேக்கிழார் தாம் கூறவந்த வரலாறுகளுக்குக் கவிதையை—காப்பியத்தை—ஒரு கருவி யாகக் கொண்டார். ஆனால், கம்பன்தான் இயற்றப்போகும் பெருங்காப்பியத்திற்கு இராமன் கதையைக் கருவியாகக் கொண்டான். இவ்வாறு இருவர் குறிக்கோள்களும் முற்றும் வேறுபட்டிருப்பதை முதலில் அறிந்துகொள்ள வேண்டும்.

இத்தகைய அடிப்படையில் தொடங்கிய சேக்கிழாருக்குக் காப்பியம் சிறந்த கருவியா என்பதை ஆராயவேண்டும். அவருடைய புலமையை நோக்க, இராமன் கதை போன்ற வேறு ஒரு கதையை அவர் பாட எடுத்துக் கொண்டிருந்தால் இதனைவிடச் சிறந்த ஒரு காப்பியம் தமிழ்மொழிக்குக் கிடைத்திருக்கும் என்பது உறுதி. ஆனால், அத்தகைய கதையில் சேக்கிழார் மனம் இவ்வளவு ஒன்றித் திளைத் திருக்குமா என்பது ஐயத்திற்கு இடமானதே. சுவர்க்க நீக்கக் கதை காப்பியம் செய்வதற்குச் சிறந்தது அன்றாயினும், அதில் வரும் மனிதனின் வீழ்ச்சி மில்டன் மனத்தைக் கவர்ந்தது என்றும், அதனாலேயே அவன் அக்கதையை எடுத்துக்கொண்டான் என்றும் அந் நாட்டுத் திறனாய்வாளர் கருதுகின்றனர். சேக்கிழார் திறத்திலும் இக்கருத்துப் பொருத்தமானது. அவர் எடுத்துக்கொண்ட பொருள் காப்பியம் செய்ய வசதியளிக்காததுதான். தனியாக ஒருவருடைய வரலாற்றை விரித்துக் கூறுவதன்று பெரியபுராணம். பல வரலாறுகளின் தொகுதி அது அதிற் காணப்பெறும் எந்த ஒரு நாயனாருடைய கதையும் காப்பியத் திற்குரிய நீளம் உடையதன்று. பெருங்காப்பியத்திற்கு வேண்டிய பல்வேறு சுவைகளும் இவ் வரலாறுகளில் கிடைப்

பது அரிது. துண்டு துண்டாக உள்ள எல்லா வரலாறுகளும் பக்திச் சுவை ஒன்றையே கொண்டு மிளிர்கின்றன. பெருங் காப்பியம் சிறப்பதற்குரிய நிகழ்ச்சிகளுங்கூட இதன்கண் இல்லை. வருணனைகள் செய்வதற்குக்கூட ஒரு நாடு, நகரம் இல்லை என்றாலும், இவந்றால் எல்லாம் மனம் தளர்வுறாமல் சேக்கிழார் ஒரு காப்பியத்தைச் செய்துவிட்டார்.

வடமொழிச் சார்புடைய காப்பியம் அவர் காலத்தில் பெருகத் தோன்றவில்லை. சிந்தாமணி ஒன்றுமட்டுமே அவருக்கு வழிகாட்டியாக இருந்தது. வடமொழி காப்பிய வழியை ஓரளவு மேற்கொண்டது சிந்தாமணி. அதனையே தமக்கு வழிகாட்டியாகக் கொண்டு தொடங்குகிறார் இப் புலவர் பெருந்தகை. காப்பியமுறைக்குச் சிந்தாமணி வழி காட்டினாலும் அந் நூலுக்கு உள்ள வாய்ப்பு இவருக்கு இல்லை. சீவகன் ஒருவனுடைய சரிதம் மட்டுமே கூறுவது சிந்தாமணி. அத்தகைய ஒரு சரிதத்தைச் சேக்கிழார் பாட மேற்கொள்ளவில்லை. பல சரிதங்களைக் கூறும் ஒன்றைக் காப்பியமாக ஒருவரும் அதுகாறும் செய்தறியார். பல சரிதங் களைக் கூறவேண்டிய அவசியம் ஏற்படின் அவை கிளைக் கதைகளாக அமைதல்வேண்டும். அக்கதைகளும் காப்பியத் தலைவன் வரலாற்றோடு ஏதோ ஒரு வகையில் தொடர்புடை யவனாக இருத்தல்வேண்டும். பெரியபுராணத்தில் உள்ள கதைகள் அத்தகையவனவல்ல; காப்பியத் தலைவரான சுந்தரர் வரலாற்றுடன், நேரடித் தொடர்போ மறைமுகத் தொடர்போ ஒன்றும் இவற்றிற்கு இல்லை. வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு இடங்களில் வாழ்ந்தவர்களின் வரலாறுகள் அவை. என்றாலும், சேக்கிழார் மிக அழகாகத் தொடர்பு கற்பிக்கிறார். காப்பியமாகச் செய்யவேண்டும் என்ற கருத்துடனேயே அந்தத் தொடர்பை அமைக்கிறார். இன்றேல், நாடு, நகரம் முதலியவை பற்றிய வருணனையும் தேவை இல்லையே! வருணனைகள் கூறித்தான் ஆக வேண்டும் என்ற கட்டுப்பாடு ஒன்றும் அக் காலத்தில் இருந்த தாகத் தெரியவில்லை. முதலில் தோன்றிய சிந்தாமணியை

முற்றிலும் அடியொற்றிச் சென்றதனாலேயே சேக்கிழார் நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு முதலியன கூறினார் என்பதும் பொருத்தமாக இல்லை. அவ்வாறு அவர் கூறியிருப்பாராயின் காப்பியத் தலைவராகிய சுந்தரமூர்த்திகள் தோன்றிய திருமுனைப்பாடி நாட்டையும், திருநாவலூரையும் அன்றோ பாடி இருத்தல்வேண்டும்? அவ்வாறு செய்யாமல் சோழ நாட்டுச் சிறப்பையும் அதன் தலைநகராக இருந்த திருவாரூர்ச் சிறப்பையும் அன்றோ பாட எடுத்துக்கொள்கிறார்? இதனால் ஒன்று தெளிவாகும். அதாவது முறைவைப்பை மட்டும் சிந்தாமணியிலிருந்து எடுத்துக்கொண்ட சேக்கிழார் உட் பொருளில் மாறுபடுகிறார். சீவகனுடைய நாடு, நகரம்பற்றித் தேவர் வருணித்தார். ஆனால், சேக்கிழார் காப்பியத் தலைவராகிய சுந்தரருடைய நாடு, பிறந்த நகரம் என்பதைக் கூறாமல் சோழர் பெருமையைக் கூறும் வகையில் சோணாட்டை வருணிக்கிறார்.

இவற்றிலிருந்து ஓர் உண்மை நன்கு வெளிப்படும். சிந்தாமணியைப்போலக் காப்பியம் புனைய வேண்டும் என்று தொடங்கிய சேக்கிழார், தம் காப்பியம் ஒரு புதிய முறையில் செல்லவேண்டும் என்பதையும் முடிவு செய்துகொண்டார். தமக்கு முன்னர் யாரும் இத்தகைய முறையில் செல்லாமை யின், தாம் பல புதுமைகளை இதன் கண் நுழைக்கின்றார். அவற்றுள் சிறந்த இரண்டு திருமலைச் சிறப்பும், திருக்கூட்டச் சிறப்பும் ஆம். இவை இரண்டையும் கூறவேண்டிய காரணம் என்ன? காப்பிய இலக்கணம் பேசும் பிற்கால இலக்கணங்கள் இவை பற்றி ஒன்றும் கூறவில்லை. முன்னும் பின்னும் தோன்றிய காப்பியங்களும் இவ்வாறு கூறவில்லை. பின்னர் ஏன் சேக்கிழார் இவற்றைப் புதிய முறையில் நுழைக்க வேண்டும்? அதுவே அவருடைய சிறந்த புலமைக்கு எடுத்துக்காட்டாகிறது.

இவ்வளவு துன்பம் நிறைந்த கதையை ஏன் சேக்கிழார் எடுத்துக்கொள்ளல் வேண்டும்? அப்படிக் கொண்டவர், அக்கதைகளை உதிரிப் பாடல்கள் நிறைந்த ஒரு புராண

மாகப் பாடாமல், ஏன் காப்பிய அமைதியை மேற்கொண்டார்? இவ்வினாக்களுக்கு விடை கண்டால் அவருடைய குறிக்கோளையும் காணலாம். சேக்கிழாருக்குப் பல நாட்களுக்கு முன்னரே பெரிய புராணத்தில் கூறப்பெற்ற நாயன்மார்கள் வாழ்ந்தார்கள். ஒவ்வொருவரும் ஒரு சிறந்த குறிக்கோளோடு வாழ்ந்தார்கள்; அக்குறிக்கோளுக்கு ஆபத்து வந்த காலத்தில் உயிரைவிட்டேனும் குறிக்கோளைக் காப்பாற்றினார்கள். இத்தகையவர்களுடைய சரிதங்கள் என்றும் மக்கட் சமுதாயத்திற்கு உறுதி பயப்பனவாகும். அவற்றைத் தக்க புலவன் ஒருவன் சிறந்த கவிதைகளால் புனைய வேண்டியது இன்றியமையாததாக இருந்தது.

இவ்வின்றியமையாமை, பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் மிகவும் வலுத்துவிட்டது. அக்காலம் இடைக் காலச் சோழர்களின் ஆட்சிக்காலம். கி.பி 985-ல், முதலாம் இராசராசன் ஆட்சி தொடங்கி, சோழர் ஆட்சி என்றும் காணாத பெருமையுடன் இலங்கிற்று. அவன் மகனான இராசேந்திரன் காலத்தில் அப்பெருமை பின்னும் வலுவடைந்தது. அவனுக்குப் பின் வந்தவர்கள் பலர் அவனை ஒத்த பேரரசர்கள் அல்லராயினும் சோழ ஆட்சி நிலைகுலைய வில்லை. சாளுக்கிய, சோழ பரம்பரையினனான முதற் குலோத்துங்கன் கி.பி. 1070-ல் பட்டத்திற்கு வந்தான். பெரு வீரனாகிய அவன், ஓரளவு ஆட்டங்கண்ட பேரரசை மறுபடியும் நிலைநாட்டிவிட்டான். இவன் பேரனாகிய இரண்டாம் குலோத்துங்கன் (1133-1150) காலமே சேக்கிழார் வாழ்ந்த காலமாகும். ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளாகத் தமிழ்நாடு முழுதும் ஓர் ஆட்சிக்கீழ் இருந்து வந்த காலம் அது- பல சமயங்களில் வேற்று நாடுகள் பலவும் (கங்கையும் கடாரமும்) தமிழர் ஆதிக்கத்தில் இருந்து வந்தன.

இவ்வரசர்கள் வெற்றிச் சிறப்பால் தமிழ்நாடு எல்லையற்ற செல்வத்திலும் செல்வாக்கிலும் மிதக்கலாயிற்று. முதலாம் எலிசபெத் காலத்தில் எவ்வாறு இங்கிலாந்து தேசம் தான் பெற்ற வெற்றிகளால் செல்வாக்கில் ஓங்கி நின்றதோ

அதுபோலத் தமிழகம் இந்த நூற்றாண்டுகளில் தலைநிமிர்ந்து நின்றது. திரைகடல் கடந்தும் தமிழன் வெற்றி பெற்றானாதலின் அவன் நாட்டில் பொருட்செல்வம் கொழித்தது. வாணிகம் நிமிர்ந்து நின்றது. ஆனால், இராசராசனும் இராசேந்திரனும் இவ்வெற்றிகளைப் பெற்றுத் தந்தவர்கள். எனவே, அவர்கள் காலத்தில் பொருள், வீரம் என்பவற்றோடு அருட்செல்வமும் மிக்கிருந்தது.

முயற்சியால் பொருள் தேடுகிற வரையில் மனத்துக்கு வேலையிருக்குமாகலின் அம்மனம் கெடுவதில்லை. ஆனால், பின் சந்ததியில் வருகிறவர்கள் இந்த முயற்சி இல்லாமலும் இப்பொருளை அநுபவிக்கத் தொடங்குகிறார்கள். நிறைந்த பொருளும் கையில் இருந்து, நல்ல வழியில் பணத்தைச் செலுத்துவதற்கு முயற்சி ஒன்றுமில்லையாயின், அம்மனம் தீய வழியில் செல்லாமல் என்ன செய்யும்? பெரும் பொருள் தேடித் தம் பிள்ளைகட்குச் சேர்த்து வைத்துவிட்டுச் செல்கிறவர்கள் வாழ்க்கையையும், அதனைக் கண் மூடித்தனமாகத் தீய வழியில் செலவு செய்கிற பிள்ளைகளையும் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறோம். அதேபோல இத்தமிழ்நாட்டிலும் ஒரு காலம் வந்தது. நமது சேக்கிழார் காலத்தில் தமிழ் மக்கள் பழைய முயற்சியும் வெற்றியும் இல்லாதவர்களாக ஆகிவிட்டனர். ஆனால், கோதாவரி முதல் கன்னியாகுமரி வரை தமிழர் ஆட்சியில் நாடு அமைதியாக இருந்து வந்தது. எனவே, செல்வத்துக்குப் பஞ்சமில்லை. இச்செல்வத்தால் களியாட்டம் தமிழ்நாட்டில் மிகுந்து விட்டது. வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் வேண்டும் என்பதையே மறந்துவிட்டுத் தமிழர்கள் இன்பவேட்டையில் புகுந்துவிட்டனர்.

இத்தகைய காலத்தில் தமிழ்மக்கள் எவ்வாறு இருந்திருப்பார்கள் என்று கூறவும் வேண்டுமா? சங்க காலத்தில் கூட இவ்வளவு நீண்ட நாட்கள் ஒரே பேரரசின்கீழ்த் தமிழ் நாடு இருந்ததில்லை. செல்வத்திலும், செல்வக் களிப்பிலும் நாடு எல்லையற்ற வளம் பெற்றிருந்தது. மக்கள் எப்படி இருந்தார்கள் என்று கூற அதிக தூரஞ் சென்று ஆராய

வேண்டியதில்லை. கம்பன் பாடிய காப்பியமே சிறந்த சான்று பகரும். இராமனுக்குத் திருமணம் என்று கேட்டுத் தசரதன் மிதிலைக்குப் புறப்படுகிறான். புறப்பட்டது பற்றியும் மிதிலை சென்று அடைந்தது பற்றியும் கூற எத்தனை பாடல்கள் தேவை? முந்நூற்றைம்பது பாடல்கள் பாடுகிறான், அக்காளமேகம், வரைக் காட்சி, உண்டாட்டு, பூக்கொய்தல், நீர் விளையாட்டு முதலிய பாடல்களில் செல்வர்களின் களியாட்டங்களைக் கூறுகிறான் கம்பநாடன். அவர்கள் அயோத்தி மக்கள் என்று நினைத்துவிட வேண்டா. தான் வாழ்ந்த காலத்தில் தமிழ் நாட்டு மக்கள் வாழ்ந்த வாழ்க்கையைத்தான் அங்கே படம் பிடித்துக் காட்டுகிறான், காலங்கடந்த கவிதை புனையவல்ல அக்கம்ப நாடன். அவற்றைப் படிக்கும்பொழுது 'கோல்ட் ஸ்மித், என்ற புலவன் கூறிய, 'பொருள் குவியுமிடத்தில் மக்கள் தேய்கின்றனர்' (Where wealth accumilates men dacay) என்ற அடியே நினைக்கு வருகிறது.

சங்ககால மக்கள் வாழ்க்கைக்கும் இவ்விடைக்காலச் சோழர்கால மக்கள் வாழ்க்கைக்கும் கடலனைய வேற்றுமை உண்டு. இச் சோழர் கால மக்கள் வாழ்வில் செல்வம் நிரம்பி வழிந்தது உண்மைதான். ஆனால், தேனும் பாலும் பெருக் கெடுத்து ஓடியதே அவர்கள் வாழ்வில் புரையோடக் காரணமாயிற்று. வாழ்க்கையில் ஒரு குறிக்கோளுடன் வாழ்கின்ற வரையில் செல்வம் அவ்வாழ்வை வளப்படுத்தும் உறுதுணையாக இருக்கும். குறிக்கோள் உள்ளவரை எந்தச் செல்வம் வாழ்வை வளப்படுத்தப் பயன்பட்டதோ அதே செல்வம் குறிக்கோள் அற்ற வாழ்வை அழிக்கும் கருவியாக அமைந்துவிடுகிறது. அறிவுடையவன் கையில் கிடைத்த கூரிய கத்தி பழம் நறுக்கப் பயன்படும். ஆனால், அறிவில் லாதவன் கையில் கிடைத்த அதே கத்தி அவனுக்கும் பிறருக்கும் தீங்கையே விளைவிக்கும். இடைக் காலச் சோழர் கால மக்கள் குறிக்கோள் அற்ற வாழ்வில் இன்பவேட்டை

யில் இறங்கிய காரணத்தால் அவர்கள் வாழ்வை அழிக்கும் கருவியாகி விட்டது.

தமிழ் இனத்தைப் பற்றிய இந்நோயை ஒரு சிலர் நன்கு அறிந்தனர். நோயைப் போக்க முற்பட்டனர். எத்துணை வெற்றிகள் பெற்றுத்தான் பயன் என்ன? வெற்றி களின் பயனாக வாழ்க்கைத் தரம் உயரலாம். ஆனால், வாழ்வில் ஒரு குறிக்கோள் இல்லையானால் அமைதி எங் கிருந்து கிட்டும்? அமைதியற்ற வாழ்க்கை விலங்கு வாழ்க்கை யன்றோ? மனிதனாகப் பிறந்ததன் மாட்சியை மறந்து விட்டால் யாது பயன்? 'அரிது அரிது மானிடராகப் பிறத்தல் அரிது' என்று பாடி விட்டால் மட்டும் போதுமா? தமிழினம் முழுவதையும் பற்றிக்கொண்ட இந்நோய்யைக் கண்ட பெரியோர்கள் சிலர் இதற்கு ஏதாவது ஒரு மாற்றுத் தேட வேண்டுமே என்று நினைத்தனர்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டைப் பற்றி யிருந்த நோய் அச்சமுதாயம் முழுவதற்குமே தீமை விளை விக்கக் கூடியதாக இருந்தது. மனிதனுடைய வாழ்க்கையை விலங்கு வாழ்க்கையிலிருந்து வேறு பிரித்துக் காட்டக்கூடிய இயல்பு யாது? பசி, தாகம் முதலியன, மனிதன், விலங்கு என்ற இரண்டு இனங்கட்கும் பொதுவாகும். பிறந்துவிட்ட காரணத்தால் வாழ்ந்து, இறப்பு வரும்பொழுது இறததலும் இரண்டு இனங்கட்கும் ஒன்றுதான். அவ்வாறாயின் மனி தனுக்குத் தனிச் சிறப்பு யாது? அதனைத்தான் 'குறிக்கோள்' (Ideal) என்று பெரியோர்கள் குறித்தார்கள். குறிககோள் இல்லாத வாழ்க்கை விலங்கு வாழ்க்கையேயாம். திருநாவுக் கரசர் என்ற பெரியார், 'குறிக்கோள் இலாது கெட்டேன்' என்று வருந்துகிறார். குறிககோள் இன்றியமையாதது என்று கண்டபின் அது யாது என்ற வினாத் தோன்றுமன்றோ?

ஒவ்வொரு மனிதனும் எடுத்த இப்பிறப்புத் தீருமுன் செய்து தீர வேண்டிய கடமைகள் பலவுள. கடமைகளுள்

சில சுயநலத்திற்காகவும் இருத்தல் கூடும். ஒரு தொழிலில் ஈடுபட்டவன் காலையில் பத்து மணிக்குத் தொழிலகம் செல்வது ஒரு கடமையாகும். இக்கடமையை ஏன் அவன் நிறைவேற்று கிறான்? மாத முடிவில் கிடைக்கும் ஊதியத்தைக் கருதித் தானே? எனவே, இதுவும் ஒரு கடமை எனினும் இக்கடமையைப் பெரியதென்று யாரும் கூறுவதில்லை. ஒரு தாய், தான் பெற்ற குழந்தைக்குப் பாலூட்டி வளர்க்கிறாள். இதுவும் கடமைதான்: ஆனால், முன்னர்க் கூறிய கடமை போன்றது அன்று இக்கடமை. மாத முடிவில் தாய்க்குக் கிடைக்கும் பரிசில் அல்லது ஊதியம் ஒன்றும் இல்லை. கடமைகளுள் இதனை ஒருபடி உயர்ந்ததாகவும் கூறலாம். இந்த அளவில் ஒரு தாய் நின்று விட்டால் அவள் கடமையை நன்கு நிறைவேற்றியதாக மட்டுமே கூற முடியும் குழந்தையின் வயிற்றுப் பசியைத் தணிக்கும் அவள், அழும் குழந்தையை வீட்டில் விட்டு விட்டுப் படக்காட்சி பார்க்கச் செல்லும் தாயைவிடச் சிறந்தவள் என்பதில் ஐயமில்லை. ஆனாலும், இதனுடன் மட்டும் தாயின் கடமை முடிந்து விடுவதில்லை. தன் மகன் நாளை வருங்கால உலகில் ஒரு பெரிய மனிதனாக விளங்க வேண்டும் என்று அத்தாய் நினைத்து அதற்கு ஆவன செய்வாளேயானால், அவள் தலையான தாய் என்றே போற்றப்படுவாள். இவ்வாறு நினைத்து அதற்கு ஆவன செய்தல் கடமை அன்று. ஆனால், அவ்வாறு செய்வதைத் தான் 'குறிக்கோள்' என்று கூறுகின்றோம்.

ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் இருத்தல் வேண்டும். 'இந்தப் பிறவியை ஏன் எடுத்தோம்? இதில் செய்து முடிக்கவேண்டிய கடமைகள் யாவை? இப்பிறவி முடிந்த பிறகு என்ன ஆகப்போகிறோம்?' என்ற வினாக்கள் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தவறாமல் தன்னைத் தானே கேட்டுக் கொள்ளவேண்டிய கேள்விகள். இவற்றுள் இடை நின்ற கேள்விதான் இன்றியமையாதது. செய்து முடிக்கவேண்டிய கடமைகள் என்பதில் அவரவர்கள் எதை வேண்டுமானாலும் கூறிக்கொள்ளலாம். ஒரு மனிதன்

தன் வாழ்நாள் முடிவதற்குள் எந்த வழியைக் கடைப் பிடித்தாவது பத்து லக்ஷம் ரூபாய் சேகரித்து விடவேண்டும் என்றும் நினைக்கலாம். இதுவும் ஒரு குறிக்கோள்தான்; எனினும் மிக மட்டமான குறிக்கோளாகும். ஆனால், மற்றொரு மனிதன் பாழ்பட்டு நின்றதாம், ஓர் பாரத தேசந் தன்னை வாழ்விக்கவேண்டும் என்று நினைக்கலாம். இதுவும் ஒரு குறிக்கோள்தான். எனினும் மிக உயர்ந்த குறிக்கோள் என்று கூறப்படும். உயர்ந்ததோ மட்டமானதோ ஒரு குறிக்கோள் இல்லாவிட்டால் வாழ்க்கை சுவைப்படாது. வாழ்க்கையில் வெறுப்பும் தட்டி விடும். பல சமயங்களில் 'வாழ்க்கை கசந்துவிட்டது' என்று ஒரு துண்டுக் கடிதத்தில் எழுதி வைத்துவிட்டு ஒரு முழம் கயிற்றையோ, ஓடும் ரயிலையோ தேடிய 'பெரியவர்களை' நாம் கேட்டதில்லையா? ஏன் இவர்கட்கு இவ்வளவு கசப்பு ஏற்பட்டது? வாழ்க்கையில் எவ்விதமான குறிக்கோளும் இல்லாததால். உண்டதே உண்டு, உடுத்ததே உடுத்து, கேட்டதையே கேட்டுக் கடைசியில் வாழ்க்கையில் கசப்பு ஏற்பட்டுவிட்டது; அது முற்றி உயிரை விடும் நிலைக்கும் செலுத்திவிட்டது. மட்டமான குறிக்கோள் உடையவர்கள் வாழ்க்கையும் இவ்வாறுதான். பெரும்பாலும் முடியும். சில லக்ஷம் பொருளைச் சேகரிப்பதே வாழ்க்கையின் குறிக்கோள் என்று நினைத்து, 'மெய் வருத்தம் பாராமல், பசி நோக்காமல், கண் துஞ்சாமல்' சேகரித்து, அம்முயற்சியில் கிழட்டுத் தனத்தையும் அடைந்துவிடுகிறார்கள். அக்குறிக் கோள் கைகூடியவுடன் வாழ்க்கை ஒரு பெரிய சூனியமாகக் காண்கிறது; வெறுப்படைந்து உயிரை விடும் நிலையும் ஏற்படுகிறது.

தனிப்பட்ட மனிதர்கள் இவ்வாறு குறிக்கோள் இல்லாமல் வாழ்ந்தால் ஒழிந்துபோகட்டும் என்று விட்டுவிடலாம். ஆனால், ஒரு சமுதாயமே இவ்வாறு மாறிவிட்டால் என்ன ஆகும்? விரைவில் அச்சமுதாயம் அழிவது தவிர வேறு யாது? பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ் நாடு ஏறத்தாழ இந்நிலையில்தான் இருந்தது. பொருட்

செல்வத்தில் திளைத்திருந்த மக்கள், இன்ப வேட்டை ஒன்றையே வாழ்க்கையின் பொருளென மதித்து வாழத் தலைப்பட்டு விட்டனர். இந்த நிலைக்கு இறங்கிவிட்ட மக்களைக் கைதூக்கி விடவேண்டிய நிலையும் வந்து விட்டது. யார் இதனைச் செய்யமுடியும்? சிறந்த மருத்துவனுக்கு நோய் வெளிப்படுமுன்பே அதன் குறிகள் தெரிந்து விடும். அந்த நிலையில் ஒருவனைப் பார்த்து, 'உனக்கு இத்தகைய நோய் வரும்போல் இருக்கிறது. உடலை நன்கு காத்துக்கொள்' என்று கூறலாம். ஆனால், அவன் இவ் அறிவுரையைக் கேட்டுத் திருத்திக்கொள்வான் என்று உறுதி கூறமுடியாது. ஒருவேளை திருந்தவும்கூடும் என்ற பரந்த நோக்கில் சொல்லிப் பார்க்கலாம் என்று துணிந்து கூறுவதே நல்ல மருத்துவன் கடமை.

சோழப் பேரரசில் பொறுப்பு வாய்ந்த பதவியை வகித்த சேக்கிழார் பெருமானுக்குத் தமிழ் இனத்தைப் பிடித்த இந்த நோய் விரைவில் விளங்கிவிட்டது. இன்பவேட்டை ஆட வேண்டா என்று அவர் கூறியிருப்பார். ஆனால், ஒருவரும் அவருடைய அறிவுரையைக் கேட்டிருக்க மாட்டார்கள். பெருங்குடியனைச் சீர்திருத்த வேண்டுமானால் திடீரென்று அவன் பழக்கத்தை ஒழித்துவிட முடியாது அளவைக் குறைப்பதும், காப்பி, டீ போன்றவற்றை மாற்றாகப் பயன் படுத்துவதும் இன்றியமையாத வழிகளாகும். அதேபோலச் சேக்கிழாரும் தமிழ் இனத்திற்கு வந்துள்ள நோயைப் போக்க ஒரு மருந்து கொடுத்தார். அவர்கள் எந்தத் தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் கவலை இல்லை; ஆனால், கூடவே கவனிக்கவேண்டிய இதனை மறந்துவிடாமல் இருந்தால் போதுமானது என்ற உண்மையை அவர் எடுத்துக் காட்டினார். குறிக்கோள் இல்லாத வாழ்க்கை பயனற்றது என்பதையும், மட்டமான குறிக்கோள் வாழ்க்கையில் நிலைத்த இன்பத்தைத் தராது என்பதையும எடுத்துக் காட்டவே பெரிய புராணம் எழுதினார்,

பெரிய புராணத்தில் அறுபத்துமூன்று பேர்களுடைய வரலாறுகள் பேசப்படுகின்றன. இவர்கள் அனைவரும் ஒரு காலத்தில் வாழவில்லை; ஓர் இடத்திலும் வாழவில்லை; ஒரே வகையான தொழிலைச் செய்யவுமில்லை. அவ்வாறு இருக்கவும் இவர்கள் அனைவருடைய வரலாறுகளும் ஒரு நூலில் இடம்பெற வேண்டிய காரணம் யாது? பல்வேறு காலங்களில், பல்வேறு இடங்களில், பல்வேறு தொழில்களில் ஈடுபட்ட இவர்கள் அனைவர் வாழ்விலும் ஒரு பொதுத்தன்மை உண்டு. இப் பொதுத்தன்மை காரணமாகவே இவர்கள் அனைவரும் ஒரு பொதுப் பெயரால் அழைக்கப் பெற்றனர். அப் பொதுப் பெயர்தான் 'அடியார்கள்' என்பது. அடியார்களாக ஆவதற்கு ஒன்றுதான் தேவை. அந்த ஒன்று இருந்துவிட்டால் வேறு எவை இருப்பினும் இல்லாவிடினும் கவலை இல்லை. தாம் பெற்ற ஒரு மகனை அரிந்து கறி சமைத்துப் போடுகிறார் ஒருவர். ஆனால், இருந்தவிடத்தில் இருந்துகொண்டே 'நம்பியாரூரர்' என்ற பெயரை மட்டும் கூறிக்கொண்டிருக்கிறார் ஒருவர். இவர்கள் இருவரும் இறுதியில் பெறுவது ஒரே வீறுபேறுதான் இது எவ்வாறு முடிகிறது? பிள்ளையை அரிதலும், சும்மா 'நம்பியாரூரர்' என்று கூறுதலும் சமமாகி விடுமா? ஆகாது என்றுதான் நாம் கூறுவோம். ஆனால், ஒன்றே என்று பெரிய புராணம் கூறுகிறது. இன்னும் கூறப் போனால், பிள்ளையை அரிந்ததைவிடப் பல சமயங்களில் 'நம்பி ஆரூரர்' என்று கூறுவது உயர்ந்ததாகிவிடலாம். அஃது எவ்வாறு என்று காண்டல் வேண்டும்.

இந்தச் சென்னை நகரில் அறுவை மருத்துவர் (Surgeons) பலருண்டு. பன்னூறு ரூபாய்களை வாங்கிக் கொண்டு அவர்கள் நம் அருமை உடம்பில் ஒரு பகுதியை வெட்டி விடுகின்றனர். கூர்மையான கத்தியால் நம்முடன் பிறந்துவளர்ந்த உடம்பின் ஒரு பகுதியை வெட்டி எடுப்பதற்கு அவர்கட்கு எவ்வளவு பணம்? நன்றியும் பாராட்டுகிறோம். ஆனால், அதே சமயத்தில் சிறு பேனாக் கத்தியால் ஒருவர் நம்முடம்பில் கீறிவிட்டால் அவருக்குக் கிடைக்கும் பயன்

யாது? ஏழு வருடக் கடுங்காவல் தண்டனை. இதைவிடக் கூர்மையான கத்தியால் அறுத்துங்கூட மருத்துவரை ஏன் போற்றினோம்? நம்மைக் காக்கவேண்டும் என்ற எண்ணத்தால் மருத்துவர் நம் உடம்பை அறுத்தார். நமக்கு அழிவு தேடும் நோக்கத்துடன் மற்றொருவர் பேனாக்கத்தியால் கீறினார். இருவரும் அறுத்தலாகிய ஒரே தொழிலைச் செய்யினும் எண்ணம் வேறாக இருக்கக் காரணம் யாது? செயல் ஒன்றேயாயினும் செய்வான் மனக்கருத்துக்கு ஏற்பவே பயன் கிட்டுகிறது. நமக்கு நன்மை தேடும் கருத்துடன் அறுத்ததால் மருத்துவர் நம் மதிப்பைப் பெறுகிறார் அதே போலச் சிறுத்தொண்டர் பிள்ளையை அரிந்துக் கறி சமைத்ததால் பெருமை அடையவில்லை. பெற்ற பிள்ளையைக் கொல்லும் 'பெரியோர்கள்' இன்றும் உண்டு. ஆனால் சிறுத்தொண்டர் கருத்தில் யாது இடம் பெற்றது? அவர் கொண்ட கொள்கைக்காகவே பெற்ற பிள்ளையை அரிந்தார். அடியார்கள் வாழ்க்கை முழுவதிலும் காணப்படும் பொதுத்தன்மை இது தான். இதனைத்தான் அவர்கள் வாழ்க்கையில் கொண்ட 'குறிக்கோள்' அல்லது 'இலட்சியம்' என்று கூறுகிறாம்.

அடியார்கள் என்பவர்கள் தம் உடல், பொருள், ஆவி அனைத்தும் இறைவனுடைய உடைமை என்று உறுதியாக நம்பி வாழ்பவர்கள். அந்த இறைவனின் அடியார்கள் யாது வேண்டினும், தம் உயிரையே வேண்டினும், மிக மகிழ்ச்சியுடன் தருதலே தம் கடமை என்று நினைப்பவர்கள். கேட்கப்பட்ட பொருள் எதுவாயினும் சரி, அதனை அகமிக மகிழ்ந்து தருதலே அவர்கள் வாழ்க்கையின் குறிக்கோள். ஒருவரிடம் கேட்கப்பட்ட பொருள் மனைவியாகவும், மற்றொருவரிடம் பிள்ளையாகவும், மூன்றாமவரிடம் வெறும் சோறாகவும் இருக்கலாம், அதுபற்றிக் கவலை இல்லை. இம்மூன்று பேரும் தாம் தருகின்ற பொருள் எது என்பதைப்பற்றிக் கவலை அடையாமல், 'தருதல்' ஒன்றுதான் அறியவேண்டுவது. தரப்பட்ட பொருள் எவ்வளவு வேறுபட்டாலும் தருபவருடைய குறிக்கோள் மாறுபடுவதில்லையல்லவா?

இந்தப் பெரிய உண்மையை அறிவுறுத்தவே பெரிய புராணம் எழுந்தது. வாழ்க்கையில் ஓர் ஒப்பற்ற குறிக் கோளைக் கொண்டு வாழ்ந்து, அதனால் பிறப்பின் பயனைப் பெற்றவர்கள் வரலாற்றை நமக்குக் கூறுமுகமாகப் பெரிய புராணம் அத்தகைய வாழ்வை நாமும் மேற்கொள்ளத் தூண்டிற்று. எனவே, குறிக்கோளற்ற வாழ்வாகிய பெரு நோய் பிடித்த தமிழ்ச் சமுதாயத்திற்கு மருந்தாய் அமைந்தது பெரிய புராணம்.

இத்தகைய சூழ்நிலையில்தான் சேக்கிழார் தோன்று கிறார். இந்தப் பாழ்பட்ட சமுதாயத்தைக் கை தூக்கிவிட வேண்டும் என்று முடிவு செய்துகொள்கிறார். 'பெரியவர் தம் நோய் போல் பிறர் நோய் கண்டு உள்ளம் எரியின் இழுது ஆவர்' அல்லரோ? இராசராசன் காலத்திலிருந்து கோயில்கள் பல்கிவிட்டன. அவற்றிற்கு அரசரும் பிறரும் நிபந்தங்கள் அமைப்பதும் மரபாகி விட்டது. மூவருக்குப் பிறகு மடங்கள் பல்கி விட்டன. ஆனால், பயன் தீங்காகவே முடிந்தது. அன்ன சத்திரங்கள் பல்கின; ஆனால், அவற்றில் துறவிகளும் அடியார்களும் உணவுகொள்ளவில்லை. சுருங்கக் கூறுமிடத்து வெறும் சடங்குகளும் வேடங்களும் மலிந்தன. உண்மைச் சமய வாழ்வு அருகி விட்டது. சமயத்தைப் பற்றிய நூல்கள் கற்கப் பெற்றன. எனினும், மக்கள் வாழ்க்கை கீழ்நோக்கிச் சென்று கொண்டே இருந்தது. பொருட் செல்வம் எல்லையற்று இருந்தது. திருவாரூர் மக்கள் வீடுகளைக் குறிக்குமிடத்துச் சேக்கிழார் 'பொன் துஞ்சு மாளிகை' என்றல்லவா குறிக்கிறார்? இராச ராசன் தஞ்சைப் பெரிய கோயிலுக்கு விட்டுச்சென்ற நிலங் களையும், செய்து வைத்த ஆபரணங்கள், பொன் பாத்திரங் கள் என்பவற்றையும் இன்று கல்வெட்டில் கண்டாலும் துணுக்கம் ஏற்படும். அத்தகைய பொருட் செல்வம் தாண்டவமாடிற்று, தமிழ் நாட்டில். ஆனால் மக்கள் மக்க ளான நிலைமாறி, மாக்களாகிக் கொண்டிருந்தார்கள். உண்டாட்டுப் படலம் முதலியவற்றை இராமாயணத்தில் ஒருமுறை படித்தால் அக் கால மக்கள் வாழ்க்கை நன்கு

விளங்கும். இதற்கொரு மாற்றுத் தேட விரும்பிய சேக்கிழாருக்கு இப்பெரியார் சரிதங்களை விடச் சிறந்த ஒன்று எது? எத்துணை இன்னல்கள் நிறைந்திருப்பினும் இவற்றையே பாடித் தீர வேண்டும் என்ற குறிக்கோள் கொண்டார்.

இவற்றைப் பாட இலக்கிய உலகில் ஏன் காப்பிய அமைதியை மேற்கொள்ள வேண்டும் என்ற வினாவும் நியாயமானதே. சங்க கால இலக்கிய முறை எடுபடாத காலம் அது பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய சிந்தாமணி, மக்கள் மனத்தைக் கொள்ளைகொண்டு விட்டது. அங்ஙனம் கொள்ளை கொள்ள இரண்டு காரணங்கள் உண்டு. இன்ப வெறியில் மூழ்கியிருந்த மக்களுக்கு ஏற்பச் சிந்தாமணியும் சிற்றின்பச் சுவை மலிந்ததாக இருந்தது ஒன்று. அடுத்தது, அதன் பொருள்நயம் நிறைந்த பாடல், காப்பிய முறை முதலியன. எனவே, சேக்கிழார் சிந்தாமணியால் கவரப் பெற்ற மக்கள் மனத்தைத் தாமும் கவர வேண்டுமானால் அவரும் மேற் கூறிய இரு வழிகளைப் பற்றித்தான் ஆகவேண்டும். ஆனால், அவருடைய குறிக்கோளுக்கு முதற் காரணமாகிய சிற்றின்பச் சுவையைப் பாடுதல் இயலாத ஒன்று. ஆதலின், இரண்டாவது காரணத்தைச் சேக்கிழார் மேற்கொள்கிறார். காப்பிய உருவத்தில் தாம் கூறவேண்டியதைக் கூற முற்படுகிறார். தம்முடைய பொருளுக்குக் காப்பிய முறை ஏற்றதன்று என்பதை நன்கு அறிந்திருந்தும், சேக்கிழார் அதனையே மேற்கொள்கிறார். மேற்கொள்வதோடு மட்டும் அன்று; அச்சரிதங்கள் எவ்வளவு இடந்தருமோ அந்த அளவுக்கு வெற்றியும் பெறுகிறார்.

இந்தக் காப்பியத்தைக் கற்கத் தொடங்குபவர்கள் இதில் எதனைப் பெரிதாக எதிர்பார்க்கவேண்டும் என்பதற்கு அறிகுறியாக, தொடக்கத்திலேயே திருமலைச் சிறப்பு என்பவற்றை வைத்து விடுகிறார். இதனாலேயே படித்து இன்புற மட்டும் எழுதப்பெற்ற பொழுதுபோக்கு இலக்கியம் அன்று இது என்பதையுங் குறிப்பாகப் பெற வைக்கிறார்.

தலைகீழாகப் போய்க்கொண்டிருந்த தம் நாட்டு மக்களைக் கைதூக்கி நன்னெறிக்கண் செலுத்துவதே சேக்கிழாரது குறிக்கோள் என்பதும், அதனாலேயே அவர் இவ் வடியார் சரிதங்களைப் பாடினார் என்பதும், தம் கால மக்கள் மனத்தைக் கவரச் சிறந்த கருவியாதலின் காப்பிய உருவத்தை மேற்கொண்டார் என்பதும் நன்கு புலனாகும்.

## 7. வழியும் பயனும்

திருத்தொண்டர் புராணம் அறுபத்து மூன்று பெரியார்களுடைய வரலாறுகளைச் சுவைபடப் பாடிச் செல்கிறது. இந்த எண்ணிக்கை ஏன்? தமிழ்நாட்டில் இந்த அறுபத்து மூன்று நாயன்மார்கள்தாம் வாழ்ந்தார்களா? யாரும் ஆம் என்று கூற முன் வரமாட்டார்கள். பின் ஏன் இந்த எண்ணுள்ள அடியார்களைமட்டும் கூறல் வேண்டும்? விடை இரண்டு வகையாக அமையும். முதலாவது: சேக்கிழார் சுந்தரமூர்த்திகள் கூறிய திருத்தொண்டத் தொகையை விரித்துப் பாடுவதை மட்டும் மேற்கொண்டார். அவருடைய சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு அதில் இடமே இல்லை.

மற்றொரு காரணமும் உண்டு. இந்த வரலாறுகள் அனைத்தும் ஏறத்தாழ வேற்றுமையும் ஒற்றுமையும் கொண்டவை ஒருவருடைய வாழ்க்கைபோல மற்றொருவர் வாழ்க்கை அமையவில்லை என்பதைப் பெரிய புராணத்தை ஒருமுறை படித்தவர்களும் அறிதல் கூடும். ஓர் அடியாரின் பெயரைக் கூறிக் கொண்டு வாழ்ந்தே வீடுபேற்றை அடைந்தவரும் (பெருமிழலைக் குறும்பர்) இதில் உண்டு. தம் பிள்ளையைத் தம் கையாலேயே அரிந்து சமைத்து வீடு பேற்றை அடைந்தவரும் (சிறுத்தொண்டர்) இதில் உண்டு. இவர் பெற்ற பேற்றுக்கும் அவர் அடைந்த பேற்றுக்கும் வேற்

றுமை ஒன்றும் இல்லை. ஆனால், வாழ்க்கை முறையில்தான் என்ன வேறுபாடு இத்தகைய வேறுபாடுகள் நிறைந்த பல வரலாறுகளும் இருத்தலினால்தான் சேக்கிழார் இதனைப் பாட எடுத்துக் கொண்டார். இவ்வேற்றுமைகள் ஒரு புறம் இருக்க, ஒற்றுமை என்ன என்பதையும் காணுதல் வேண்டும். இவ்வடியார்கள் அனைவரும் வீடுபேறு என்ற நோக்கம் கொண்டிருந்தார்கள் என்பது ஓர் ஒற்றுமைதான். ஆனால், அந்த ஒற்றுமையை விடச் சிறப்பானது ஒன்று உண்டு. வீடுபேற்றைவிடச் சிறந்த ஒன்றை இவர்கள் அனைவரும் பெற்றிருந்தனர். அதுவே "அவர்களுடைய மன நிலையாகும். இந்த மனநிலைபற்றிச் சிறிது விரிவாக இங்கு ஆராய்வோம்.

உலகம் தோன்றிய நாள்தொட்டு வழியும் பயனும் (Ends and Means) என்ற இரண்டும் இருந்தே வருகின்றன. மனிதனை உள்ளிட்ட உயிர்கள் அனைத்தும் ஓயாமல் முயல்கின்றன. இந்த முயற்சி உடனே பயன் கிடைக்கக் கூடிய ஒன்றின் பொருட்டாக இருக்கலாம். பயன் பெரிதாக இருக்க இருக்க முயற்சியும் பெரிதாகவும் கடினமாகவும் இருத்தலை அனுபவத்தில் காணலாம். நேரடியாகவும் உடனடியாகவும் பயன் கிடைக்காத சில முயற்சிகளும் உண்டு. இந்த முயற்சியால் அடைய வேண்டிய பயனைப் பற்றி அதிகக் கருத்து வேற்றுமை இல்லை என்று கூறலாம். உலகில் தோன்றிய எல்லாச் சமயங்களும் கொள்கைகளும் இந்தப் பயனைப்பற்றி ஒருமுகமான கருத்தையே தெரிவிக் கின்றன. 'நிரதிசய இன்பம்' என்று சமயவாதி கூறுவதையே கார்ல் மார்க்ஸ் போன்றவர்களும் 'உரிமை, சமத்துவம், அமைதி, இன்பம் என்று கூறுகிறார்கள். 'இந்த உலகத்தில் மோக்ஷ சாம்ராச்சியத்தை நிலைநாட்ட வேண்டும்' என்று கூறிய இயேசுவுக்கும், 'எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே, அல்லாமல் வேறு ஒன்றறியேன்' என்று கூறிய தாயுமானவர்க்கும் பயன் என்பதன் திறத்தில் அதிக வேற்றுமை இல்லை.

இனி, இப்பயனை அடைவதற்குரிய வழி என்று கூறப் பெறுவனவற்றுள் ஒருமை இருப்பதாகவே தெரியவில்லை. கால தேச வர்த்தமானங்களை ஒட்டி, அந்த வழி மிகவும் மாறுபடும். ஒரே இடத்தில் எல்லா வகையாலும் ஒத்த நிலையில் வாழ்கிறவர்கள் இடையேயுங்கூட ஒரே வழி மேற் கொள்ளப் பெறுவதில்லை. சமத்துவத்தை அடிப்படை வாழ்க்கையாகக் கொண்டு, சமத்துவத்தையே குறிக் கோளாகவும் கொண்டு வாழ்வதாகக் கூறிக்கொள்ளும் ருஷிய நாட்டில்கூட வழியில் ஒற்றுமை இருப்பதாகத் தெரியவில்லை. இருப்பதானால் பத்து ஆண்டுகளுக்கு ஒருமுறை நூற்றுக் கணக்கானவர்களைத் 'தேச நலங் கருதி'க் காணாமற்போகச் செய்யவேண்டிய அவசியம் என்ன? எனவே, அவரவர்கள் கூறும் வழிகளில்கூட வேறுபாடுகள் இருக்கத்தான் இருக் கின்றன.

இந்த உலகில், நாம் கண்ணெதிரே காணக் கூடிய பயன்களை அடையச் செய்யும் முயற்சியிலேகூட இவ்வளவு வேற்றுமைகள் இருக்கின்றனவே' பொருளாதாரச் சமத்து வமே மக்கள் மனநோய் தீர்க்கும் மருந்து என்று கூறுகிறவர் முதல் கட்டுப்பாடு அற்ற அரசியலே எல்லாவற்றிற்கும் மருந்து என்று கூறுகிறவர் (Anarchists) வரையில் பல திறப் பட்ட கருத்து வேறுபாடு உடையவர்களைக் காண்கிறோம். இவைகள் அனைத்துமோ, அன்றிச் சிலவோ நடைமுறையில் உள்ள நாடுகள் சில உண்டு. ஆனால், இவற்றை நடை முறைக்குக் கொணர்ந்த பிறகாவது அவை அமைதியை அடைந்துவிட்டனவா என்றால் அதுதான் இல்லை! ஏன்? அமைதி என்ற ஒன்றை நாடித்தானே இவ்வளவு முயற்சி களையும் செய்தார்கள்? வழி கண்ட பிறகு அந்த வழியிற் சென்ற அவர்கள் நினைத்த பயனை ஏன் அடையவில்லை? அவர்கள் நினைத்த பயன் சரியானதுதான். ஆனால், அந்தப் பயனை அடைய மேற்கொண்ட வழி சரியானதன்று என்ற முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது. அவரவர்கள் தத்தம் வழியே சிறந்தது என்று வாய் கிழியக் கத்தினதால் மட்டும் பயன் இல்லை. வழி சிறந்ததா இல்லையா என்பதை விவ

காரத்தாலும் தருக்கத்தாலும் முடிவு செயயக்கூடாது. வழியிற் சென்று பார்த்து நினைத்த பயன் கிட்டியதா என்று காணுதலே சிறந்த முறை.

மனிதன் தோன்றிய நாள்தொட்டு அமைதி என்ற ஒன்றை நாடித்தான் அலைகிறான். இதில் கருத்துவேற்றுமை இல்லை. சிலர் இந்த உலகத்தில் அமைதி வேண்டும் என்று தேடினர். அடுத்த உலகம் ஒன்று இருப்பதாக நினைத்து அதில் அமைதி வேண்டும் என்று நாடினர் சிலர். இன்னும் சிலர் இவை இரண்டிலும் அமைதியை நாடினர். உலகம் முழுவதையும் ஆராய்ந்தாலும் யாவரும் இம் மூன்று பகுப்பினுள் அடங்கிவிடுவர்.

இந்தப் பகுப்பினருள் முதலாவது உள்ளவர்களின் விருப்பப்படி இவ்வுலகம் ஆவதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. வேற்றுமை என்பது இல்லாது ஒழிதலே அவ் வழியாகும். மனிதனுக்கு மனிதன் வேறுபட்டுக் காணப்படும் உலகியல் வேற்றுமை அனைத்தையும் அழித்துவிட்டால், இவ்வுலகம் வாழத் தகுந்த இடமாகும் என்பதே அவர்கள் கொள்கை. ஆனால், உலகியல் வேற்றுமை அழிந்த பின்னரும் மன இயல் வேற்றுமை இருந்தே தீரும் என்பதை ஏனோ இவர்கள் நினைப்பதில்லை! இறுதியாக, இவ்வுலகில் இரண்டு மனிதர்கள் இருக்கின்றவரை இரண்டு மனங்கள் இருந்துதான் தீரும். அவற்றிடையே வேற்றுமையும் இருந்துதான் தீரும். அதனை அழித்துவிட முடியாது. ஆனால், இந்தக் கட்சியர்கள், மனித மனம் சட்டதிட்டங்களுக்கு உட்படுத்தப்பெறக்கூடியது என்று நம்புகிறவர்கள். மக்கள் மனதைக்கூட அரசியலார் கட்டுப்பாடு செய்து பழக்கி விடலாம் என்று கருதுகிறவர்கள். உலகியற் பொருள்கள் அனைவருக்கும் கிடைத்த மாத்திரத்திலேயே மனம் அமைதியாகிவிடும் என்று நினைக்கும் இவர்கள், மனத்தின் கூறுபாட்டை அறியாதவர்கள் என்று இன்றைய விஞ்ஞான சாத்திரங்களும் மனத் தத்துவ நூல்களும் அறிவிக்கின்றன. ஆனால், பழங்காலத்திற்கூடத் தமிழன் இவ்வுண்மையை உணர்ந்து, 'அரிது பெற்றிடினும் பெற்றதில் விருப்பம் அறப்

பெறாதன விரும்பும் உயிர்கள்' என்று கூறினான். 'மிகவும் பாடுபட்டு ஒரு பொருளைப் பெற்றாலும், பெற்றவுடன் அதில் உள்ள ஆர்வங் குறைந்துவிட, கிடைக்காத பிற பொருள்களையும் உயிர்கள் விரும்பும்' என்பதே இதன் பொருளாகும்.

இனி, அடுத்தபடியாக உள்ளவர்கள் அமைதியை அடுத்த உலகில் தேடுபவர்கள். இந்த உலகில் எவ்வாறு இருந்தாலும் சரி, போகிற உலகில் நன்கு அமைதியுடன் வாழவேண்டும் என்று நினைக்கிறார்கள் இவர்கள். அதற்குரிய வழிகள் சிலவற்றை வகுத்துள்ளார்கள். இன்பமும் துன்பமும் வண்டிச் சக்கரம் போல வருபவை என்ற சட்டத்தைக் கொஞ்சம் அதிகப்படியாக நம்பி வாழ்க்கையைக் கொண்டு செலுத்துபவர்கள். இந்த உலகில் துன்பத்தை அனுபவித்தால்தான் இதன் முடிவில் இன்பம் கிடைக்கும். இங்கு இன்பமானால், முடிவு துன்பமாகத்தானே இருக்கும்? வாழ்க்கை என்பது உலகிற்கு ஆன்மாவைக் கொண்டு செலுத்தற்குரிய சாதனம். எனவே, முடிவை நன்கு பெற வேண்டுமானால் வாழ்க்கையாகிய வழியைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டா. இவ்வாறு நினைக்கும் இக் கூட்டத்தார் உலகின் பல பகுதிகளிலும் பல சமயக் கோட்பாடுகளிலும் உளர். இக் கொள்கையில் சிலர் இன்னும் ஒரு படி மேலே சென்று துன்பத்தைத் தேடிப் பிடித்து அனுபவிப்பதே இவ்வுலக வாழ்க்கையில் செய்யவேண்டிய கடமை என்று கருதுகிறார்கள். பொறி புலன்களை அடக்கி ஆள்வதற்கும் மனத்தை ஒருநிலைப்படுத்தற்கும் ஏற்ற வழி துன்பங்களைத் தேடிப் பிடித்து அனுபவிப்பதே என்று கருதுகின்றனர். துன்பங்களையும் வலியையும் பொறுத்துக் கொள்வதில் ஓரளவு புலனடக்கம் அமைவது மெய்தான். ஆனால் இவை அளவுக்கு மிஞ்சியவிடத்து, மனம் ஒரு நிலைப்படாமல் இதே கவலையில் ஆழ்ந்து விடுமாதலின் இவ்வழி மிக ஆபத்தானது. மேலும், வரப்போகிற உலகில் பெறப்போகும் இன்பத்திற்காக இருக்கும் உலகில் துன்பத்தைத் தேடி அனுபவித்தல் பொருத்தமா என்பதும் ஆராய்ச்சிக்குரியது.

இவ்விரண்டு வழிகளிலும் அப்பாற்பட்ட மூன்றாவது வழியே ஈண்டும் மறு உலகத்தும் அமைதி நாடும் வழியாகும். இந் நாட்டில் தோன்றிய சைவம், வைணவம் என்ற இரு பெருஞ்சமயங்களும் இவ்வழியையே மேற்கொண்டன. துன்பத்தை விரும்பி இவ்வுலகில் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கொள்கையை இவை ஆதரிப்பதில்லை. இன்பம் துன்பம் இரண்டையும் ஆக்கியவன் ஒருவனே ஆகலின், அவற்றுள் ஒன்றை ஏற்று மற்றொன்றை வெறுத்து ஒதுக்க வேண்டிய கட்டுப்பாடு இல்லை. மேலும், உலகமும் அதிலுள்ள 'தனு' 'கரண' 'புவன' 'போகம்' என்று கூறப்பெறும் அனுபவப் பொருள்களும் இறைவனாலேயே படைக்க பெற்றவையாதலின், இவற்றை அனுபவிக்கக் கூடாது என்பது அவன் கருத்தாக இருத்தற்கில்லை. எனவே, இன்பம் துன்பம் என்ற இரண்டையும் அனுபவிப்பதுடன், அவற்றில் மனம் அழுந்தி விடாமல் இருப்பதே இங்கும் அங்கும் அமைதி தேடும் வழியாகும். இந்தப் பற்றற்ற நிலையையே இந் நாட்டார் பெரிதும் போற்றினர். 'மெய்த்திரு வந்துற்றாலும், வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத்துறவையே' இவர்கள் பெரிதும் போற்றினர். பற்றற்ற இந்நிலையே சிறந்ததெனப் பல சமயங்களும் கூறலாயின.

பற்றற்ற நிலை என்று கூறினவுடன் சிலருக்கு ஒரு வகை யான ஐயம் ஏற்படலாம். பற்று அறுதல் என்றால் அது ஒரு கொள்கையாகவோ தத்துவமாகவோ இருத்தல்கூடுமா? இருக்கின்ற ஒன்றை அற்றுப் போகச் செய்தல் எதிர்மறையே (negative) தவிர, உருப்படியான கொள்கையாகுமா என நினைக்கலாம். ஆனால், பெயரளவில் பற்றறுதல் எதிர்மறை தான். பற்றற்ற நிலைக்குப் பயிற்சி பெறுதல் என்பது எல்லா வகையான நற்பண்புகளையும் வளர்க்கும் முகமாகவே முடியும். ஆசை, வெகுளி, பற்றுள்ளம், ஆணவம் முதலிய தவறான பெருந் தீங்குகளிலிருந்து விடுபட்ட பின்னரே இந்த நிலை கிடைக்கிறது.

இந்த நிலை சிறந்த பயனை அளிக்கக்கூடியது என்பதை உலகிடைத் தோன்றிய எல்லாச் சமயங்களும் கூறின. கீதை கூறும் 'நிஷ்காமிய கருமம்' இதுவே. புத்த சமயத்தின் கொள்கை இதுவே; சீனதேசத்தைச் சேர்ந்த 'லோட்சூ' (Lao Tsu) என்பாரும் இதை வற்புறுத்தினார். உலகப் பொருள்களில் பற்று அற்றுக் கடவுள்மேல் பற்று வைக்க வேண்டும் என்பதே இயேசு சமயத்தின் தீர்ந்த கொள்கை. இத் தமிழ்நாட்டிலும் "அற்றது பற்றெனில் உற்றது வீடு" (பிரபந்தம், 2690) என்றும், "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு" (குறள், 350) என்றும், "ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள், ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்" (திருமந்திரம், 2612) என்றும் கூறும் வாக்குகள் நிரம்ப உள்ளன.

பற்று அறுதல் என்ற பயனை அடைதல்வேண்டும் என்ற கொள்கையில் மிகுந்த ஒற்றுமை இருப்பதைக் கண்டோம். ஆனால், இந்தப் பயனை அடைவதற்குரிய வழிகள் வகுப்பதில் எண்ணற்ற கருத்து வேற்றுமைகள் உள்ளன. மனித மனம் விந்தைகள் நிறைந்தது. அது பற்றுக்கொள்வதற்கு உரிய பொருள் இன்னதுதான் என்று அறுதியிட்டுக் கூற இயலாது. மனம் பற்றுவதற்கு இன்ன இயல்புகள் அப் பொருளில் இருக்கவேண்டும் என்றும் கூறுதல் இயலாது இவ்வியல்புகள் பொருள்களில் நிறைந்துள்ளன என்றால் எல்லாப் பொருள்களிடத்தும் எல்லாருக்கும் பற்று இருத்தல் வேண்டும். அவ்வாறு இருப்பதில்லை. ஒருவர் முழுமனத்தோடும் பற்றுக்கொண்டுள்ள ஒரு பொருளை, மற்றொருவர் முழு மனத்தோடும் வெறுப்பதையும் நாம் காண்கிறோம்.

எனவே, மனம் பற்றுக்கொள்வதற்குரிய இயல்பு பொருளில் இல்லை என்பது தெளிவு. பின்னர் அது ஒரே இடத்தில்தான் இருத்தல்கூடும். அவ்விடந்தான் மனம் என்பது. மனமே பற்றுக்கு இருப்பிடம். மனங்கள் வேறுபடுவதுபோல அவை பற்றுக்கொள்வதும் வேறுபடும். ஒரு மனம் பற்றுக்கொண்ட பொருளிலேயே மற்றொரு மனமும்

பற்றுக்கொள்ளும் என்று கூறுவதற்கு இல்லை. இதிலிருந்து ஓர் உண்மை புலப்படும். பற்று அறுத்தல் என்பது, எல்லா மனங்களும் ஒரே வகையான பொருள்களிடமிருந்து பற்று அறுதல் என்பது அன்று. எந்தெந்த மனம் எந்தெந்தப் பொருளினிடத்துப் பற்றுக்கொண்டிருக்கிறதோ அந்த அந்தப் பற்றை அறுத்தல் வேண்டும் என்பதே கருத்து. பெரியபுராணத்தில் கூறப்பெற்றுள்ள அத்தனை பேரும் ஒரே தன்மையான மனம் படைத்தவர்கள் என்று கூறிவிட முடியாது. இவர்கள் அனைவரும் ஒரே பயனைப் பெற்றாலும், மேற்கொண்ட வழிகள் பலப்பல. மிகப் பழங் காலத்திலிருந்தே, மக்கள் சமுதாயம், பல்வேறுபட்ட மன நிலையையும் மனத்தத்துவ நிலையையும் கொண்டுள்ளவர்களால் நிறைந்தது என்ற உண்மையைப் பெரியோர்கள் நன்கு அறிந்திருந்தனர். இந்தப் பெருங் கூட்டத்துள், சிலர் முற்கூறிய உயர்நிலையை அடையக்கூடிய தகுதி வாய்ந்தவர்கள்; அதற்குரிய முயற்சியை மேற்கொள்ளக் கூடியவர்கள். மிகப் பலர் இத்தகைய தகுதியும் முயற்சியும் இல்லாதவர்கள்.

அவ்வவர் முயற்சிக்கும் தகுதிக்கும் ஏற்றபடியே வழிகள் பலவாக அமைந்துள்ளன. பற்று அறுத்தல் என்ற பயனைப் பெறக்கூடப் பல வழிகள் உள்ள காரணம் இதுவேயாகும். ஆகவே, ஒரு வழியைவிட மற்றொன்று சிறந்தது என்று கூறுகிற வாதம் பொருத்தமற்றது. ஒரே வழியில் செல்லும் அனைவருங்கூடப் பயன் வரையில் சென்று சேர்வார்கள் என்று கூறுவதற்கில்லை. பல சமயங்களில், முயற்சிக் குறைவாலும் சக்திக்கு மேற்பட்ட காரணங்களாலும் பாதி வழியில் நின்றுபோனவர்களும் உண்டு. உலகிடை வாழும் மக்கட் கூட்டத்தின் வேறுபட்ட பல மனநிலைகளையும், அம் மனநிலைகட்கேற்பப் பல்வேறு வழிதுறைகள் அமைந்திருத்தலையும், அவ்வழிகளிற் செல்வோர் பலர், சிறு பயன் கண்டு மீள்வதையும், சிலர் முழுப் பயன்கண்டு மீள்வதையும் குமரகுருபர அடிகளார் இயற்றிய அடியிற் காணும் பாடல் நன்கு விளக்குகிறது :

கேட்பதற்கே அச்சந்தான். உண்மையில், 'அடியார்' என்ற சொல் சிறப்புடையதாகவே காணப்பெறுகிறது. கடவுளுக்கு அடிமை என்று கூறியவுடன் சீறிவிழும் சகோதரர்கள் பலர், பலவற்றிற்கு அடிமைகளாக இருப்பதை மறந்துவிடுதல் ஆகாது. கேவலம் காப்பிக் குடியிலிருந்து எத்தனையோ பொருள்களுக்கு அடிமைகளாக நாம் இருக்கிறோம். பொருள்கள் ஒருபுறம் இருக்கட்டும்: வெறும் சொற்களுக்குக்கூட அல்லவா அடிமைகளாக இருக்கிறோம்? யாதேனும் ஒரு கட்சி; அக் கட்சியினுடைய கொள்கைகள் என்று சில. அவற்றிற்கெல்லாம் அறிவுபடைத்த மனிதன் அடிமை. சில சந்தர்ப்பங்களில் சில 'கூச்சல்களுக்குக்'கூட நாம் அடிமைகளாகி விடுகிறோம். எனவே, ஏதேனும் ஒன்றுக்கு அடிமை ஆதல் ஒன்றும் வியப்பில்லை! கண்ணால் காணக்கூடிய காப்பிக்கும், கட்சிக்கும், அடிமைத்தன்மை பூண்ட நாம், காணாத கடவுளுக்கு அடிமை ஆதலைப்பற்றி வியப்புற வேண்டியதில்லை; சீற வேண்டியதுமில்லை.

இஃது ஒருபுறம் இருக்க, இவ்வடியார்களைப்பற்றிச் சற்று விரிவாகக் காணலாம். பற்று அற்ற ஒருவனையே 'பெரியவன்' என்று உலகம் போற்றும் என்றும், அவனே விடுதலை பெறக் கூடிய தகுதி வாய்ந்தவன் என்றும் முற்பகுதியில் கண்டோம். இப் பற்று அறுதலே பயன் என்றும் அதற்குரிய வழிகள் பல என்றும் கண்டோம். பற்று அற்றவர்களையே அடியார்கள் என்று குறிப்பிடலாம். 'நான்' என்ற அகங்காரமும் 'எனது' என்ற மமகாரமும் அற்றவர்களே அடியார்கள். இவை இரண்டையும் அறுத்தலே பற்று அறுத்தலுக்கு வழியாகும். மிகச் சுலபமாக இரண்டு வரிகளில் கூறப்படினும், நடைமுறையில் இஃது அவ்வளவு சுலபமாக முடிகிறது அன்று. நம்முள்ளே வேறுபாடு அற்றுப் பின்னிக் கிடக்கின்ற 'நான்' என்ற உணர்ச்சியைப் போக்குவது அவ்வளவு எளிதன்று. இதனைச் செய்து முடிப்பதற்கு மக்கள் சமுதாயம் பலவழிகளைக் கையாண்டு அனுபவம் பெற்றது. இவை எல்லாம் சமய அனுபவங்கள் என்று குறிக்கப்பெறும்.

ஆதி மனிதன் முதல் இன்றைய மனிதன் வரை, மனக் கூறுபாட்டை ஆய்ந்து அதனை அடக்கி ஆள முயன்றுள் ளான். முன்பு கூறிய பற்று அறுதலுக்குச் சிறந்த வழி, அப் பற்றுத் தோன்றும் மனத்தை அடக்கிப் பழகுதலேயாகும். மனத்தை அடக்குதல் என்பது எவ்வளவு கடினமானது என்பதைக் கீழ்வரும் அனுபவ வார்த்தைகள் நன்கு விளக்கும்:

**'அடல்வேண்டும் ஐந்தன் புலத்தைவிடல் வேண்டும்**
**வேண்டிய எல்லாம் ஒருங்கு'** (குறள், 343)

**'சினம் அடங்கக் கற்றாலும் சித்தியெலாம் பெற்றாலும்**
**மனம் அடங்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே'**
பராபரக்கண்ணி–தாயுமானார்; (169)

**'மணி வெளுக்கச் சாணை உண்டு**
**எங்கள் முத்துமாரியம்மா**
**மனம் வெளுக்க வழியில்லையே**
**எங்கள் முத்துமாரியம்மா.'**
முத்துமாரி-பாரதியார்;

இம்மூன்று மேற்கோள்களும் மூன்று காலத்தில் வாழ்ந்த பெரியார்களால் கூறப்பெற்றன. இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்னர் வாழ்ந்த வள்ளுவப் பெருந்தகை கூறி யதையே. இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த தாயுமானவரும், நம் காலத்தில் வாழ்ந்த பாரதி யாரும் கூறிச் சென்றனர்.

இவ்வளவு கடினமான மன அடக்கத்தைப் பெற்றமை யால்தான் அவர்களைப் பெரியார்கள் என்று கூறுகிறோம். அஃது எவ்வளவு கடினமானது என்று அறிய வேண்டு மானால் ஒரு கணநேரம் கண்களை மூடிக் கொண்டு ஒன்றும் நினையாமல் இருந்து பார்த்தால் உண்மை விளங்கும். என்ன நடக்கும் என்பதனையுங்கூட 'ஒரு கணமேனும் கண்மூடி மௌனியாய் இருக்கவென்றால் இப்பாழ்த்தகன்மங்கள்

போராடுதே' என்ற பாடலில் தாயுமானவர் குறித்துள்ளார். இவ்வளவு கடினமான செயலைச் செய்ய இவ்வடியார்கள் ஓர் உதவியை நாடினர். உலகியலில் இவ்வனுபவம் நமக்கு ஏற்படுகிறதல்லவா? உடலுக்குத் தீங்கு ஏற்பட்டால் உடற்கூறு அறிந்த மருத்துவன் உதவியை நாம் நாடுகிறோம். மனத்தை அடக்க வேண்டுமானால் மனம் அடங்கப் பெற்றான் ஒருவன் உதவி தேவை. அவனே, 'பொறி வாயில் ஐந்து அவித்தான்' என்றும் கூறப்பெறுகிறான். இத்தகைய முழு முதற்பொருள் ஒன்றின் உதவி இல்லாவிட்டால் உலகிடை ஒன்றும் நடை பெறாது. மற்றவை ஒருபுறம் நிற்க, மனஅடக்கம் வேண்டுபவன் இவ் உதவியைப் புறக்கணிக்க முடியவே முடியாது.

சுருங்கக் கூறுமிடத்து, மன அடக்கமே இறைவனை வணங்க வழியாகும் அவனை வணங்க வேண்டுமென்றாலும் அதற்கும் அவனுடைய அருள்தான் துணை நிற்கவேண்டும். இது கருதியே மணிவாசகப் பெருந்தகை, ''அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'' என்று அருளினார். இங்ஙனம் அவனருளாலே அவன் தாள் வணங்கும் பேறு பெற்றவர் களையே அடியார்கள் என்று கூறுகிறோம்.

இதனை அடுத்துத் தோன்றும் வினா, 'ஏன் இவ்வாறு வணங்க வேண்டும்?' என்பதாகும். இவ்வினாவின் விடை இரு பகுதிகளாக அமையும். முற்கூறிய வணக்கம் அடியார்கள் மட்டும் செய்வது அன்று. சாதாரண மக்களுங்கூடச் செய் கின்றனர். வணக்கம் என்ற முறையில் இரண்டும் ஒன்றாயினும் வணக்கத்தின் அடிப்படைக் காரணம் மாறுபட் டுள்ளது. அடியார்கள் வணங்குவதற்காகவே வணங்கு பவர்கள். ஏனையோர் வணங்குதலாகிய செயலுக்கு வேறாக ஒரு பயனைக் கருதி வணங்குபவர். 'வாழ்த்துவதும் வானவர் கள் தாம் வாழ்வான்வேண்டி', என்ற திருவாசகம் இவ் வுண்மையை நினைவூட்டுகிறது. இத்தகைய மக்கள், வணக்கத்தை ஒரு கருவியாகக் கொள்கிறார்கள். இக்கருவி

யைப் பயன்படுத்தி ஒரு பயனை அடைய முயல்கிறார்கள். அப்பயன் மிகச் சாதாரணமான இவ்வுலகியல் பொருளாகவும் இருக்கலாம்; பெரும்பான்மையினர் இத்தகைய பயனையே விரும்புகின்றனர். சிலரே உலகியற் பொருளின் நிலையாமையை அறிந்து அழியாத வீட்டின்பத்தைப் பெற முயல்கின்றனர்.

வீடுபேற்றை விரும்புவதில் தவறு ஒன்றும் இல்லை. உயிர்களின் இறுதி இலட்சியம் அதுதான் என்பதிலும் ஐயம் ஒன்றும் இல்லை. ஆனால், வீடுபேற்றைப்பற்றி நன்கு அறியாதவர்கள் மட்டுமே அதனை விரும்புவதாகத் தெரிகிறது. நன்கு அறிந்தவர்கள் அதனையும் விரும்பவில்லை என்பது கண்கூடு. அதனை விரும்புகிறவர்கள் மனநிலை இதன் காரணத்தை நன்கு அறிவிக்கும். பிறவி என்றால் துன்பம் என்ற முடிவிற்கு வந்த இவர்கள். துன்பம் நிறைந்த இப்பிறவியிலிருந்து விடுபட்டு வீடுபேற்றை அடையவேண்டும் என்று விரும்பினர். சிலர், இதற்கு மாறாகப் பிறவியைத் துன்பம் என்று நினையாமல் இருந்தனர், அம்மட்டோடு இல்லை; பிறவி வேண்டும் என்றுகூடக் கருதினர். இவர்கள் இவ்வாறு விரும்புவதற்குக் காரணம் பிறவியின் பயனைப் பெறும் வழியை இவர்கள் அறிந்திருந்தமையேயாகும்.

சிரங்கு பிடித்தவன் முதுகு சொறிவதற்குக் கத்தியைப் பயன்படுத்திவிட்டு அதனால் துன்பம் நேர்ந்தபொழுது கத்தியே தவறான படைப்பு என்று நோதல் பொருத்தமுடையதன்றுதான். உடனே அவன் கத்தியை அப்பால் எறிந்து விடுகிறான் அல்லவா? அதேபோல, பிறவியின் பயனை நன்கு அறியாதார், இது வேண்டா என்று கூறுவதில் வியப்பொன்றும் இல்லை. துன்பத்தில் உழலும் இவர்கள், இதிலிருந்து விடுதலை அடையவேண்டும் என்று நினைப்பதும், அதற்கென இறைவனை வணங்குவதும் இயற்கையேயாகும். ஆனால், கத்தியின் பயனை அறிந்து பழங்களை நன்கு நறுக்கத் தெரிந்தவர்கள் கத்தியை வெறுப்பதும் இல்லை; அதனை

எறிந்துவிட முயல்வதும் இல்லை. இத்தகைய அடியார்களே தமிழ்நாட்டில் வாழ்ந்தார்கள். பிறவியின் பயனை அறிந்த இவர்கள் அதனை ஒதுக்காததோடு போற்றவுஞ் செய்தார்கள். 'வந்த பிறப்பதனை வணங்குவாம்', 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே', 'மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாம் இன்பம்' என்பன போன்ற தொடர்களைப் பிறவியை வெறுப்பவர்கள் கூறியிருக்க முடியாதே? இங்ஙனம் இவர்கள் கூறக் காரணம் என்ன?

இக்காரணத்தை ஆராய்ந்தால் தமிழ்நாட்டு அடியார்களின் உண்மைத்தன்மையை ஒருவாறு அறிய முடியும். முன்னர்க் கூறப் பெற்றபடி உலகில் எல்லாப் பொருளுக்கும் வழி என்றும் பயன் என்றும் இரண்டு உண்டு. பெரும்பாலானவர்கள் ஒரு பயனை அடையவேண்டியே ஒவ்வொரு வழியை மேற்கொள்வர். ஆனால், வழியும் பயனும் ஒன்றுதான் என்ற முடிபில் சிலர் நின்றனர். இன்னுங் கூறப்போனால் பயன் அல்லது முடிவு என்பதைப்பற்றி இவர்கள் நினைக்கூட இல்லை. பயனை அடைந்த பிறகு என்ன என்ன கிடைக்கும் என்று பிறர் எதிர்பார்த்தனரோ அவை அனைத்தையும் இவர்கள் தாம் மேற்கொண்ட வழியிலேயே கண்டனர். எனவே, முடிவு அல்லது பயனை அடைந்து ஆக வேண்டியது ஒன்றும் இல்லை என்பதுதான் இத்தகையோர் கண்ட முடிவாகும். முடிவு என்பது வீடுபேறு என்றும், அதனை அடையும் வழி என்பது இறைவனைக் கும்பிடுதல் என்றும் பிறர் கண்டனர். ஆனால், இத்தமிழ் நாட்டில் ஒரு சிலர் 'கும்பிடுதல் ஆகிய வழியையே பயன் அல்லது முடிவு என்று கண்டனர்.'

இத்தகைய தனிச் சிறப்புள்ள கொள்கை தமிழ்நாட்டில் முன்பும் இருந்ததென்றே கொள்ளக் கிடக்கின்றது. கடைச் சங்க நூல்களில் ஒன்றாகிய பரிபாடலில் கேசவனார் என்னும் புலவர் இயற்றிய செய்யுளில் (14) இது வருகின்றது. திருப்பரங்குன்றத்திலுள்ள செவ்வேளைப் பாராட்டி வேண்டும் முறையில் அமைந்தது அப்பாடல்.

.........அமர்ந்தியாம் நின்னைத்
துன்னித் துன்னி வழிபடுவதன் பயம்
இன்னும் இன்னும் அவை ஆகுக
தொன்முதிர் மரபின்நின் புகழினும் பலவே"

(யாம் மறுபடியும் உன்னை வணங்குவதன் பயன், மேலும் மேலும் உன்னை வணங்கவேண்டும் என்பதேயாம்.)

என்று முடிவுறுகிறது பாட்டு. புலவரும் அவரைச் சார்ந் தோரும் செவ்வேளை விரும்பி அடுத்தடுத்து வழிபடுவதற்குப் பயன் மீண்டும் மீண்டும் அவ்வழிபாட்டு முறைகளே தம்பால் வளர்தல்தாம் எ று இதனால் தெளிவாகிறது. இந்தக் கருத்தைச் சங்க நூல்களில் பல இடங்களில் காண முடியா விடினும், இது பழந்தமிழருக்குப் புதிதன்று என்று சொல்ல லாம். ஆயினும், ஏறத்தாழ நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலத்தில்தான் இக் கொள்கை வலுவடைந்தது. கும்பிடுதல் வழியன்று; பயன் அதுவே' என்ற எண்ணம் வலுவாக வளர்ந்தது

இவ்வாறு கூற அவர்கள் பாடல்களே நமக்கு உதவு கின்றன. பிறவியின் பயன் வணங்குவதே என்ற கருத்துக் கீழ்வரும் பாடல்களில் இடம் பெறுதல் காண்க.

'வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சம்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை'

என்றும், 'தலையே நீ வணங்காய்' என்றும் வரும் பகுதி கள் இக் கருத்தை வலியுறுத்துகின்றன.

'அச்சுதா! அமரர் ஏறே! ஆயர்தங் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்'

என்று ஆள்வார் பாடியதைவிட இன்னும் விரிவாக இக் கருத்தைக் கூற முடியாதன்றோ? இங்ஙனம் கும்பிடுவதை யல்லாமல் பிறவியில் செய்ய வேண்டுவன வேறு இருப்பதாக

இவ்வடியார்கள் நினைந்ததாகவே தெரியவில்லை. இத்தகைய கும்பிடும் பணிக்கு எத்தகைய இடர்ப்பாடேனும் எப்பொழுதாவது தோன்றினால் அவ்விடரைக் களைய அவர்கள் தயங்கினதே இல்லை. இடர் எப் பக்கத்தில் தோன்றினும், யாரால் தோன்றினும், அதனைப்பற்றிக் கவலை இல்லை. சண்டேசுவரர் வரலாறு இக் கருத்தை நன்கு வலியுறுத்தல் காணலாம். தம்முடைய வணக்கத்திற்கு இடையூறு விளைவித்தவர் பெற்ற தந்தையாகவே இருப்பினும் சிறிதும் வருந்தாமல், தந்தையார் காலைத் துண்டித்தவர் சண்டேசுரர் அல்லரோ?

இங்குக் கூறிய வழியையும் பயனையும் ஒன்றாகக் கண்டு வாழ்ந்த அடியார்கள் தமிழ்நாட்டில் ஆங்காங்கே பல்லூழிக் காலமாக இருப்பினும், அவர்கள் வாழ்க்கையை நன்கு ஆய்ந்து, அதன் தத்துவத்தை வகைப்படுத்திக் கூறிய பெருமை சேக்கிழாருக்கு உரியது. அடியார்கள் யார் என்ற வினாவிற்குரிய விடையை ஐயத்திற்கு இடமின்றித் தந்த பெரியார் அவரேயாவார். அடியார்களைப்பற்றிச் சேக்கிழார் கூறும் பல பாடல்களில் இரண்டு நோக்கற்பாலன.

**'கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்**
**ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்**
**கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.'**

**'ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே**
**பாரம் ஈசன் பணிஅலது ஒன்றிலார்**
**ஈர அன்பினர் யாதும் குறைவிலார்**
**வீரம் என்னால் விளம்பும் தகையதோ?'**

(பெ. பு.—திருக்கூட்டச் சிறப்பு, 8, 9.)

(வறுமை, செல்வம் என்ற இரட்டை நோய்களிலிருந்து விடுபட்ட மன நிறைவை உடையவர்கள்; மண் ஓடு செம்பொன் இரண்டையும் ஒன்றாக மதிப்பவர்; நாளும் வளரும் அன்புடன் இறைவனைக் கும்பிடுவது தவிர மோட்சத்தை

யும் விரும்பாத மன உறுதி படைத்தவர். அவர்கள் ஆபரணம் உருத்திராக்கமே; உடை கந்தைத்துணியே: இறைவன் பணியையே பணியாக் கொள்வர்; உயிர்களிடத்து நிறைந்த அன்புடையார்; அவர்கள் வீரத்தைப் பற்றி என்னால் அளவிட்டுக் கூற முடியுமா?)

இவ்விரண்டு பாடல்களும் ஆழ்ந்து சிந்திப்பதற்குரியன. ஓட்டையும் செம்பொன்னையும் வேறுபாடு காணாமல் அவர்கள் பார்க்கின்றனர். காரணம் என்ன? இந்த மனநிலை எத்தகையது? இதனைப் பெறுதல் எளிதல்லவே? ஒருவேளை செல்வத்தை மதியாதிருந்தாலும் வேறு சிலவற்றிலாவது பற்று இருக்கத்தானே வேண்டும்? உலகச் செல்வம் அழிவது என்று கருதி அதன்பால் நாட்டம் ஒழிந்து, அழியாத வீட்டுச் செல்வத்தை விரும்பி நிற்பவர்களான பலரைப் பற்றிக் கேட்டிருக்கிறோம். அத்தகையாளர்களா இவர்கள்? இல்லை என்கிறார் சேக்கிழார். வீட்டின்பத்தையும் இவர்கள் விரும்பவில்லையாம்! வீடும் வேண்டா விறல் அல்லது வன்மை உடையவர்களாம். ஏன் இவர்கள் வீட்டையும் விரும்பவில்லை? காரணம் இரு வகைப்படும். கும்பிடுதலாகிய வழியைத் தவிர வீடு என்ற பயனை இவர்கள் விரும்பவில்லை. மற்றொரு காரணம், வீட்டை விரும்புவதும் ஒருவகைப்பற்று தானே? வீடு வேண்டும் என்றால்கூட அதுவும் ஒரு வகை ஆசைதானே? ஆசையின் மூலம் சிறப்புடையதாயினும் ஆசை ஆசைதானே? ஆசையுடையார் அடியார் ஆதல் எங்ஙனம்? திருமூலர் வாக்கு இங்கு நினைவில் இருக்க வேண்டிய ஒன்று. ''ஆசை அறுமின்கள் ஆசை அறுமின் கள்; ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்கள்.'' இதனாலேயே போலும் அடியார்கள் வீட்டையும் விரும்பவில்லை. அவ்வாறானால் இயற்கையின் இகந்த (abnormal) மனநிலையை உடையவர்களா இவ்வடியார்கள்? அப்படியானால், ஏனையோரால் போற்றவும் பின்பற்றவும் தகுதியற்றவர்கள். இதற்கும் சேக்கிழார் விடை கூறுவார் போல், ''ஈர அன்பினர் யாதும் குறைவிலார்" என்கிறார். ஈர

அன்புடையார் என்று குறிப்பிட்டமையின் உலகியலுக்கு உட்பட்டு வாழ்பவர்கள் என்பதும் பெறப்படுகிறதன்றோ?

இத்தகைய வாழ்க்கையை மேற்கொள்ள இவ்வடியார் கட்கு மட்டும் எவ்வாறு முடிகிறது? 'பக்தி வழி'' என்ற ஒன்றை இவர்கள் கடைப்பிடித்தமையால்தான் இது இயன்றது. பக்தி என்றால் என்ன? அன்பு. நம்மால் அன்பு செய்யப்படுகிறவர் நம் பக்கத்திலேயே இருக்கவேண்டும் என்றுதானே விரும்புகிறோம்? இதே மனநிலைதான் அடியார் களிடம் காணப்பெறுகிறது. கடவுளைக் கடந்த பொருளாக இவர்கள் நினைக்கவில்லை. 'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை'யாகவே கண்டனர். 'அன்பு வலையுள் அகப்பட்ட அவனை' ஓயாது கண்டு இன்புற்றிருக்க நினைந்தனர். அதுவே வாழ்க்கையின் பயன் என்று கருதினர். இதில் தவறு ஒன்றும் இல்லையன்றோ? அறிவால் தேடி அடைய முடியாத ஒரு பொருளை, அன்பால் தேடி அடைந்த இவர்கள், அவ்வன்பின் துணையால் அப் பொருளை எப்பொழுதும் தங்கள் பக்கத்திலேயே இருத்திக்கொள்ள விழைந்தனர். அப் பொருளைப் பயனாகவும், அதனை அடையும் அன்பை வழியாகவும் இவர்கள் கருதவில்லை. ஏன்? அவன் வேறு, அன்பு வேறு என்று கருதினால்தானே வழி, பயன் என்ற ஆராய்ச்சி எல்லாம் தோன்றும்?

'அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்'
(திருமந்திரம், 270)

என்ற பேருண்மையை அறிந்துவிட்டார்கள். ஆதலின் வழியும் பயனும் ஒன்று என்ற பேருண்மையையும் அறிந்த வர்களாயினர். இதுவே தமிழ்நாட்டு அடியார்கள் கண்ட பக்திமார்க்கப் பேருண்மை. இவ்வுண்மையை அறிந்தவர் களே அடியார்களாவர்.

இவ்வுண்மையை அறிந்துகொள்ளாமையின் 'ஆல்டஸ் ஹக்ஸ்லி' என்ற மேனாட்டு அறிஞர், தமது 'வழியும் பயனும்'

(Ends and Means) என்ற நூலில் 'பக்தி மார்க்கத்தை ஞான மார்க்கத்தினும் தாழ்ந்தது என்று கூறுகிறார். மேலே கூறிய அன்பு வழிக்கும், பக்தியின் பெயரால் பிற்காலத்தில் நடை பெற்ற பூசல்களுக்கும் வேறுபாடு உண்டு. நேரே இறை வனிடம் அன்பு பூண்டு எல்லையற்ற இன்னல்களைப் பொறுத் துக்கொண்டு வேறு எதனையும் சட்டை செய்யாமல் வாழ்ந்த வர்களை மட்டுமே 'பக்தர்' அல்லது 'அடியார்' என்று கூறு கிறோம். தாம் கொண்ட பக்தி அல்லது அன்புக்கு மாறுபட்ட வர்களை வெறுத்து அவர்களுடன் பூசலிட்ட பிற்காலத்தாரை அடியார்கள் என்று குறிப்பிடவில்லை. ஆனால் பெரிய புராண வரலாறுகளில் கூட இப்படி வேற்றுச் சமயத்தாருடன் பூசலிட்டதைக் காண்கின்றோமே என்றால், அவற்றை ஆழ்ந்து நோக்கினால், அவை அரசியல், சமுதாயப் பூசல்கள் என்பது நன்கு விளங்கும். அத்தகைய பூசல் கொஞ்சமே. ஏனைய அடியார்கள் வாழ்க்கையை ஆய்ந்தால் சேக்கிழார் கூறிய அடியார்கள் யார் என்பது நன்கு விளங்கும்.

## 9. சரிதமும், சரித்திரமும்

சரிதம், சரித்திரமும் என்ற இரண்டு சொற்களுக்கும் பெரும் பாலும் பொருள் வேறுபாடு இல்லாமலே நாம் வழங்குகிறோம். ஆனால், இக்கட்டுரையளவில் இவை இரண்டிற்கும் சில வேறுபாடுகள் கற்பிக்கப் பெறுகின்றன. சரிதம் என்ற சொல்லால் வாழ்க்கைக் குறிப்பு (Biography) என்ற பொருளும் சரித்திரம் என்ற சொல்லால் வரலாறு (History) என்ற பொருளும் இங்கே கொள்ளப்பெற்றுள்ளன. 'தமிழ் இலக் கியத்தைப் புரட்டிப் பார்த்தால் இவை இரண்டும் அங்கே இடம் பெறுமா?' என்று கேட்கலாம். கேட்டு விட்டால் அதற்கு விடை அளிப்பது சற்றுக் கடினம்தான். இவை இரண்டிற்கும் நாம் என்ன பொருள் தருகிறோம் என்பதைப் பொறுத்தே மேல் கேள்விகளுக்கு விடை கூற முடியும்.

மேல் நாடுகள் அனைத்திலும் சரித்திரம் என்று கூறப் பெறும் நாட்டு வரலாறு இருக்கிறது இந்தத் தமிழ்நாட்டுக்குத் தனியான வரலாறு என்று ஒன்றுகூட இல்லை என்று வருந்திக் கூறுகிறவர்கள் உண்டு. மேலை நாடுகளில் உள்ள சிறந்த சரித்திரம் என்று இவர்கள் கூறும் நூல்களைச் சற்றுப் பார்த்தால் ஓர் உண்மை நன்கு விளங்கும். மேல் நாடுகளில் சரித்திரம் உண்டு. ஆனால், 'அவை உண்மையான நாட்டு வரலாறா? மக்கள் வரலாறா?' என்று கேட்டால், துணிந்து இல்லை என்று கூறி விடலாம். இங்கிலாந்து தேச சரித்திரம் என்று எடுத்துக்கொண்டால் இரண்டு வண்டிகளில் ஏற்றக் கூடிய அளவு நூல்கள் உண்டு. அவற்றில் சிறந்த ஒன்றை எடுத்துப் புரட்டினால் ஏமாற்றமே ஏற்படும். இங்கிலாந்து மக்களின் சரித்திரத்தை நாம் தேடப் போக, அங்கே கிடைப்பது இங்கிலாந்து மன்னர்களின் சரிதமேயாகும். அதுதானும் ஒழுங்காக இருக்குமா என்றால், இல்லை. எட்டாவது ஹென்றி எத்தனை மனைவிகளை மணந்தான், எத்தனை பேர்களை, எவ்வாறு கொன்றான் என்று கூறப் பெற்றிருக்குமே தவிர, அவன் என்ன நினைந்தான், எப்படி வாழ்ந்தான் என்ற விவரங்கள் இரா.

தேதிகளை நிர்ணயிப்பதே தம் கடமை என்ற முறையில் தான் சரித்திரங்கள் எழுதப்பெறுகின்றன. இத்தகைய சரித்திரங்களை வைத்துக்கொண்டுதான் அந்த நாட்டார் பெரிதும் கர்வம் கொள்ளுகின்றனர். தேதிகள் மட்டுந்தான் சரித்திரத்தின் உயிர்நாடி என்றால் நம்மிடம் சரித்திரம் இல்லைதான். "வரன் முறையான தேதிகளைக் கூறுவதே சரித்திரத்தின் கண்களாகும் என்று கூறினால், தமிழ்நாட்டு வரலாறு என்றும் குருடாகவே இருக்கும். ஆனால், "சரித்திரம் என்பது மக்கள் வாழ்க்கை முறையைக் கூறுவதுதான் என்றால், தென்னாட்டு வரலாறு நல்ல முறையில் இலக்கியத் தின்மூலம் கூறப்பெறுகிறது" என்று பி. டி. சீனிவாச ஐயங்கார் 'தென்னாட்டு வரலாறு' என்ற தம் நூலில் குறிக் கிறார். ஆனால், சரித்திரம் என்பது அது தானா? மக்கள்

வாழ்க்கையைக் கூறுவதுதானே உண்மையான சரித்திரம்? சமுதாயம் என்பது பல மக்கள் கூடிய ஒன்றுதானே? சமுதாயத்தின் சரித்திரம் என்றால் அதில் வாழும் மக்களின் சரிதமாகத்தானே அது இருத்தல்வேண்டும்? தாமஸ் கார்லைல் என்ற பெரியார், "சரித்திரம் என்பது பலருடைய வாழ்க்கை வரலாகும்" என்று கூறியது இங்கே நோக்கத் தக்கது "சரித்திரத்தில் அரசர்களும், அரசர் அவைகளும், போர்களும் பின்னிடம் பெற, மக்களும், அவர்கள் வாழ்க்கையும், கோயில்களும், அவர்கள் தொழில்களும் முதலிடம்பெற வேண்டிய காலம் நெருங்கிவிட்டது" என்று கூறினார் கார்லைல். ஆனால், இன்றளவும் அத்தகைய சரித்திரம் மிகுதியாக வந்ததாகத் தெரியவில்லை.

தமிழ் இலக்கியத்தை எடுத்துக்கொண்டால் சரிதமோ, சரித்திரமோ மிகுதியும் இருந்தன என்று கூறுவதற்கில்லை. உரைநடை நூல்களே இல்லாதிருந்தமையால் இவ்வகை நூல்கள் தோன்றாமல் இருந்திருக்கலாம். அன்றியும் தனிப்பட்டவர்கள் வாழ்க்கை வரலாற்றில் மிகுதியும் கவனம் செலுத்துகிற பழககமும் இந்தத் தமிழ்நாட்டில் மிகக் குறைவு. "பெரியோரை வியத்தலும் இலமே; சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே" (புறம் : 192) என்று கூறிய இனம் அல்லவா இது? ஆகவே வாழ்க்கை வரலாறு அல்லது சரிதம் என்பது மிகவும் அருமையாகவே காணப்படுகிறது.

திருத்தொண்டர் புராணம் சரிதமா அல்லது சரித்திரமா? அதனை சரிதம் என்றும் கூறலாம்; சரித்திரம் என்று கூறலாம். இவ் இரண்டு வகை நூல்களிலும் காணப்பெறும் பல நல்லியல்புகளையும் திருத்தொண்டர் புராணம் கொண்டிருக்கிறது. சங்க காலப் பாடல்கள் அனைத்தும் மக்களைப் பற்றியனவே என்றாலும் அகப்பாடல்கள் தவிர மற்றையவை மனிதனின் புறச்செயல்களைப் பற்றிப் பாடினவே தவிர, அவனுடைய மனத்தைப் பற்றிக்கூறவில்லை. ஒரோ வழிக் கூறினும் அவன் புறச்செயல்களுக்கு ஆதாரமாக அம்மனம் அமைந்தபொழுதுதான் மனஇயல்பை வெளியிட்டன.

முதன்முதலாகத் தோன்றிய சரித நூல் சிலப்பதிகாரம் ஆகும். இந்நூல் கோவலன், கண்ணகி வரலாற்றை முக்கியமாகக்கொண்டு எழுந்ததே தவிர, இளங்கோவடிகளின் புலமையை வெளியிடுவதற்காக இயற்றப்பட்டதன்று. ஆனால், அவருடைய புலமையையும் அது வெளியிடுகிறதே என்றால் ஆசிரியருக்கு அது கருத்தன்று என்பது நன்கு விளங்கும். கம்பநாடன் இயற்றிய இராமாயணம் இதனினும் மாறுபட்டது. பழைய கதையை அவன் தேர்ந்து எடுத்தது தன் புலமை வெளிப்பாட்டைக் கருதியேயாகும். ஆதலால், காப்பிய அமைப்பும் சிறப்பும் பின்னதில் மிகுதியும் இடம் பெறுகின்றன. இம்முறையில் பார்த்தால் திருத்தொண்டர் புராணம் சிலப்பதிகாரத்தைப் போன்றதேயாகும். அதில் வரும் நாயன்மார்களின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதே சேக்கிழாரின் தலையான நோக்கம். புலமை வெளிப்பாடு இரண்டாவது நோக்கமேயாகும். மேலும், இந்நூல் நாயன்மார் சரித்திரத்தைக் கூற முற்பட்டதே தவிர, தமிழ்நாட்டின் சரித்திரத்தைக் கூறவரவில்லை. என்றாலும், அவர்கள் வாழ்க்கை, நாட்டை எவ்வளவு தூரம் பாதித்ததோ அந்த அளவிற்கு நாட்டுச் சரித்திரமும் அதில் இடம் பெறலாயிற்று.

சிறந்த பெரியார் ஒருவருடைய சரிதத்தை ஒருவர் நன்கு எழுதவேண்டுமானால், எழுதுபவருக்குச் சில தகுதிகள் வேண்டும். சரிதத் தலைவருடைய வாழ்க்கை முழுவதையும் ஆசிரியர் நன்றாக அறிந்திருத்தல் வேண்டும். பலரும் அறிந்த பகுதி போக, பிறர் அறிய இயலாதனவற்றையும் அறிந்திருத்தல் வேண்டும். இன்றேல், ஆசிரியருடைய நூல் நடுநிலையிலிருந்து நீங்கியதாகிவிடும் இவ்வாறு வாழ்க்கை முழுவதும் தெரிந்தவராக ஆசிரியர் இருக்க வேண்டும் என்று கூறியதால், சரிதத் தலைவர் காலத்திலேயே நூலாசிரியரும் வாழ்ந்திருத்தல் வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆசிரியர் பிற்காலத்தவராயினும் சரிதத் தலைவரின் வாழ்க்கையைப் பூரணமாக அறிந்து கொண்டிருத்தல் வேண்டும். அங்ஙனம் அறிந்துகொள்ளச் செய்யும் முயற்சியில் கிடைக்கும் எல்லாப் பொருள்களும்

அவர் நூலுக்குப் பயன்படா. அந்தப் பொருள்களிலிருந்து அவருக்கு வேண்டியவற்றை எடுத்துக்கொண்டு ஏனைய வற்றை விட்டுவிடவேண்டும். இச் செயலில்தான் ஆசிரி யரின் முழு வன்மையையும் நாம் அறிந்துகொள்ள முடிகிறது. இவ்வளவும் தேடிப் பொறுக்கிக்கொண்ட பிறகும், பிற்காலத்தில் வாழும் ஓர் ஆசிரியர் சரிதத் தலைவரை நன்கு அறிந்துகொண்டார் என்று கூறிவிட இயலாது. ஆசிரியர், சரிதத் தலைவரின் காலத்திய சூழ்நிலைக்குச் செல்ல வேண்டும். அக்காலத்துச் சரித்திரத்தை நன்கு அறிய வேண்டும்; அக் காலத்து மக்கள் மனநிலையையும் அறியவேண்டும். அந்தச் சூழ்நிலையில் வாழ்ந்த சரிதத் தலைவர் எவ்வாறு நடந்து வாழ்ந்திருப்பார் என்பதையும் நன்கு அறிதல்வேண்டும். இவ்வளவிற்கும் பிறகு அவ் ஆசிரியர் எழுதும் சரிதமே சிறந்ததாக இருக்கும். இங்ஙனம் செய்யாமல், தமது சிறந்த புலமையால் மட்டும் வெற்றி கொள்ள முனைந்தால் அவ்வெற்றி நீண்டநாள் நிலைத்திராது. சிறந்த நடையில் கவிதையாக இருப்பினும் அதனைச் சரிதம் என்று கூறல் இயலாது.

சரித்திரமோ இதனின்று மாறுபட்டது. சரித்திரம் ஒரு சமுதாயத்தின் வரலாற்றைக் கூறுவது. சமுதாயத்தின் வரலாற்றில் ஓரளவு தனிமனிதர்கள் இடம் பெறினும் அவர் களுக்குப் பெருஞ்சிறப்பு அளித்தல் இயலாது. இவ்வாறு இடம் பெறுகின்ற தனிமனிதர்களும் சமுதாயத்தின் போக்கை மாற்றவும், திருத்தவும் முயன்று வெற்றியோ தோல்வியோ அடைந்தவர்களே ஆவார்கள். அவர்களுடைய வாழ்க்கையில் இச் செயல் ஒரு பகுதியே ஆகும். அப் பகுதியை மாத்திரம் சரித்திரம் சுருக்கிக் கூறுமே தவிர அவர்கள் வாழ்க்கை பற்றிக் கூறுவதில்லை. இன்னும் கூறப்போனால் பல மனிதர்களுடைய முயற்சியின் தோல்வியே சரித்திரம் என்றுகூடக் கூறலாம். சமுதாயம் முழுவதையும் பிடித்து ஆண்ட மாறுதல்களும் புரட்சிகளும் சரித்திரத்தில் இடம் பெறும். காட்டாற்று வெள்ளம்போல் வந்த இந்த

மாறுதல்களைத் தனிமனிதர்கள் அடக்கமுடியாமல் போன கதையையே சரித்திரம் கூறுகிறது. 'இந்தச் செயல் மனிதர்களால் செய்யப்பட்டதாயின் நிலைபெறாது; கடவுளால் செய்யப்பட்டதாயின் அதனை மீற மனிதனால் முடியாது' என்று சரித்திரம் பற்றிய ஆங்கிலப் பழமொழி ஒன்று கூறுகிறது.

இத்தகைய சரித்திரத்தை இலக்கியநலம் கருதி மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதலாவது, ஒரு காலத்தையும் அதன் சிறப்பையும் காட்ட எழுவது. இரண்டாவது ஒரு தனிமனிதனையோ சிலரையோ கூறி, அவர்கள் முயற்சியால் ஏற்பட்ட மாறுதல்களைக் குறிப்பது. மூன்றாவது, நிகழ்ச்சிகளுக்குச் சிறப்புத் தருவது. இம் மூன்று பிரிவுகளில் இரண்டாவதாக உள்ள பிரிவினை அடிப்படையாகக் கொண்டதே சரிதமாகும். சரித்திரம் என்பது இம் மூன்றையும் உட்கொண்டு தோன்றுவது. சரிதம் சரித்திரத்தின் ஓர் உட்பிரிவு போலக் காணப்பெறினும் இலக்கிய வளர்ச்சியில் அது தனி இடம் பெற்றுவிட்டது. ஏனைய மொழி இலக்கியங்களில் தனி இடம் பெற்ற சரிதம், தமிழ்மொழி அளவில் வளர்ச்சியடையாமல் நின்றுவிட்டது வருந்தத்தக்கதே. சேக்கிழாருடைய பெரியபுராணத்தைத் தவிர, 'சரிதம்' என்று கூறத்தக்க தமிழ்நூல் எதுவும் இல்லை.

சரிதம் தனிப்பட்ட மனிதர்களையும், அவர்கள் வாழ்க்கை, நினைவு, குறிக்கோள் முதலியவற்றைப் பற்றியும் பேசுவது. சமுதாயத்தின் வளர்ச்சியை அல்லது மாறுதலைக் குறிப்பது அதன் நோக்கம் அன்று. எனினும், சரிதம் யாருடைய வாழ்க்கையைக் கூறுகிறதோ அவரால் சமுதாயம் மாறுதல் அடைந்திருக்குமாயின், அந்தச் சரிதம் அதனையும் குறித்துத்தான் செல்லும். அதாவது மகேந்திர பல்லவன் காலத்தில் தமிழ்நாட்டு மக்கள் நிலையைப் பெரிதும், மாற்றி அமைத்தார் ஒரு பெரியார். அவருடைய சரிதத்தைப் பெரியபுராணம் பாடிச் செல்கிறது.

ஆனால், திருநாவுக்கரசர் புராணத்தில் உள்ள பாடல் களைக் கொண்டு மகேந்திரன் காலத்திய முழுச் சரித்திரத்தை யும் அறிந்துகொள்ள முடியாது. எவ்வளவு தூரம் அவர் வாழ்க்கை மகேந்திரனைப் பாதித்ததோ, அவ்வளவுதான் நாவுக்கரசர் புராணத்தில் இடம்பெறும். மகேந்திரவர்ம னுடைய வெற்றிச் சிறப்புக்கள் இங்குக் காணப்பெறா. அவன் மாமல்லபுரம் சமைத்த திறனும் இப் புராணத்தில் இடம் பெறவில்லை. ஆனால், பாடலிபுத்திரத்தில் இருந்த சமணப் பாழியைத் தகர்த்து, 'குணபர ஈச்சரம்' என்ற கோயிலாக அமைத்தான் என்பதை மட்டும் பெரியபுராணம் குறிக்கிறது. இக் காரியம் நிகழ, திருநாவுக்கரசர் காரணமாக இருந்தமை யின் இச்செயல் கூறப்பெறுகிறது. இம்மாதிரியே, பரஞ்சோதியார் என்ற சிறுத்தொண்டர், வாதாபியின்மேல் படை எடுத்துச் சென்று இரண்டாம் புலிகேசியை முறியடித்து. வாதாபியை அழித்த மிகப் பெரிய செய்தியுங்கூட இரண்டு வரிகள் மட்டுமே இடம் பெறுகிறது. சரித்திரப் பிரசித்தமான இப் போரைப்பற்றி இரண்டு வரிகளா பாடுவது என்றுகூடக் கேட்கத் தோன்றுகிறது. என்றாலும், சரிதத் தலைவர் செய்த செயல்களில் இதுவும் ஒன்றாதலின் பெரியபுராணம் குறித்தது. அவருடைய வரலாற்றில் இதனை ஒரு சிறந்த செயல் என்றுதான் குறிப்பிடவேண்டும். ஆனால் அவருடைய பிற செயல்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இஃது அவ்வளவு சிறப்புடையதன்று என்பதே ஆசிரியர் கருத்தாகும். எனவே, இச் செயல் புரிந்த சிறுத்தொண்டர் வரலாற்றை அறிவதால் ஓரளவு அவர் வாழ்ந்த காலத்தில் தமிழ்மக்களின் மன நிலையையும் அறிகிறோம் அல்லவா?

ஒரு சமுதாயம், காலச்சக்கரத்தில் அகப்பட்டுச் செய்த செயல்களையும், தன் விருப்பம்போல் செய்ய முயன்றதையும் அம் முயற்சியில் வெற்றியோ தோல்வியோ பெற்றதையும் சரித்திரத்தில் படிக்கிறோம். ஆனால், தனி மனிதர்களுடைய சரித்திரங்களில் இதற்கு மாறானவற்றைக் காண்கிறோம் எல்லா மனிதர்களும் செய்யும் செயல்களையே தானும்

செய்யும் ஒருவனுடைய வரலாற்றை எந்த ஆசிரியனும் சரிதமாகக் கூறுவதில்லை. ஏதேனும் செயற்கருஞ் செயல் செய்தமையாலேயே ஒருவருடைய சரிதம் ஓர் ஆசிரியரால் கூறப்பெறுகிறது. தனி மனிதர் செய்த இச் செயற்கருஞ் செயலையே ஒரு சமுதாயங்கூடச் செய்ய முயன்றிருக்கலாம். ஆனால், அச் சமுதாயம் செய்த முயற்சியைக் கூறும் சரித்திரத்தைவிடத் தனிமனிதனைக் கூறும் சரிதம் சிறந்தது. ஒரு சமுதாயத்தின் சீரிய பண்புகளைக் கூறும் சரித்திரம் பரந்துபட்ட சூரிய ஒளி போன்றது. ஆனால், தனி மனிதனின் சரிதம், அச் சூரிய ஒளியை ஓரிடத்தில் சேர்த்துத் தரும் எரிக் கண்ணாடி (lens) போன்றது. ஆசிரியனும் தனது கலைத் திறமையைக் காட்டச் சிறந்த இடம் சரிதமே தவிரச் சரித்திரம் அன்று. பல்லாயிரக்கணக்கான மக்கள் வரலாற்றை அடிப்படையில் கொண்டு தோன்றி, நூற்றுக்கணக்கானவர் செயல்களால் நடைபெறுவது சரித்திரம். அவர்களைக் கொண்டு நடைபெறும் சரித்திரத்தில் கோவை ஒன்றும் இருத்தற்கில்லை. எங்கோ ஓரிடத்தில் சிறு தவறு நேர்ந் தாலும் முழுச் சரித்திரமும் மனத்தில் பதிக்கும் படம் நன்றாக இராது. ஆனால், சரிதத்தில் இத்தகைய தவறுகள் நேர வழி இல்லை. படிப்பவருக்கும் ஒரு முழுத்தன்மை பெற்ற படம் மனத்தில் தோன்றும்.

மற்றொரு வகையாகப் பார்த்தால், சரித்திரத்திற்கு உள்ள ஏறுநடை சரிதத்திற்கு இல்லை. தனிமனிதர்களைப் பற்றிக் கவலையுறாமல் 'இழைக்கின்ற விதிமுன் செல்ல'ப் பின்னே நிகழும் பெரிய நிகழ்ச்சிகளைத் தனிமனிதர் சரிதங்களில் காண இயலாது.

சேக்கிழார் இவ்விரண்டு பெரும் பிரிவுகளையும் நன்கு உணர்ந்திருக்கிறார். தமது சிறந்த கல்வி அறிவாலும், ஒப்பற்ற அனுபவத்தாலும் பிறர் காண இயலாத அருமை யான பகுதிகளையும் கண்டுள்ளார். மேலும், சோழப் பேரரசின் முதல் அமைச்சராய் இருந்த காரணத்தால்

ஒவ்வொருவருடைய வரலாற்றையும் நன்கு அறிந்து கொள்ள முடிந்தது. சாதாரணமான நூல் ஒன்றை இயற்றவேண்டும் என்று கருதி இருந்தால் இருந்த இடத்தில் இருந்தே அவர் பாடி இருக்கலாம், வெறும் பக்தி ஊட்டுவது மட்டுமே அவர் கருத்தாக இருந்திருப்பினும் இத்துணை முயற்சி தேவை இல்லை. ஒவ்வோர் அடியாரும் பிறந்த ஊருக்குச் சென்று, அவர் வாழ்ந்த இடத்தில் அவரைப் பற்றிக் கூறப்பெறும் கர்ணபரம்பரைச் செய்திகளையெல்லாம் அறிந்துள்ளார். சிலர் யாத்திரை செய்தார்கள் என்றால் அவர்கள் சென்ற வழியே தாமும் சென்றுள்ளார். சில ஊர்கள் அவர் காலத்திற்கு முன்பே அழிந்திருப்பினும், அவ்வூர்களின் பழைய பெயரையும் இருப்பிடத்தையும் முயன்று கண்டு எழுதியுள்ளார். ஒவ்வோர் ஊரின் இடத்தையும் அவ்வூர் அமைந்த எல்லையையும் நன்கு அறிந்துள்ளார். சிறிய ஊர்களைக் கூறும்பொழுதுகூட இன்ன நாட்டில் இன்ன கூற்றத்தில் அமைந்துள்ளது என்று கூறுகிறார். சேக்கிழார் புராண ஆசிரியர் கூறுகிறபடி சோழனுக்குச் சிவகதை சொல்லுவதே இவ்வாசிரியர் கருத்தாயின் இவ்வளவு முயற்சியும் தேவை இல்லை. தாம் கூறும் சரிதங்கள் சிறந்த சரித்திரமாகவும் திகழவேண்டும் என்பதற்காகவே இவ்வளவு முயற்சியை மேற்கொண்டுள்ளார் என்று தோன்றுகிறது

தமிழ்நாட்டின் சரித்திரம் இவ்வடியார்களின் வாழ்க்கையால் பெரிதும் பாதிக்கப்பட்டதை யாரும் மறுத்தல் இயலாது. எனவே, ஒரு நாட்டு மக்களின் மனநிலை மாறுவதற்குக் காரணமாக இருந்த அடியார்களின் சரிதத்தை மட்டும் கூறுவதானாலும் அது சரித்திர உண்மைகள் பொதிந்ததாக இருக்கவேண்டும் என்று கருதியே இவ்வளவு முயற்சிகளை மேற்கொண்டுள்ளார். இவ்வரலாறுகள் தமிழ் நாட்டின் சரித்திரத்தை மாற்றி அமைத்தன என்ற காரணத்திற்காக வெறும் சரித்திரமாக ஆக்கி இருந்தால், பெரிய புராணம் இன்று அனைவரும் படித்து மகிழும் காப்பியச் சரிதமாக அமையாமல் பள்ளிப் பிள்ளைகள் கற்கும் சரித்திர

நூலாகமட்டும் அமைந்திருக்கும். சேக்கிழார் நுண்ணிய சரித்திர அறிவு பெற்றிருப்பினும் பிறப்பிலேயே கலைஞராகப் பிறந்தவர். அவருடைய நூல், நடந்ததைமட்டும் கூறும் சரிதமும் அன்று. ஏராளமான நிகழ்ச்சிகளை வரிசைப் படுத்திக் கூறி அலுப்புத் தட்டவைக்கும் சரித்திரமும் அன்று. ஒரு காப்பியக் கலைஞனைப் போலத் தம்முடைய நூலுக்கு ஒரு முழு வடிவமும் உறுப்புகளும் அமைத்துள்ளார். அக்காப்பியச் சரிதத்தின் குறிக்கோள், படிப்பவர் மனத்தைப் பக்திச் சுவையில் ஈடுபட வைப்பதுதான். இக்குறிக்கோள் எவ்வாறாயினும் நிறைவேறவேண்டும் என்பதற்காகப் பொய் புனைந்தவர் அல்லர் அவர். ஆனால், தம்முடைய சரிதத் தலைவர்கள் செய்த எண்ணற்ற செயல்களில் தம் நூலுக்கு இன்றியமையாதனவற்றைமட்டும் எடுத்துக்கொள்கிறார். முதலிலிருந்து இறுதி வரையில் தம்முடைய கடமை, 'சரிதம், 'சரித்திரம்' என்ற இரண்டிற்கும் இடையே அமைந்துள்ளதைச் சேக்கிழார் நன்கு அறிந்துள்ளார்.

சரித ஆசிரியனுக்குள்ள இடர்ப்பாடுகள் பல. அவற்றுள் ஒன்று எதைக் கூறுவது, எதை விடுவது என்பதாகும். சரித்திர ஆசிரியனுக்கு இந்தக் கவலை இல்லை. எல்லாவற்றையும் கூறுவதே அவனுடைய தொழிலாகும். ஆனால், இதே முறையைச் சரித ஆசிரியன் கடைப்பிடித்தால் நூலைப் படிப்போருக்கு அலுப்புத் தட்டும். சுவை மிகுந்த ஒரு வரலாறு கூறப் புகுந்து, சுவையற்ற பஞ்சாங்கம் எழுதிய குற்றம் ஆசிரியனைச் சேரும், இன்றேல், 'மற்றொன்று விரித்தல்' என்னும் குற்றம் வந்தடையும். இக்குற்றம் ஒரு சிறிதும் தம்மிடம் அணுகாமல் சேக்கிழார் நூல் இயற்றியுள்ளார் என்பதற்கு மேலே கூறிய இரண்டு உதாரணங்களே சான்றாகும். இம்மட்டோடு இல்லாமல் சில அழகுகளையும் செய்கிறார் ஆசிரியர். சரிதத் தலைவரின் செயல்கள் பலவற்றை ஆசிரியர் அறிதல் கூடும். ஆனால், எப்பொழுது எது நிகழ்ந்தது என்று அறிதல் கடினம். அந்தச் சந்தர்ப்

பங்களில் எல்லாம் தம் அறிவையும் அனுபவத்தையுமே துணைகொண்டு செல்லல்வேண்டும். உதாரணமாக ஒன்று நோக்குவோம்.

திருஞானசம்பந்தர் ஞானப்பால் உண்ட பின், பல ஊர்கள் தோறும் சென்று இறைவனை வழிபடுதலைக் கடப்பாடாகக் கொண்டார். இவ்வளவில் அறிந்துகொள்வதும் எந்த எந்த ஊர்கள் சென்றார் என்று அறிவதும் சரிதங் கூறவரும் ஆசிரியனுக்குச் சுலபம். ஆனால், எந்த ஊருக்கு முதலில் சென்றார் என்று அறிவது இயலாததாகும்; எனினும், சேக்கிழார் பின்வருமாறு பாடுகிறார்:

**"அந்நிலையில் ஆளுடைய பிள்ளையார்**
**தலைமுன்னம் அளித்த தூயார்**
**முன்னுதிக்க முயன்றதவத் திருநன்னி**
**பள்ளிமுதல் மறையோர் எல்லாம்"**

வந்து திருஞானசம்பந்தரைத் தமது ஊராகிய நனிபள்ளிக்கு அழைத்துச் சென்றார்கள் என்று சேக்கிழார் கூறுகிறார். இவ்வாறு கூறக் காரணம் என்ன? உலகியல் அறிவு ஒன்று தான் ஆசிரியரை இவ்வாறு பாடச் செய்தது. திருஞான சம்பந்தருடைய செயற்கருஞ் செயலால் பெருமதிப்பு அடைந்த வர்களில் இவர்கள் இரண்டாவதாக உள்ளனர். முதலாவதாக உள்ளவர்கள் சிவபாதவிருதயராகிய தந்தையின் ஊராகிய சீர்காழியில் உள்ளவர்கள். அடுத்தபடியாகத் தாயின் ஊர்க் காரர்கள் மதிப்புக் கொள்வது இயற்கைதானே? தங்கள் ஊர்ப் பெண்ணாகிய பகவதியார் பெற்ற குழந்தை செயற்கருஞ் செயல் செய்தது என்றால், அக்குழந்தையைத் தங்கள் ஊருக்கு அழைத்து வந்து அதனால் தாங்கள் பெருமை அடைய அவர்கள் முதன் முதலில் நினைந்தார்கள் என்பது எவ்வளவு பொருத்தமுடையது. தமது கூரிய உலகியல் அறிவால் இதனை நன்கு உணர்ந்த சேக்கிழார்,

"செழுந்தாளப் பொன்னிசூழ் திருநன்னி
பள்ளியுள்ளோர் தொழுது 'திங்கட்
கொழுந்தணியுஞ் சடையாரை எங்கள்பதி
யினிற்கும்பிட் டருள அங்கே
எழுந்தருள வேண்டு'மென இசைந்தருளி
............செல்வார்"

என்று பாடுகிறார்.* வெறும் சரித அறிவு ஒன்றுமட்டும் கொண்டு பாடுவதாயின் பல ஊர்களில் ஒன்றாகத் திருநனி பள்ளி சென்றார் என்று மட்டும் கூறி இருப்பார். சேக்கிழாரின் கலைத்திறனே இவ்வாறு பாடச் செய்கிறது.

இதுகாறும் கூறியவற்றிலிருந்து சேக்கிழார் சரிதம், சரித்திரம் இவை இரண்டின் ஒற்றுமை வேற்றுமைகளை நன்கு அறிந்தவரென்றும், இவை இரண்டிலும் உள்ள சிறப்பியல்புகளை எடுத்துக்கொண்டுள்ளார் என்றும், அவற்றுடன் தமது கலையறிவையும் கொண்டு சிறந்த ஒரு சரிதக் காப்பியம் செய்தார் என்றும் நன்கு அறியலாம்.

## 10. காப்பிய அமைதி

திருத்தொண்டர் புராணம் ஒரு காப்பியந்தான் என்ற முடிவை இன்று பலரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். காப்பியத்திற்குள்ள சில இலக்கணங்கள் இதனிடை இல்லை என்பது உண்மையே. ஆனால், அவ்விலக்கணங்கள் முக்கியமானவை அல்ல. திறனாய்வாளர் கருத்திற்கு இசையப் பார்த்தால் இஃது ஒரு காப்பியந்தான் என்று கூசாமல் கூறலாம் ஆனால், தமிழ்மொழியில் காப்பியம்

---

* இதனை முதலில் கூறியவர் எந்தையார் திருவாளர் பெருஞ்சொல் விளக்கனார் அ.மு. சரவண முதலியாரவர்கள்

என்று கூறப்பெறும் ஏனையவற்றோடு இது பெரிதும் மாறுபட்டது. எல்லா வகையாலும் காப்பியம் என்று கூறத்தக்க கம்பராமாயணம் என்ன காரணத்தாலோ ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகச் சேர்த்து வழங்கப்பெறவில்லை. என்றாலும், காப்பிய இலக்கணம் ஓரளவே அமைந்த மணிமேகலை பெருங் காப்பியங்களுள் ஒன்றாக வழங்கப்பெறுகிறது. இம் முறை கொண்டு பார்த்தால் காப்பியங்களின் இலக்கணம் நாளடைவில் இந் நாட்டில் பெரிதும் மாறிவரும் தன்மையை அடைந்தது என்ற தோன்றும் ஒவ்வொரு நூலையும் எடுத்துக் கொண்டு, அது தோன்றிய காலத்துள்ள இலக்கண வரம்பை அடிப்படையாகக் கொண்டு அந் நூலை அளவிட வேண்டும். பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய சிந்தாமணியைக் காப்பியம் என்பர். அதனை ஓர் அளவு கோலாகக் கொண்டு அளந்தால் 12ஆம் நூற்றாண்டில் தோன்றிய திருத்தொண்டர் புராணமும் காப்பியந்தான் என்பதில் ஐயம் இல்லை. ஏன் எனில், சிந்தாமணியைப் பெரிதும் அடியொற்றித் தோன்றியதேயாகும் பெரிய புராணம்.

இனி, இத் தனிப் பெரும் காப்பியத்துள் அமைந்த தனிச் சிறப்பைக் காண்போம். இந் நூல் காப்பியம் என்றால் இதன் தலைவர் சுந்தரமூர்த்திகளே ஆவர் அன்றோ? காப்பியத் தலைவர் நாட்டையும் அவரது ஊரையுந்தானே ஆசிரியர் வருணிக்க வேண்டும்? சுந்தரமூர்த்திகள் பிறந்தது திருமுனைப்பாடி நாடு. அந்நாட்டில் திருநாவலூர் என்ற ஊரில் அவர் தோன்றினார். இந் நாட்டையும் ஊரையும் பற்றிச் சேக்கிழார் கூறுவன இரண்டே பாடல்கள் தாம் இதை விட்டுச் சோழ நாடு பேசப் பெறுகிறது. 'நாட்டுச் சிறப்பு' என்று பெயர் தாங்கிய நாட்டுப் படலத்தில், திருவாரூர் பேசப்பெறுகிறது, 'நகரச் சிறப்பு' என்ற நகரப் படலத்தில். இதன் காரணம் என்ன? சுந்தர மூர்த்திகள் தாம் விரும்பிய பரவையாரை மணந்து, வன்றொண்டராக வாழ்ந்தது திருவாரூரில். ஆதலால், ஆசிரியர் அவ்வூரை

எடுத்துக் கொண்டார் என்று சமாதானம் கூறலாம். அதே சுந்தரர், சங்கிலியாரையும் விரும்பி மணந்து திருவொற்றியூரிலும் வாழ்ந்தாராதலின் அவ்வூரும் பாடப்பெற்றிருக்கலாம். அவ்வாறு இல்லையாதலின் அந்தச் சமாதானமும் வாய்ப்புடையதாகத் தெரியவில்லை. திருத்தொண்ட புராணத்திற்கு அடிப்படையாக உள்ளவை நாயன்மார்கள் வரலாறுகள். அந் நூல் எடுத்துக் கொண்ட அறுபத்து மூன்று நாயன்மார்களில் முப்பத்தேழு பேர் சோழ நாட்டினர். முன்னர்க்கூறப்பெற்றபடி இந் நூலை ஒரு தேசீய இலக்கியமாகக் கொண்டால் அனைத்தும் நன்கு விளங்கும். தேசீய இலக்கியமாகிய இந் நூலின் அடிப்படை அடியார்கள் வரலாறு அன்றோ? அவர்களுள் பெரும்பாலோர் வாழ்ந்தது சோணாட்டிலாகும். எனவே, ஆசிரியர் சோணாட்டைப் பாட எடுத்துக்கொள்கிறார்.

மேலும் தம்மை ஆதரித்த சோழனாகிய அநபாயனுடைய நாடும் அதுவாக இருந்தது. அக் கருத்திற்கு வன்மை அளித்தது. இனி, அடுத்துக் காணவேண்டியது திருவாரூரை ஏன்பாடினார் என்பது. எவ்வளவு பெரியவராகச் சுந்தர மூர்த்திகள் இருப்பினும், இறைவனாலேயே அவர் தடுத்து ஆட்கொள்ளப் பெற்றிருப்பினும் அவையெல்லாம் அவர் வீடு பெறுவதற்கு மட்டுமே வழி செய்தன. ஆனால், அவர் திருவாரூரில் தேவாசிரிய மண்டபத்தில் அடியார்களைச் சந்திக்காமல் இருந்திருப்பாரேயாயின் திருத்தொண்டத் தொகை தோன்றி இராதன்றோ? அஃது இல்லையாயின் தமிழ்நாட்டில் தோன்றி நிகழ்ந்த இந்தச் சமயப் புரட்சியை யாரும் அறிய முடிந்திராது அன்றோ இதனை உலகம் அறியச் செய்த பெருமை திருவாரூரைச் சாரும். ஆதலால், சேக்கிழார் அவ்வூரைப் பாட எடுத்துக் கொள்கிறார். சுந்தரர் வாழ்க்கையிலே பெரிதும் ஈடுபட்டவர் சேக்கிழார். ஆனால், சுந்தரரை இறைவன் தடுத்து ஆட்கொண்டதிலும் இறைவனை அவர் தூது அனுப்பியதிலும்

சேக்கிழார் ஈடுபடுவதைக்காட்டிலும் சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடியதில் அதிகம் ஈடுபடுகிறார். அதனாலன்றோ,

**'நேசம் நிறைந்த உள்ளத்தால்**
**நீலம் நிறைந்த மணிகண்டத்(து)**
**ஈசன் அடியார் பெருமையினை**
**எல்லா உயிரும் தொழஎடுத்துத்**
**தேசம் உய்யத் திருத்தொண்டத்**
**தொகைமுன் பணித்த திருவாளன்**
**வாச மலர் கழல்வணங்க**
**வந்த பிறப்பை வணங்குவாம்.'**

(பெ.பு.—சண்டேசுவரர், 60)

என்று அவர் மகிழ்ந்து கூறுகிறார். இராமகாதை பாட வந்த கம்பநாடன் நாட்டுச் சிறப்பினைக் கூற எடுத்துக் கொண்டு மருத நிலத்தை அரசனாக உருவகஞ் செய்து மகிழ்கிறான். 'தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கந்தாங்க...... மருதம் வீற்றிருக்கும் மாதோ' என்ற இனிய பாடலை அறியாதார் இலர். அது தசரதன் கொலு வீற்றிருப்பதைச் சூசகமாக முன்னமே அறிவிக்கிறது. எட்டு மங்கையரை மணந்த சீவகன் சரிதங் கூறப்புகுந்த திருத்தக்கதேவர் நாட்டுவளம் கூறுகிறார். 'நற்றவஞ் செய்வார்க்கிடம்; தவஞ் செய்வார்க்கும் அஃதிடம்' என, ஏமாங்கத நாட்டை வருணிக்கிறார் தேவர். எண் மடந்தையரை மணந்தும் சீவகன் இறுதியில் துறவு பூண்டு தவமியற்றப் போய்விடுகிறான் என்பதைக் குறிப்பாக இல்லற நெறி வாழ்வார்க்கும், துறவு நிலை மேற்கொள்வார்க்கும் அதுவே இடம் என்னும் பொருள்பட அவர் கூறியுள்ளார். ஆனால், சேக்கிழார் காப்பியத்தில் வருபவர்கள் இல்லறம் துறவறம் என்னும் இரண்டிலும் இருந்து, இரண்டிற்கும் அப்பாற்பட்டதாய பயனை இங்கேயே துய்த்தனர். எனவே, அதற்கு ஏற்ற முறையில் அவர் நாட்டுவளம் கூறுகிறார்.

"மேகமும் களிறும் எங்கும்
வேதமும் கிடையும் எங்கும்
யாகமும் சடங்கும் எங்கும்
இன்பமும் மகிழ்வும் எங்கும்
யோகமும் தவமும் எங்கும்
ஊசலும் மறுகும் எங்கும்
போகமும் பொலிவும் எங்கும்
புண்ணிய முனிவர் எங்கும்"
"தொண்டர்தம் இருக்கை எங்கும்......"
(பெ.பு.—திருநாட்டுச் சிறப்பு, 31, 32)

என்று பாடுமாற்றால் பின்னர் வரப்போவதை அறிவிக்கிறார்.

யாகத்தையும் சடங்கையும் கூறிய உடனேயே இன்பமும் மகிழ்வும் பேசப்பெறுகின்றன. அன்றியும், யோகமும் தவமும் கூறப்பெற்ற அதே அடியில் போகமும் பொலிவும் பேசப்பெறுகின்றன. இந்தப் பாடலே இல்லறம் துறவறம் என்ற இரண்டின் இடையேயும் வேறுபாடு காணாதவர்கள் வரலாறே இங்குப் பேசப்பெறும் என்பதை அறிவுறுத்தி நிற்கின்றது.

முன்னர் உள்ளதும் மக்கள் மனத்தைக் கவர்ந்ததுமான சிந்தாமணிக் காப்பியத்தில் சிற்றின்பச் சுவை மிகுதியும், அரசன் பல மனைவியரை மணந்த செய்தியும் அன்றோ காணக்கிடக்கின்றன? தம்முடைய காப்பியத்திலும் ஒரு வேளை மக்கள் அதனை எதிர்பார்ப்பார்களோ என்று ஐயுற்ற ஆசிரியர் முதலிலேயே அதனை மறுக்கிறார். அதனாலேயே 'திருக்கூட்டச் சிறப்பு' என்ற ஒரு பகுதி காணப்படுகிறது. இப்பகுதியில் உள்ள பதினொரு பாடல்களும் தனியே இருப்பவை. இப்பகுதி இன்றியும் நூலின் முழுத்தன்மை குறையாமல் நிலவும். என்றாலும், திருத்தொண்டர் புராணத்தின் உயிர்நாடி இப்பகுதிதான்.

காப்பியம் என்னும் மரபுக்கேற்ப நாட்டுவளம், நீர்வளம், நகர்வளம் முதலிய கூறப் புகுந்தாலும் தம்முடைய நூலின்

பொதுத் தன்மைக்கு ஏற்பதே உள்ள இவருடைய வருணனைகள் அறிந்து மகிழ்தற்குரியன. இதனால், வருணனைச் சுவையும் குறையவில்லை. காவிரியைப்பற்றிக் கூறவந்த ஆசிரியர், 'அண்ணல் பாகத்தை ஆளுடை நாயகி, உள்நெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது' (இறைவியின் கருணை போன்று விடாமல் ஒழுகுவது காவிரி) என்றும், 'வம்புலா மலர் நீரால் வழிபட்டுச் செம்பொன்வார் கரை எண்ணில் சிவாலயத் தெம்பிரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி, உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால்' (தன் கரைகளிலுள்ள பல சிவாலயங்களை விடாமல் தன் நீராலும், அதில் வரும் பூக்களாலும் வழிபடுதலின் காவிரியும் சிவனடியாராகும்) என்றும் பாடுகிறார். ஆறு, பூக்கள் தாங்கி வருதலைக் கூறுதல் மரபுதான். 'காமர் மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி' என்றுதான் இளங்கோவும் பாடுகிறார். அடியார்கள் வரலாறு கூறும் காப்பியம் என்பதைச் சேக்கிழார் தெள்ளத் தெளிய எடுத்தோதுகிறார் கீழ்வரும் பாடல்களில்:

**"........................அரனுக்கு அன்பர்**
**ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்கள் எல்லாம்"**
**"பத்தியின் பால ராகிப் பரமனுக்கு ஆளாம் அன்பர்**
**தத்தமில் கூடினார்கள் தலையினால் வணங்கு மாபோல்**
**மொய்த்தநீள் பத்தியின்பால் முதிர்தலை வணங்கி மற்றை**
**வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி எல்லாம்"**

(பெ.பு.—திருநாட்டுச் சிறப்பு, 21,22)

முற்றி விளைந்த பயிர்களுக்குச் சேக்கிழார் காட்டும் இவ்வுவமையோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டியது தேவர் சிந்தாமணியில் தரும் உவமை. 'கல்வி சேர்மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே' என்ற தேவருடைய பாடல் சிந்தாமணி நூலுக்கு ஏற்றதேயாகும். கல்வியால் பெரியவர்கள் சிறந்த அடக்கம் உடையவர்களாக வாழ்வார்கள் என்பது யாவரும் அறிந்த ஒன்று. கல்வியால் பெரியவர்கள் தம் புகழைப் பிறர் பேசக் கேட்டால் நாணத்தால்

தலை குனிவர். அதுபோல மரங்கள் தூங்கின என்ற பொருளில் 'தம் புகழ் கேட்டார் போல் தலை சாய்த்து மரந் துஞ்ச' என்று கலித்தொகை பேசுகிறது. இம் மூன்று உவமைகளும் ஒரு பொருள் கருதியே வந்துள்ளன. பழங்கால நூலாகிய கலித்தொகை மரம் தூங்குவதற்குத் தம் புகழ் பேசக் கேட்ட பெரியவர்களையும், சிந்தாமணி நெற்பயிர் முற்றி விளைந்து வளைந்திருத்தற்குக் கல்விசேர் மாந்தரையும் கூறின. ஆனால், சேக்கிழார் அதே பொருளுக்கு உவமைகூற வந்தார். அடியார்கள் ஒருவரை ஒருவர் சந்தித்தபொழுது தலை வணங்கிக்கொள்ளுதலை உவமை கூறுகிறார். அவர் நூல் முழுதும் பக்திச் சுவை மிகுதிப்பட்டிருத்தலுக்கு இது சிறந்த ஓர் எடுத்துக்காட்டாகும்.

பக்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடும் இக் காப்பியத்திற்கு ஏற்ற மனநிலை சேக்கிழாரிடம் இருந்தது. ஆனால், இவ்வொரு தகுதி மட்டும் இருந்துவிட்டால் சிறந்த காப்பியம் தோன்றிவிடாது. பல்சுவைகளும் நிறைந்த ஒரு நூலைப் பாட ஒரு சுவையைப்பற்றி மட்டிலும் நிறைந்த அறிவுடைய ஒருவர் தகுதியுடையார் என்று கூறிவிடல் இயலாது. அவ்வாறாயின் சேக்கிழாரிடம் ஏனைய தகுதிகள் இருந்தனவா? நிறைய இருந்தன என்றே கூறல்வேண்டும். உதாரணமாக ஒன்று காண்போம்.

ஒரு நாட்டில் ஒரு தலைவர் தோன்றினார் என்று கூறும்போது, அதற்கு ஏற்ற சூழ்நிலை அங்கு இருந்தது என்று கூறவேண்டுவது ஆசிரியர் கடமையாகும். சூழ்நிலை பற்றி பாடும்பொழுது இத்தகைய இடத்தில் இத்தகையவர் தோன்றுதல் இயல்புதான் என்ற எண்ணம் நம் மனத்தில் தோன்றவேண்டும். உதாரணமாக, வாணிக மனப் பான்மையை எடுத்துக்கொள்வோம் 'செய்க பொருளை' என்ற கொள்கையுடையார் இவர்கள். அப் பொருளைச் சம்பாதிக்கும் வழியில் ஒரோ வழி நடுவு நிலைமை நீங்க வேண்டினும் அஞ்சாது நீங்கவேண்டும். இல்லையெனின்

பெரும் பொருளாளராக ஆதல் இயலாத காரியம். அவர்களைப் பொறுத்தவரையில், 'முடிபு நலமாயின் வழியைப்பற்றிக் கவலைகொள்ள வேண்டா' என்பதே கொள்கை. இத்தகைய ஒரு மரபில் காரைக்கால் அம்மையார் தோன்றுகிறார். அவருடைய வாழ்க்கைக்கும் அவர் பிறந்த மரபுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. ஆனால், அம்மையார் பிறந்தது உண்மை. உடனே சேக்கிழார் அதற்குக் காரணம் கற்பிப்பார்போலப் பாடுகிகிர். காரைக்கால் வணிகர் ஒரு தனிப்பட்ட இனம் என்பது போலப் பாடுகிறார்.

**''மானமிகு தர்மத்தின் வழிநின்று வாய்மையினில்**
**ஊனமில்சீர்ப் பெருவணிகர் குடிதுவன்றி ஓங்குபதி''**

(பெ. பு.—காரைக்காலம்மை; 1)

மானத்தோடு கூடிய அறத்தின்வழி நின்று வாய்மையையும் விடாது காக்கின்ற வணிகர்கள் வாழும் ஊர் என்று கூறுகின்றார். இவ்வாறு கூறுவதால் வணிகர் குலமாயினும் காரைக்கால் அம்மையார் தோன்றத் தகுந்த சூழ்நிலை அங்கே இருந்தது என்பதைத்தான் குறிப்பாக அமைக்கிறார்.

தமிழ்நாட்டில் எத்தனையோ நல்ல ஊர்கள் உண்டு. அவை அனைத்திலும் செம்மை சான்ற ஒழுக்கமுடைய அந்தணர்கள் வாழ்ந்திருக்கலாம். பின்னர் ஞானசம்பந்தர் ஏன் சீர்காழியுள் பிறக்கவேண்டும்? இவ் வினாவை உட்கொண்டவர்போலச் சூழ்நிலை அமைக்கிறார் ஆசிரியர்.

**''அப்பதிதான் அந்தணர்தம் கிடைகள் மறைமுறையே**
**செப்பும்ஒலி வளர்பூகச் செழுஞ்சோலை புறஞ்சூழ''**

(பெ. பு.—ஞானசம்பந்தர்; 3)

(அந்தணர் மறைஒலி சோலைகளிலும் சூழ்ந்துநின்றது) அவ்வூர் இருந்தது என்றும்,

'உளங்கொள் மறை வேதியர்தம் ஓமதூ மத்திறம்
கிளர்ந்ததிரு நீற்றொளியிற் கெழுமியகண் பகலும்'

(இரவில் ஓமப் புகையும் பகலில் திருநீற்றொளியும்) அங்குச் சூழ்ந்திருந்தன என்றும் கூறுகின்றார். இத்தகைய வருணனை ஏனைய ஆசிரியரும் பாடக் கூடியதே. ஆனால், மக்கள் இந் நிலையில் வாழ்வதும் இயற்கையும்கூட இத்தகைய வாழ்விற்கு ஒத்திருந்தது என்று கூறுகையில் சேக்கிழார் ஒப்பற்ற காப்பியப் புலவர் ஆகிறார். நிலைதிணைப் பொருள்களும் சீர்காழியில் வேள்வி செய்தனவாம்.

"பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்குளரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழித்தமது நறுநெய்
நிரந்தரம் நீள்இலைக்கடையால் ஒழுகுதலால் நெடிதும்
மரங்களும் ஆகுதித் தலையவென மணத்துளதால்"
(பெ. பு.—திருஞானசம்பந்தர்; 7)

என்று இவ்வாறு அவருடைய 'கற்பனை ஊற்றெடுக்கிறது. (வயலின் ஓரத்தில், வரப்பில் மா பருத்து நிற்கின்றது. இந்த மாங்கனியின் சாறு மாவிலை வழியாகக் கீழே வழிகின்றதாம். வழிந்த சாறு வயலில் முளைத்துள்ள தாமரையின் விரிந்த மலர்மேல் விழுதல், மரங்கள் யாகஞ் செய்வதுபோல உளதாம். தாமரை நெருப்பாகவும் மாம்பழச்சாறு நெய்யாகவும் உருவகஞ் செய்யப் பெறுகிறது.)

'பூமாண்ட தீந்தேன் தொடை கீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங்கதம்..................'
(சிந்தாமணி, 31)

என்ற முறையில் வருணனை கூறிய திருத்தக்க தேவர் கவிதையும் இதுவும் ஒப்புநோக்கற்குரியன. 'வேத வேள்வியை நிலைநாட்ட வருகிறார் ஒருவர். அவர் பிறந்த

நாட்டிற்கு வருணனை கூற வேண்டுமாயின் இதைவிடச் சிறந்த முறையில் கூற இயலாதன்றோ? இம்மட்டோடு விடவில்லை ஆசிரியர். நிலைத்திணைப் பொருள்களாகிய மரங்களைக் கூறினார். இயங்குதிணைப் பொருள்களில் மக்களைப்பற்றிக் கூறியதை முன்னர்க் கண்டோம். இத் திணையில் சிறிது மக்களைவிடத் தாழ்ந்த வண்டைப்பற்றிக் கூறுகிறார்.

**"காமர்திருப் பதியதன்கண் வேதியர்போல் கடிகமழும்**
**தாமலரயும் புல்லிதழும் தயங்கியநூ லுந்தாங்கித்**
**தூமருநுண் துகள்அணிந்து துளிவருகண் ணீர்ததும்பித்**
**தேமருமென் சுரும்பிசையால் செழுஞ்சாமம் பாடுமால்"**

(பெ.பு — திருஞான சம்பந்தர், 9)

என்கிறார். வண்டுகள் மகரந்தமாகிய நீற்றை அணிந்து சாமகீதம் இசைக்கின்றனவாம். மரம், வண்டு, மக்கள் மூவரும் இந்நிலை பெற்று வாழ்ந்தமையால் ஞானசம்பந்தர் பிறக்க அவ்வூர் ஏற்ற நிலமாக இருந்தது போலும். இங்ஙனம் கற்பனை செய்து பாடி விடலாம். ஆனால், அக் கற்பனை அறிவுக்கும் அநுபவத்திற்கும் பொருத்தம் உடையதாக அமைதல் வேண்டும். கவிதையின் இயல்பறிந்தார் யாரும் இப் பாடல்களைக் குறை கூறல் இயலாது ஏனைய புலவர்கள் வருணனை இவ்வாறு பொருள் பொதிந்த கற்பனையாக இராது. கற்பனை என்ற அளவில் அவற்றை அனுபவிக்கலாம். ஆனால் பின்னர் நிகழவிருக்கும் சரித்திரத்திற்கும் கற்பனைக்கும் யாதொரு தொடர்பும் இராது. வருணனை என்றவுடன் தம்மை மறந்து கற்பனையில் இறங்கி விடுதல் கவிஞர்களுக்கு இயல்பு. சில சமயங்களில் இவ்வருணனை முன்னுக்குப்பின் முரணாகவும் நிற்கும். கவிச்சக்கரவர்த்தி கம்பனே இப்பிழைக்கு இலக்கு ஆகிவிடுகிறான். கோசல நாட்டைப்பற்றிய வருணனை அவனால் பேசப்பெறுகிறது. கற்பனை வருணனை என்று எடுத்துக்கொண்டால் இவை மிகச் சிறந்தவைதாம். "எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே, இல்லாருமில்லை உடையார்களு

மில்லை மாதோ" என்று கூறின கவிஞன், சில நூறு கவிகளுக்கு, அப்பாற் சென்றதும் இதனை மறந்துவிடுகிறான்.

இராகவன் காடு செல்லத் துணிந்தவுடன் அந்தணர்கட்குப் பசுக்களைத் தானம் செய்கிறான். ஆனால், தானம் பெறுகின்ற அந்தணர்களின் ஆசை அடங்கவில்லையாம். வாங்கியவர்களே மீட்டும் மீட்டும் வந்து வாங்குகிறார்களாம். அது தெரிந்த இராகவன் அவர்களைக் கடிந்து கொள்ளாமல் அவர்கள் பேராசையைக் கண்டு புன்சிரிப்புக் கொண்டானாம். இக் கருத்துடன்,

> **பரித்த செல்வம் ஒழியப் படருநாள்**
> **அருத்தி வேதியர்க்கு ஆன்குலம் ஈந்து அவர்**
> **கருத்தின் ஆசைக் களவின்மை கண்டு இறை**
> **சிரித்த செய்கை.........."**

என்று பாடுகிறான். இதற்கும், முன்னர்க் கூறிய வருணனைக்கும் என்ன தொடர்பு? கம்பனைத்தான் கேட்க வேண்டும். இத்தகைய முரண்பாடுகள் ஒன்றும் இன்றிச் செல்கின்றன சேக்கிழாருடைய வருணனைகளும் கற்பனைகளும்.

ஏயர்கோன் கலிக்காமர் புராணத்தில் பெரும் பகுதி சுந்தரர் வரலாறே பேசப்பெறுகிறது. சுந்தரர் சங்கிலியாரை மணந்ததும், இறைவனைத் தூது அனுப்பியதும் ஆகிய செய்திகள் வரும் இடம் இச் சரிதமே ஆகும். எனவே, இப் புராணத் தொடக்கத்தில் வருணனை வேறுவிதமாக உள்ளது. சுந்தரர் காதல் கூறும் பகுதியாகலின் ஊர்பற்றிக் கூறும் பொழுது,

> **"நஞ்சு சூழ்வன நயனியர் நளினமெல் அடிச்செம்**
> **பஞ்சு சூழ்வன காளையர் குஞ்சியின் பரப்பு"**
> (பெ. பு.—ஏயர்கோன், 2)

என்று பேசப்படுவது காண்க.

(நஞ்சு நிறைந்த கண்களையுடைய பெண்களின் காலில் பூசிய செம்பஞ்சுக் குழம்பு ஊடற்காலத்து அவர்களை வணங்கும் ஆடவர்களின் முடியில் படிந்துள்ளது.)

ஒரு காப்பியப் புலவன் வருணனையில் புகுவதனால் இரண்டு வித வன்மைகள் அவன்பால் வேண்டும். ஒன்று, அவன் கற்பனையுடன் கலந்து வருணனை செய்யும் பகுதி; ஏனையது, அவன் காணும் காட்சியை உள்ளவாறே வருணிப்பதாகும். இவ்விரண்டாவது வருணனையில்தான் கவிஞனுடைய கூர்த்த அறிவும் அநுபவமும் தெளிவாகப் புலனாகும். நாம் காணும் காட்சியைத்தான் கவிஞனும் காணுகிறான். ஆனால் நாம் கண்டும் காணாதவற்றை அவன் கண்டு விடுகிறான். இங்ஙனம் அவன் காணும் காட்சிகள் பல அவற்றுள் சிலவற்றை மட்டும் எடுத்துக் கொண்டு ஏனையவற்றைத் தள்ள நேரிடும் எவற்றை எடுப்பது, எவற்றைத் தள்ளுவது என்பதிலும் அவனுடைய வன்மையை நாம் அறிதல் கூடும். சில கவிஞர் உயர்ந்த மக்கள் வாழும் இடத்தை நன்கு அறிந்திருப்பர். அவர்கள் வாழ்க்கையை நன்கு அறிந்து, அவர்களுடன் மிகுதியும் பழகி இருப்பர். ஆதலின் அப்பகுதிகள் வரும்பொழுது நன்கு கூறிவிடுவர். ஆனால், எளிய மக்கள் வாழ்க்கை யைக் கூறுகையில் இடறிவிழுவர். இதற்கு நேர் முரணான நிலையும் உண்டு. சில கவிஞர்களே எல்லாவற்றையும் நன்கு கண்டு பாடக்கூடியவர். ஆனால், இத்தகையோர் கட்குங்கூட ஓர் இடர்ப்பாடு நேர்வதுண்டு எளிய மக்கள் வாழ்க்கை, சூழ்நிலை இவற்றைப் பாடும்பொழுது வருணனை முதலியவற்றிற்கு என்ன பொருள் அங்குளது என்று அறியாமல் தவிப்பர். அரண்மனையையும், கோவிலையும் கண்ட கண்களுக்குச் சேரியைக் கண்டால் அங்கு ஒன்றும் இல்லாதது போலவே தோன்றும். ஒரோவழி இருப்பது தெரியினும் அதனை உள்ளவாறே பாட மனம் வருவதில்லை. எனவே, குடிசை கோபுரமாகவும் சாக்கடை தீர்த்தமாகவும் காட்சியளிக்கும். இங்ஙனம் எல்லாம் இல்லாமல் சேக்கிழார் காப்பியம் அமைக்கிறார். புகழ்ச்சோழர் தலைநகராகிய உறையூரையும், காஞ்சியையும் வருணித்த அதே கவிஞர், நந்தனார் சேரியையும் வருணிக்கிறார்.

"கார்ஏறும் கோபுரங்கள்
கதிர்ஏறும் மலர்ச்சோலை
தேர்ஏறும் மணிவீதி
திசைஏறும் வசையிலணி
..........................................
..........................................
பார்ஏறும் புகழ் உறந்தைப்
பதியின்வளம் பகர்வரிதால்"

(பெ.பு.—புகழ்ச்சோழர், 7)

என்று உறையூரையும்,

"தேர்ஒலிக்க மாஒலிக்கத்
திசைஒலிக்கும் புகழ்க்காஞ்சி"

(பெ.பு.—திருக்குறிப்புத்தொண்டர் 113)

என்று காஞ்சிமா நகரையும் உள்ளவாறு வருணித்த அதே சேக்கிழார், நந்தனாருடைய ஆதனூர்ச் சேரியைக் காண்கிறார்.

"பற்றியபைங் கொடிச்சுரைமேல்
படர்ந்தபழங் கூரைஉடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல
நிறைந்துளதோர் புலைப்பாடி"

(பெ.பு.—திருநாளைப்போவார், 6)

(சுரைக்கொடி படர்ந்த வைக்கோல் வேய்ந்த குடில்கள் நிறைந்த சேரி)

என்று அப் புலைப் பாடியை நமக்குத் தூரத்தே இருந்து அறிமுகம் செய்துவைத்த கவிஞராம் கலைஞர் இன்னும் அணித்தே அழைத்துச் செல்கிறார். அதோ ஒரு வீட்டின் முன் ஒரு நாய், குட்டிகள் போட்டிருக்கிறது. மிக இளங் குட்டிகள். அங்கே வந்த இளஞ் சிறுவர்கள் நாய்க்குத் தெரியாமல் அக் குட்டிகளைக் கவர்ந்து கொண்டு, இடுப்பில் கட்டிய இரும்பு மணிகள் ஒலிக்க ஓடுகிறார்கள். தாய்

நாயைப் பாருங்கள்! குலைக்கிறது. அக் குரைப்புச் சத்தத்தையும் அவர்கள் மணி ஓசை அடக்கிவிடுகிறது வேறு என்ன செய்ய முடியும், எளியாரை வலியார் வாட்டும்போது? அடுத்தாற்போல் உள்ள மருதமரந்தான் பவளத் தூணாக இருக்கிறது. அதில் கிழிந்த தோல்தான் மரகதத் தொட்டில். நிழலில் உறங்குகிறது சேரிக் குழந்தை ஒன்று. பறை முதலிய இசைக் கருவிகள் தொங்குகின்றன எங்கும்! தற்காலத்தில் சேரிக்குச் செல்லும் சமுதாய சேவைத் தொண்டர் கண்டதுண்டா இக் காட்சியினை? அவர்தாம் சேரிக்குப் போவது பெரிய 'தியாகம்' என்று நினைத்துக் கொண்டு போகிறாரே. அவர் எங்கே காணப்போகிறார் இக் காட்சிகளை? ஆனால் சோழப் பேரரசின் முதல் அமைச்சர் இவற்றைக் கண்டு இதோ பாடுகிறார் :

**''கூர்உகிர்மெல் அடி அளகின்**
**குறும்பார்ப்புக் குழுச்சுழலும்**
**வார்பயின்முன் றிலில்நின்ற**
**வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்**
**கார்இரும்பின் சரிசெறிகைக்**
**கருஞ்சிறார் கவர்ந்தோட**
**ஆர்சிறுமென் குரைப்பு அடக்கும்**
**அரைக்கு அசைத்த இருப்புமணி.''**
**'வன்சிறுதோல் மிசைஉழத்தி**
**மகவுஉறக்கும் நிழல்மருதும்**
**தன்சினைமென் பெடையொடுங்கும்**
**தடங்குழிசிப் புதைநீழல்.''**

(பெ. பு —திருநாளைப் போவார்; 7, 8)

(கோழி தன் குஞ்சுகளுடன் உலாவுகிறது. நாயின் குட்டியைச் சிறார் கவர்ந்து ஓடுகின்றனர்.)

எனவே, இயற்கை வருணனை, கற்பனை வருணனை என்ற இரண்டு வகையிலும் தலையாய கவிதை இயற்றும்

தக்கார் சேக்கிழார் என்பதும் அவருடைய நூலில் காப்பிய அமைதி நிறைந்து காணப்பெறுகிறது என்பதும் மறுக்க ஒண்ணா உண்மைகளாம்.

## 11. சேக்கிழாரும் அரசரும்

சோழப் பேரரசின் முதல் அமைச்சராக இருந்த சேக்கிழார் தாம் இயற்றிய காப்பியத்தில் அரசர்களைப் பற்றிக் கூற நேர்ந்தால் எவ்வளவு சிறப்புடன் கூறி இருப்பார் என்று எதிர்ப்பார்ப்போம்? ஆனாலும், அவர் கூறவந்த அரசர்கள் கேவலம் உலகியலில் மட்டும் பேரரசர் என்று மதிக்கத்தக்கவர் அல்லர். 'இருவேறு உலகத்து இயற்கை'யையும் தம்முள் முரண்படாமல் ஒருசேரக் கொண்ட அரசர்கள் அவர்கள். அவர்கள் வரலாற்றைப் பாடவந்த கவிஞர், அவர்களுடைய மண்ணாள் செல்வத்தை அதிகம் மதித்ததாகத் தெரியவில்லை. அரசர் என்ற காரணத்தால் அவர்களுக்கு அதிக மதிப்புக் கொடுத்ததாகவும் தெரியவில்லை. என்றாலும், 'அரசன்' என்பவன் முன்னை வினைப்பயனால் இச் செல்வம் எய்தினான் என்ற கருத்தையே சேக்கிழார் கொண்டுள்ளார். 'திருவுடை மன்னர்' இறைவனுடைய இன்னருளால் தோன்றியவர் என்றும், அவர்களையல்லாமல் இம் மண்ணுலகம் வாழ இயலாதென்றும் அவர் கருதினார் என்றே நினைக்க இடமுண்டாகிறது.

மூர்த்தி நாயனார் வரலாற்றில் இக் குறிப்பு மிகத் தெளிவாகப் பேசப்பெறுகிறது.

**"தாழுஞ்செயல் இன்னொரு மன்னவன் தாங்க வேண்டும்
கூழும்குடி யும்முதல் ஆயின கொள்கைத் தேனும்
சூழும்படை மன்னவன் தோளிணைக் காவல் இன்றி
வாழும்தகைத்து அன்றுஇந்த வையகம் என்று சொன்னார்"**

**"பன்முறை உயிர்கள் எல்லாம் பாலித்து ஞாலங் காப்பான்**
**தன்னெடும் குடைக்கீழ்த் தத்தம் நெறிகளில் சரித்துவாழும்**
**மன்னரை இன்றி வைகும் மண்ணுலகு எண்ணுங் காலை**
**இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும் என்பார்"**

(பெ. பு.—மூர்த்தி நாயனார், 28, 29)

(வருமானம், குடிகள் ஆகியவை இருப்பினும் படையுடன் கூடிய மன்னன் காவல் இல்லையானால் இவ்வுலகம் வாழமுடியாது தன் குடைக்கீழ் மக்களைக் காக்கும் மன்னனை இல்லாத உலகம் உயிரில்லாத உடம்பைப் போன்றதாகும்.)

இவ்விரண்டு பாடல்களாலும், மன்னர்களைப் பற்றிச் சேக்கிழார் கொண்டிருந்த கருத்தை ஒருவாறு அறிய முடிகிறது. சோழப் பேரரசின் பொற்காலம் என்று அவர் வாழ்ந்த காலத்தைக் கூறலாம். இராசராசன் காலத்திலிருந்து அவருடைய காலத்தவனான 'அநபாயன்' எனப்படும் இரண்டாம் குலோத்துங்கன் காலம் வரையில் சோடையான மன்னர் ஒருவர்கூட இல்லை. இராசராசன் முதல் அனைவரும் சிறந்த சிவபக்தர்கள். திருக்கோயில்கள் கட்டுவதிலும், அவற்றுக்கு இறையிலியாக நிலங்கள் விடுவதிலும் ஒருவருக்கொருவர் போட்டி இட்டனர்.

அரசர்கள்தாம் இவ்வாறு என்றால், அவர்களுடைய தேவிமாரும் கோயில்களுக்குத் திருவாபரணம் செய்வதிலும் நிலம் விடுவதிலும் மேலும் மேலும் போட்டி இட்டனர். சேக்கிழார் காலம் வரையில் இருந்த இடைக்காலச் சோழர் பரம்பரைதான் இப்படி என்றால், அவரால் அறியப்பெற்ற பல்லவர்களும் இந்நிலையிலேயே இருந்தனர். திருநாவுக்கரசர் காலத்தவனான மகேந்திரவர்மன் ஒப்பற்ற சிவ பக்தனாக மாறிவிட்டான். பல சிவன் கோயில்கள் கட்டினான், 'பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும்' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பெற்ற பெருமை

வாய்ந்திருந்தது பல்லவகுலம். எனவே, தாம் நேரிற்கண்ட மன்னனும், அவன் முன்னோரும், அக் குலத்திற்கு முற்பட்ட பல்லவருள் தாம் அறிந்த பேரரசரும் ஆக அனைவருமே அருள் திருவும், அரசுத் திருவும் ஒருங்கே அமையப்பெற்றிருந் தமையைக் கண்ட சேக்கிழார், ''மன்னரை இன்றிவைகும் மண்ணுலகு எண்ணுங் காலை, இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும்'' என்று பாடுவதில் வியப்பு ஒன்றும் இல்லை அன்றோ?

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை, மன்னனை எல்லா வன்மையும் உடையவனாகக் கருதுவது சங்ககாலந்தொட்டு வந்த வழக்கமாகும். 'யான் உயிர் என்பது அறிகை, வேல் மிகுதானை வேந்தர்க்குக் கடனே' எனப் புறநானூறு கூறு கிறது 'மக்கட்கு இறையென்று வகைப்படும்' எனக் குறள் கூறுதல் காண்க. 'மன்பதை காக்குங் தென்புலம் காவல் என் முதற்பிழைத்தது' எனச் சிலப்பதிகாரம் கூறுவதும், 'உறங்குமாயினும் மன்னவன் தண்ணளி, கறங்கு தெண் திரை வையகம் காக்குமால்' எனச் சிந்தாமணி சிறப்பிப்பதும் இக் கருத்தை வலியுறுத்தும். எனவே, பன்னிரண்டாம் நூற்றாண்டில், சோழப் பேரரசு இறுமாந்திருந்த நிலையில் தோன்றிய சேக்கிழார், ''மண்ணில் வாழ்தரு மன்னுயிர்கட் கெலாம், கண்ணும் ஆவியும் ஆம்பெரும் காவலன்'' என்று கூறுதல் பொருத்தமுடையதே.

அரசர்களை இவ்வளவு சிறப்பித்து அவர் பாடினதற்குரிய காரணத்தையும் அறியவேண்டும் நல்வினையின் பயனாக அரசராகப் பிறந்தனர் என்ற கொள்கையை உடையவரா யினும், அரசராக ஒருவர் பிறந்த காரணத்தால் அவரைத் தாம் மதிக்கவில்லை என்பதை நன்கு வெளிப்படுத்து கிறார். சிறுத்தொண்டர் என்ற அடியார் அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர். பல்லவச் சக்கரவர்த்திகளில் ஒருவ னாகிய நரசிம்மவர்மனிடம் சேனாதிபதியாக இருந்தவர் இவ்வடியார். அப்பொழுது அவருடைய பெயர் பரஞ் சோதியார் என்பதாகும். இப் பரஞ்சோதியாரே வாதாபி

யின்மேல் படையெடுத்து இரண்டாம் புலிகேசியை வெற்றி கொண்டவர். இவரால் வெல்லப்பெற்ற புலிகேசி, வடநாட்டுப் பெருவேந்தனான ஹர்ஷ சக்கரவர்த்தியை வென்றவன் என்றால், பரஞ்சோதியாரின் பெருமையும் வீரச்சிறப்பும் கூறாமலே விளங்கும் சேனாபதியான இவர் வெற்றி பெற்றாலும், அரசனாகிய நரசிம்மவர்மனுக்குத்தானே அந்தப் பெருமையும் சிறப்பும் சென்று சேரும்? சரித்திரம் எழுதும் பொழுது இரண்டாம் புலிகேசியை வென்று வாதாபியைப் பொடியாக்கினவன் நரசிம்மவர்மன் என்றுதானே குறிக்கிறார்கள்? என்றாலும் என்ன? சேக்கிழாரைப் பொறுத்தவரை, நரசிம்மவர்மன், இரண்டாம் புலிகேசி என்ற இவ்விருவருமே சாதாரண மனிதர்கள் ஆகிவிடுகின்றனர். இவர்கள் பெயரைக் கூடக் குறிப்பிட அவர் விரும்பவில்லை. இவர்கள் பெயர்களை அவர் அறியவில்லை என்று கூற இயலாது. ஏனெனில், பரஞ்சோதியார் வாதாபியின்மேல் படை கொண்டு சென்றதை முதன்முதலில் குறிப்பவர் அவர்தாம்.

**"மன்னவர்க்குத் தண்டுபோய்**
**வடபுலத்து வாதாவித்**
**தொன்னகரம் துகளாகத்**
**துளைநெடுங்கை வரையுகைத்துப்**
**பன்மணியும் நிதிக்குவையும்**
**பகட்டினமும் பரித்தொகையும்**
**இன்னனஎண் இலகவர்ந்தே**
**இகலரசன் முன்கொணர்ந்தார்"**

(பெ பு.—சிறுத்தொண்டர், 6)

(தம்முடைய அரசனுக்காகப் படைகொண்டு சென்று வாதாபி நகரை அழித்து, யானை, குதிரை, பொன் ஆகியவற்றை நிரல்படக் கொணர்ந்து தம் அரசன் முன் வைத்தார்.)

இந்தப் பாடலின் அருங்குறிப்பு இல்லையானால் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் முதலிய நாயன்மார்களுடைய

காலம் இன்றுவரை நாம் அறிய முடியாது போயிருக்கும். ஏனெனில், இந்த நாயன்மார்களும் சிறுத்தொண்டரும் சம காலத்தவர்கள். சிறுத்தொண்டரைத் தம் பாடலில் வைத்துச் சிறப்பிக்கிறார் ஞானசம்பந்தர்.

இத்துணைச் சிறப்புடைய நரசிம்மவர்மப் பல்லவனைப் பெயரிட்டுக்கூடச் சேக்கிழார் குறிப்பிடாததன் கருத்தென்ன? ஒருவேளை அவன் சிவபக்தன் அன்று என்பதற்காக இருக்கலாம் என்று நினைக்கவும் இடமுண்டு. ஆனால், அவனைச் சிறந்த அன்பன் என்று அவரே குறிப்பிடுகிறார். பரஞ்சோதியார் பெற்ற வெற்றியை அரசன் மிகவும் பாராட்டினான் என்றும், பக்கத்தில் நின்ற அமைச்சர்கள், "மதியணிந்தார் திருத்தொண்டு வாய்த்தவலி உடைமையினால். எதிர் இவருக்கு இவ்வுலகில் இல்லை" என எடுத்துரைத்தனர் என்று சேக்கிழாரே பாடுகிறார். இதனைக் கேட்ட நரசிம்மவர்மன்,

"தம்பெருமான் திருத்தொண்டர்
எனக்கேட்ட தார்வேந்தன்
உம்பர்பிரான் அடியாரை
உணராதே கெட்டொழிந்தேன்
வெம்புகொடும் போர்முனையில்
விட்டிருந்தேன் எனவெருவுற்று
எம்பெருமான் இதுபொறுக்க
வேண்டும்என இறைஞ்சினான்"

(பெ.பு.—சிறுத்தொண்டர், 8)

(இறைவனுடைய அடியார் என்ற உண்மை தெரியாமல் உங்களைப் போர்க்களத்துக்கு அனுப்பியது பெரிய அபசாரம். தாங்கள் என்னை மன்னிக்கவேண்டும் என்று வணங்கினான்.) என்று கூறுகிறார். ஆதலின், அடியார் பெருமையினை நன்கு உணர்ந்த பக்தன் அரசன் என்பது நன்கு விளங்கும். அப்படி இருந்தும் ஆசிரியர் ஏன் அவனுடைய பெயரைக்கூடக் கூறாமல் விட்டுவிட்டார்?

இவன் ஒருபுறம் இருக்க, இவன் தந்தையாகிய மகேந்திரவர்மனைப் பற்றிச் சேக்கிழார் என்ன கூறுகிறார்? இம் மன்னவன் முதலில் வேற்றுச் சமயத்தவனாக இருந்தது உண்மையே. இதனைச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். ஆனால், கல்லையே தெப்பமாகக் கொண்டு அப்பர் பெருமான் திருப் பாதிரிப்புலியூரில். கரையேறினார் என்று அறிந்தவுடன், மன்னனாகிய மகேந்திரவர்மன் முற்றும் மனமாற்றம் பெறு கிறான். அம்மட்டோடு நிற்கவில்லை அவ்வேந்தன். அது வரையில் தான் மேற்கொண்ட சமயத்தைக் கைவிட்டுச் சைவ சமயம் புகுந்தான். பல திருக்கோயில்களை எடுப்பித் தான். திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டு முதலியவற்றால் அவனுடைய மனமாற்றம் எவ்வளவு ஆழமானது என்பதும் நன்கு தெளிய முடிகிறது. அவன் மாற்றத்தைக் கூறவந்த சேக்கிழார்,

"...........மெய்யுணர்ந்த
காடவனும் திருவதிகை
நகரின்கண் கண்ணுதற்குப்
..................................
குணபரஈச் சரம்எடுத்தான்"
(பெ.பு.—திருநாவுக்கரசர், 146)

என்று பாடுகிறார். குணபரன் என்ற சிறப்புப் பெயர் பூண்ட அம்மன்னன் அந்நாளைய வழக்கப்படி தன் பெயரா லேயே திருவதிகையில் கோயில் எடுத்தான். பரம சிவ பக்தனாக மாறிவிட்ட இம்மன்னனையாவது சேக்கிழார் பெய ரிட்டுக் குறிப்பிட்டாரா? காடவன், பல்லவன் என்று கூறுவது தவிர ஒன்றும் இல்லை. குணபரஈச்சரம் என்ற கோயில் கட்டினான் என்கிற போதாவது இப்பெயர் அவனுடைய பெயர் என்று கூறினாரா? ஏன் கூறவில்லை?

இனி, அடுத்துக் காணப்பட இருப்பவர் கழற்சிங்கர் என்ற பல்லவ மன்னர். இப்பெரியார் மிகுந்த சிவபக்தர்

திருவாரூரில் இறைவழிபாடு செய்யும் காலத்தில் இறைவனுக் குரிய பூவை எடுத்து மோந்ததற்காக மனைவியாகிய பட்டத் தரசியின் கையை வெட்டினவர். திருத்தொண்டத்தொகை அருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாழ்ந்த காலத்திலேயே வாழ்ந்தவர். 'கடல் சூழ்ந்த உலகெல்லாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்' என்பது திருத்தொண்டத்தொகை. இங்குக் காக்கின்ற, என நிகழ் காலத்தில் ஆசிரியர் பேசுகிறாராகலின் கழற்சிங்கன் என்ற பெயருடைய இப்பல்லவ மன்னர் சுந்தரர் காலத்தவர் என்று தெரிகிறது. 'உலகெல்லாம் காக்கின்ற பெருமான்' என்று சுந்தரர் பாடியுங்கூடச் சேக்கிழார் இவரைப்பற்றிச் சாதாரணமாகவே பாடுகிறார். இவருடைய பக்திச் சிறப்பை நன்கு எடுத்துக் காட்டுகிறார் சேக்கிழார் என்பதில் ஐயமொன்றும் இல்லை. பின்னர் ஏன் இவரைப்பற்றி வேறு குறிப்பொன்றும் தரவில்லை?

இவ்வாறு சேக்கிழார் பாடியதற்கு இரண்டு காரணங்கள் கூற இடமுண்டு. ஒன்று, மன்னர்களின் பக்திச் சிறப்பைப் பாட வந்தாரே அல்லாமல் அவர்களுடைய வெற்றிச் சிறப்பைப் பற்றிச் சேக்கிழார் கவலை கொள்ளவில்லை என்பது. 'நின்ற சீர் நெடுமாறன்' என்றும், கூன் பாண்டியன் என்றும் சிறப்பிக்கப் பெறும் பாண்டிய மன்னவனே திருஞான சம்பந்தரால் ஆட்கொள்ளப்பெற்றவன். மங்கையர்க்கரசியாரின் மணாளனாகிய இவன், மிகச் சிறந்த தமிழ் மன்னர்களுள் ஒருவன். 'இறையனார் களவியல்' உரையில் மேற்கோளாகக் காட்டப்பெறும் 'பாண்டிக் கோவைப்' பாடல்கள் இவனைப் பாராட்டி இயற்றப் பெற்றவையே எனத் தெரிய வருகிறது. அப்பாடல்களின் மூலமும் சரித்திரத்தின் மூலமும் இவனுடைய வெற்றிச் சிறப்புகளை அறிய முடிகிறது. 'நெல்வேலி வென்ற நெடுமாறன்' என்று இவன் சிறப்பிக்கப் பெறுவதோடு, பாழில், உழிஞம், வல்லம், பூலந்தை ஆற்றுக்குடி, கோட்டாறு, கடையுல், நறையாறு முதலிய பல இடங்களில் போர்

வென்றவன் என்றும் அறிகிறோம். இவ்வளவு சிறப்பு வாய்ந்த இவனைக் கூடச் சேக்கிழார் சாதாரணமாகவே பாடுகிறார்.

எனவே அரசர்களுடைய பக்திச் சிறப்பை அன்றி வேறு சிறப்பைப் பற்றிக் கவலைப் படாதவர் சேக்கிழார் என்ற முடிவிற்கு வருதல் கூடும். ஆனால், இம்முடிவை அடுத்து ஓர் ஐயமும் தோன்றத்தான் செய்கிறது. சோழமன்னர்களைப் பற்றிச் சேக்கிழார் பாடும்பொழுது உளங்கலந்து பாடுகிறார் என்பது மட்டிலும் உறுதி. புகழ்ச் சோழர் மனுநீதிச் சோழர் என்ற இருவரைப் பற்றிப் பாடுவதே தனிச் சிறப்பாக உளது. தம்மை ஆதரித்த அநபாயன் புகழை ஒல்லும் இடம் எல்லாம் வைத்துச் சிறப்பிக்கிறார் ஆசிரியர். 'கவிஞன் காலத்தின் பயன்' என்ற மேல் நாட்டு முதுமொழிக்கு ஏற்பச் சேக்கிழாரும் சோழர் பெருமை பாடினாரோ என்றும் நினைக்க இடமுண்டா கிறது. மேலும் தாய் நாட்டுப் பற்றும் ஒரு பெருங்காரணமாக இருக்கலாம். தான் ஒரு தமிழ் நாட்டான் என்பதை ஓயாது நினைவூட்டுகிற கம்பநாடனை யாரே மறக்க வல்லார்? கவிஞர் அனைவருக்கும் இது பொது இயல்பு போலும் சோழன் அவையில் கம்பன் வாழ்ந்திருப்பினும் அவர்களுடைய நட்பு முழு நட்பு அன்று என்றே ஊகிக்கவேண்டியிருக்கிறது. ஆனால், சேக்கிழாரோ சோழனிடம் முழு அன்பையும் சோணாட்டில் முழுப் பற்றையும் கொண்டிருந்தார். ஆகவே தான், சோழர்களை ஒரு காலத்து அடக்கி ஆண்ட பல்லவர் களையும் பாண்டியர்களையும் அவர் முழு அன்புடன் நேசித்துப் பாடவில்லையோ என நினைக்க வேண்டியிருக் கிறது. இனி, சேக்கிழார் பெரிதும் போற்றிய சோழ மன்னன் ஒருவனைப் பற்றிய வரலாற்றைச் சற்று விரிவாகக் காணலாம்.

# 12. அரசாட்சி அரிதோ? எளிதோ?

தமிழ் நாடாம் நங்கைக்குத் திலகம் போன்று அமைந்தது திருவாரூர். ஓர் ஊரின் சிறப்பை அவ்வூரில் எழும் ஒலியாலும், ஓசையாலும் அளத்தல் அந்நாளைய மரபு. திருவாரூரிலே 'வேத ஓசையும், வீணையின் ஓசையும், சோதி வானவர் தோத்திர ஓசையும், மாதர் ஆடல் மணி முழவு ஓசையும், கீத ஓசையும் எப்பொழுதும் நிறைந்து இருந்தனவாம். இங்குக் கூறிய ஓசைகளெல்லாம் மக்களுடைய மன மகிழ்ச்சியை அறிவிக்கின்றனவேயன்றி, அவர்களுடைய குறிக்கோளை வெளியிடவில்லை. சாதாரண வரலாற்றைச் சொல்ல வருகிற கவிஞர்கள் இதனுடன் நிறுத்திவிடுவர். ஆனால், வரலாற்றைக் காப்பியமாகப் பாடி அதனாலே நாட்டை நல்வழிப்படுத்த வேண்டும் என்று விரும்பிய சேக்கிழார் இதனுடன் நிறுத்தவில்லை. திருவாரூரிலே மேலே கண்ட ஓசைகள் மட்டும் நிறைந்திருந்தால் தமிழ் நாட்டின் ஏனைய நகரங்களைப் போலத்தான் அதுவும் இருந்திருக்கும். தமிழ்நாட்டின் தவப்பயனாய்த் தோன்றிய நம்பியாரூரர் ஆகிய சுந்தரமூர்த்திகள் அங்கே வந்து தங்கவும், பரவையாரை மணக்கவும், திருத்தொண்டத்தொகை பாடவும் அவ்வூருக்கு ஒரு தனிச் சிறப்பு வேண்டும் அல்லவா?

பெரியவர்கள் ஓர் ஊரில் தோன்ற வேண்டுமானால், அவ்வூரும் அதற்கேற்ற நிலைக்களமாய் அமையவேண்டும். சுந்தரமூர்த்திகள் வந்து தங்குவதற்குரிய சிறப்பைப் பெற்றது திருவாரூர் என்பதைச் சேக்கிழார் இதோ காட்டுகிறார். 'வள்ளலார் திருவாரூர் மருங்கெலாம், தெள்ளும் ஓசைத் திருப்பதிகங்கள் பைங்கிள்ளை பாடுவ; கேட்பன பூவைகள்' என்ற அடியால் இவ்வுண்மை விளக்கப்படுகிறது. தேவாரங்களைக் கிளிகள் பாட, மைனாப் பறவைகள் கேட்கின்றனவாம். கிளிகள் தேவாரம் பாடவேண்டுமானால் அவ்வூரிலுள்ள மக்கள் ஓயாமல் தேவார பாராயணம் செய்திருக்க வேண்டு

மல்லவா? இவ்வளவு நற்பண்புடைய மக்கள் வாழுகின்ற நாட்டில் அரசன் எத்தகையவனாக இருப்பான் என்று சொல்லவும் வேண்டுமா?

'மண்ணில் வாழ்தரு மன்னுயிர்கட்கு எலாம் கண்ணும் ஆவியும் போன்ற மனுநீதிச் சோழன் இவ்வழகிய சோணாட்டை ஆட்சி செய்கின்றான். அறம். பொருள், இன்பம் பயக்கும் அறநெறி தவறாமல் மறங்கடிந்து. அரசர்களெல்லாம் போற்ற ஒப்பற்ற ஆட்சி செய்யும் மனு வேந்தனுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்து வளர்கின்றான். 'இவன் தந்தை என்ன தவம் செய்தானோ இப் பிள்ளையைப் பெற' எ. ற திருக்குறளுக்கு ஏற்ப அரசிளங்குமரன் கலைகள் பலவற்றையும் கற்றுத் தெளிகின்றான்.

ஒருநாள் மாலைப்பொழுது, யாவர் மனத்தையும் இன்பம் ஈர்க்கின்றது; வெளியே சிற்றுலாச் செல்லத் தூண்டுகிறது. அரசகுமாரனும் உலவப் புறப்படுகிறான். முரசம் முழங்குகிறது; சங்கொலி ஒரு பால் துளும்புகிறது; வீரர்கள் சூழ்ந்து வருகின்றனர்; ஆலத்தி எடுக்கும் பெண்கள் ஒருபுறம்: மங்கலம் கூறி வாழ்த்துகிறவர் ஒருபுறம். இவர் அனைவரின் நடுவே பொன்னால் ஆகிய தேரின்மேல் அரசகுமாரன் அமர்ந்து அழகாகக் காட்சி அளிக்கின்றான்.

'அம்மா' என்ற அலறல் ஒலி எழுகின்றது. யாவரும் மருள்கின்றனர். இங்குமங்கும் பார்க்கின்றனர். எங்கிருந்து எழுந்தது இவ்வொலி? நெஞ்சைக் கசக்கிப் பிழிவது போன்ற குழறல்! ஆ, இதென்ன? பசுங்கன்று தேர்க்காலின் அடியில் கிடக்கின்றதே! ஐயோ! ஒரே இரத்த வெள்ளம்! அரசிளங் குமரனும் இக் காட்சியைக் காண்கிறான். "பூங்கோயில் அமர்ந்தருளும் பெருமானே! ஈதென்ன கொடுமை! இந்தப் பசுவும், இதன் கன்றும் இன்று என் உணர்வெனும் பெருமையை எல்லாம் உண்டுவிட்டனவே! மண்ணுலகம் காக்கும் என் தந்தைக்கு மகனாக நான் ஏன் பிறந்தேன்?! உலகில் இல்லாப் பழியை அவருக்குத் தேடித்தரவா பிறந்தேன்! அமைச்சர்களே! எந்தையார் இதனை அறியா

முன்னம் என்ன கழுவாய் தேடவேண்டுமோ, அதனை உடனே செய்திடுக'' என்று வேண்டுகிறான்.

'சோழனின் பழிச் சப்தமோ, அவன் பாவத்தின் ஒலியோ, அரசகுமாரன் உயிரைக் கொள்ளவரும் எமனுடைய வாகனத்தின் கழுத்து மணி ஓசையோ' என்று சொல்லும்படி யாக நீண்ட நாளாக ஒலிக்காத அரண்மனை ஆராய்ச்சிமணி ஒலிக்கிறது. என்றும் கேளாத இந்த மணி ஓசையைக் கேட்ட வேந்தன் விரைந்து வாயிலுக்கு வருகிறான். ஈதென்ன புதுமை! மனிதர் யாரும் இங்கில்லையே? ஒரு பசுவன்றோ நிற்கிறது. ஏன் இதன் கண்களிலிருந்து நீர் ஆறாகப் பெருகுகிறது? கொம்பால் இது மணியை அடிப்பானேன்? அரசனுக்கு வியப்பும் ஆராய்ச்சியும் ஒருங்கே தோன்று கின்றன. அருகே அமைச்சர்கள் நிற்கின்றனர். அமைச்சர் கள் செம்மையாக இருந்தால் இத்தகைய அநீதி நடைபெறுமா என்று கேட்பான்போல அவர்களை இகழ்ந்து நோக்குகிறான். இந்நிலையில் முதலமைச்சன் மிகவும் பணிவுடன் அரசனின் திருவடிகளில் விழுந்து வணங்கிக் கூறுகிறான்:

''வளவ! நின் புதல்வன் ஆங்கோர்
மணிநெடுந் தேர்மேல் ஏறி
அளவில் தேர்த் தானை சூழ
அரசுலாந் தெருவில் போங்கால்
இளைய ஆன் கன்று தேர்க்கால்
இடைப்புகுந்து இறந்த தாகத்
தளர்வுறும் இத்தாய் வந்து
விளைத்தது இத் தன்மை என்றான்.''

(பெ. பு.—திருநகரம்; 31)

(அரசகுமாரன் தேர்மேல் ஏறி அரச வீதியில் செல்லும் போது தானாகவே வந்து தேர்க்காலில் அடிப்பட்டு இறந்தது பசுங்கன்று. அக் கன்றின் தாய் இங்கு வந்து மணி அடிக் கின்றது.)
என்றான்.

பார்ப்பதற்கு எளிமையாகவும், பொருள் விளக்கமாகவும் உள்ள இப் பாடலிலே சேக்கிழாரின் கவித்திறம் பொங்கி வழிவதைக் காணலாம். பேசுபவன் மதிநுட்பம் மிகவுடைய முதலமைச்சன். பேசப்படுபவன் உலகம் போற்றும் மனுநீதிச் சோழன். குற்றம் இழைத்தவன் சோழனின் ஒரே புதல்வன். குற்றம் இழைக்கப்பெற்றது பசுங்கன்று. இப்படிப்பட்ட சூழ்நிலையில் அரசனின் மகன் செய்த குற்றத்தை அரசனிடமே எடுத்துக்கூற வேண்டிய இக்கட்டான நிலை அமைச்சனுக்கு ஏற்பட்டிருக்கிறது. எவ்வளவு அழகாகவும் சாமர்த்தியமாகவும் அமைச்சன் பேசுகிறான்! 'வளவ'! என்று விளிக்கின்றான் மன்னனை. 'வளவ' என்ற சொல்லுக்குச் சோழன் என்று பொருளானாலும், 'வளப்பமுடைய நாட்டின் தலைவனே' என்பது இங்கே பொருளாகும்.

எனவே, நடைபெற்ற இச் சிறு நட்டத்தைப் பொருட்படுத்த வேண்டா என்பது குறிப்பு. அடுத்து யார் குற்றம் செய்தார் என்று அறிந்துகொள்ளத் துடிக்கும் மன்னனை நோக்கி நின் புதல்வன் என்று கூறுவதனால் ஓரளவு மன்னனின் கோபத்தைத் தணிக்க முற்படுகிறான். இதனை அடுத்து 'ஆங்கு' என்ற சொல்லால் எங்கோ ஒரு தவறு நடந்துவிட்டதைக் குறிக்கிறான். மனித மனம் கண்ணெதிரே காணும் கொடுமையில் ஈடுபடுவதுபோல வெகுதூரத்திற்கப்பால் நடந்த ஒன்றில் ஈடுபடுவதில்லை 'ஆங்கு' என்ற சுட்டால் நடைபெற்ற நிகழ்ச்சியின் கொடுமையை மேலும் குறைக்க முற்படுகிறான் அமைச்சன்.

இனி 'மணிநெடுந் தேர்' என்பது தொடங்கி 'போங்கால்' என்பதுவரை அரசகுமாரனைப்பற்றிய செய்தியாகும். 'மணிகள் கட்டிய பெரிய தேரின்மேல் ஏறித்தேர்ப் படைகளும் யானைப் படைகளும் சுற்றிலும் சூழ்ந்துவர, அரசர்கள் உலாப் போவதற்கே உரிய தெருவில் போகும்பொழுது' என்பதே இவ்வடியின் பொருள். இதிலுள்ள ஒவ்வொரு சொல்லும் மிக்க

பொருளாழம் உடையதாய் அமைக்கப் பெற்றிருக்கிறது. தேர் போகும்பொழுது அதில் உள்ள மணிகள் ஒலிக்கும். ஆதலால், பசுங்கன்றின் சத்தத்தை அரசகுமாரன் கேட்டிருக்க முடியாது என்பது கருத்து. நெடுந்தேர் என்றதால் அவ்வளவு உயரத்தில் இருந்து பசுங்கன்றைப் பார்த்திருக்கவும் முடியாது என்ற குறிப்பையும் பெற வைக்கிறான். மேலும் தேர்ப்படைகளும் காலாட்படைகளும் தேரை நான்குபுறமும் சுற்றிச் சூழ்ந்து வருவதால் எக்காரணத்தைக் கொண்டும் இக்கன்றைக் குமரன் பார்த்திருக்க வழியில்லை என்பதும் அமைச்சனின் வாதம். இத்தனை பேர்களும் சூழ்ந்து வருகையில், இவர்களைத் தாண்டிவந்து தேர்க்காலில் பசுங்கன்று அகப்பட்டது என்றால் அதனைத் தடுக்காமல் இச்செயல் நிகழவிட்டது, சூழ்ந்துவந்த வீரர்களின் குற்றமே அன்றி, அரசகுமாரன் குற்றமன்று என்பதையும் அமைச்சன் குறிப்பாக அறிவிக்கிறான்.

இன்றுகூட எத்தனையோ விபத்துகள் நடைபெறுகின்றன. ஆனால், குற்றவாளி யார் என்று முடிவு செய்கையில் குற்றம் நடந்த இடத்தைத்தான் கணக்கு எடுக்கிறார்கள். இடப்புறம் வண்டிகள் செல்லவேண்டும் என்ற சட்டத்திற்குட்பட்டு வண்டிகள் செல்கையில், அதனை மீறி வலப்புறமாகச் சென்று, அதனால் விபத்து ஏற்பட்டிருப்பின் வலப்புறம் சென்றவனே அதிகக் குற்றம் இழைத்தவனாகிறான். 'உள்ளே போக மட்டும்' என்று அடையாளமிட்டுள்ள தெருவின் வழியாக ஒருவன் வெளியேவர முயன்று அதனால் விபத்து ஏற்பட்டிருப்பின், அவன் இரண்டு குற்றங்கள் இழைத்தவனாகிறான். காரணம் உள்ளே செல்லும் வண்டிக்காரனுக்கு மட்டுமே இட உரிமை (Right of Passage) இந்த இடத்தில் உண்டு.

இவ்வுண்மையை மனத்தில் கொண்ட அமைச்சன் 'அரசு உலாம் தெருவில் போங்கால்' என்று கூறுகிறான். தேரும்' படைகளும் செல்லக்கூடாத வழியாக இருந்து அதில்

குமரன் சென்றிருந்தால் ஒருவேளை குற்றமாகலாம். ஆனால், அவன் சென்றது அரசன் உலாப்போவதற்கு உரிய வழி அல்லது தெருவாகும். இன்னும் கூறப்போனால் பசுங் கன்றுக்கு அங்கேவர உரிமையே இல்லை எனக்கூடக் கூறலாம். எனவே, இந்தத் தெருவில் பசுங்கன்று வந்து தேர்ச்சக்கரத்தில் வீழ்ந்தது என்றால், அது குமரன் குற்றம் ஆகாது என்பது அடுத்த வாதம்.

'இளைய ஆன் கன்று' என்று கூறியதால் அது துள்ளித் திரியும் இயல்புடையது என்பதும், விபத்து நேரும் என்பதை அறியாத பருவம் உடையது என்பதையும் குறித்துவிட்டான். 'தேர்க்கால் இடைப்புகுந்து' என்ற சொல்லால் வேண்டு மென்றே தற்கொலை செய்துகொள்ளும் நோக்கத்துடன் இக் கன்று வந்து வீழ்ந்ததுபோலும் என்ற கருத்தையும் குறிப்பிடு கிறான். 'புகுந்து' என்ற சொல்லில் எவ்வளவு பொருளாழம் வைக்கப்பட்டிருக்கிறது. விலக்கி இருந்தாலும் புகுந்து கொள்ளும் முடிவுடன் இருப்பவர்களை எவ்வாறு விலக்க முடியும்? எனவே, இது ஒருவர் குற்றமும் அன்று என்று கூறுபவன்போல் கூறுகிறான் அமைச்சன்.

இத்துணைப் பொருளையும் வெளிப்படையாக அமைச்சன் கூறியதாகக் கவி கூறவில்லை. ஆனால், பாட்டை அதிலுள்ள சொற்களை அமைக்கும் முறையில் இவ்வளவு பொருளையும் புகுத்திவிட்டார். இதுதான் சிறந்த தலையாய கவிதை எனப்படும்.

நடைபெற்ற நிகழ்ச்சியின் கொடுமையைக் குறைத்து மன்னனிடம் பக்குவமாக அமைச்சன் ஒருவன் எடுத்துரைக் கிறான். அவ்வுரை கேட்ட வேந்தன், பசு அடையும் துன்பம் அனைத்தையும் தான் பெறத் தொடங்கிவிட்டான். தன்னை மறந்த நிலையில் புலம்பத் தொடங்கிவிடுகிறான். 'உயிர்களைக் காப்பதற்கென்றே கடமை பூண்ட என் செங்கோலின் திறம் இருந்தவாறு என்னே என்று வருந்து கிறான். அரசனுடைய வருத்தம் எல்லை!' மீறி விடுகிறது.

என்ன செய்தால் தீரும்?' என்கிறான் மன்னன். அமைச்சர்கள் அவன் வினாவைப் புரிந்துகொள்ளவில்லை. அவர்கள் மேல் தவறு இல்லை. 'இறந்தவர்களைப் பார்த்து என்ன செய்தால் இது தீரும்?' என்று கேட்பதே சற்று வியப்பை அளிக்கிறது. உயிர் இருந்து நோயுடன் போராடும்பொழுது இவ் வினாச் சிறந்ததுதான்; ஆனால், உயிர் போய்விட்ட பிறகு இவ் வினாவிற்குப் பொருளே இல்லை. இறந்தவர்களை மீட்டும் உயிருடன் எழுப்பும் வித்தை, மனிதனுக்குக் கைவருகிறவரை இவ் வினாப் பயனற்றதுதானே!

எனவே, மன்னன் இறந்த கன்றை நினைத்துத் தான் 'என்ன செய்தால் தீரும்?' என்று கேட்டதாக அமைச்சர்கள் நினைத்துவிட்டனர். உடனே அவ் வினாவிற்கு விடை கூறுமுகமாக 'அரசே! நடந்துவிட்ட இச் செயலுக்கு வருந்திப் பயன் இல்லை. இதனால் எவ்வித நன்மையும் விளையப் போவதுமில்லை. அந்தணர்கள் பசு வதையைப் போக்க விதித்துள்ள கழுவாயைச் செய்வதே முறையாகும்' என்று கூறுகின்றனர். மேலும், இவ்வாறு செய்வதே வழக்காகும் என்று கூறி, மன்னன் மனத்தைத் தெருட்ட முயல்கின்றனர். ஆனால், மன்னவன் 'என் செய்தால்' தீரும் என்று கேட்டது மகனுடைய பாவத்தைப் போக்குதற்கன்று; பசுங்கன்றின் உயிரை மீட்பதற்கும் அன்று; அவன் வினாவெல்லாம், பசு பெற்று வருந்தும் துயரத்தைக் கருதியேயாகும். கொலை என்ற காரணத்தால் அமைச்சர்கள் அஞ்சினார்களேயன்றிப் பசுவின் துயரத்தை அவர்கள் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை.

ஆறறிவு படைத்த அவர்கட்குப் பசுவின் அழுகுரல் காதில்கூட விழவில்லை; அதன் கண்ணீர் அவர்கள் கண்ணிலும் படவில்லை. ஆனால், மன்னவன் மனநிலை வேறாக உள்ளது. அரசனின் கடமைபற்றி அவன் ஒரு கருத்தைக் கொண்டுள்ளான். உயிர்களைக் காக்கும் மன்னவன், அவ்வுயிர்கட்கு உண்டாகும் ஐந்து வகையான துயரங்களைப் போக்குவதே கடனாகும் என்று கருதுகிறான்.

"மாநிலம்கா வலன்ஆவான் மன்னுயிர்காக் கும்காலைத்
தான்அதனுக்கு இடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ."

(பெ.பு.—திருநகரம், 36)

என்ற பாடலால் உயிர்கட்குத் தன்னாலும், தன் படையாலும், பகையாலும், கள்வராலும், ஏனைய விலங்கு முதலிய உயிர்களாலும் உண்டாம் தீங்கைத் தடுத்து நன்மை விளைவிப்பவனே அரசன் என்ற கருத்துப் பேசப்படுகிறது. இவ்வாறு துயர் தீர்க்கவேண்டிய மன்னனாலேயே அல்லது அவன் மகனாலேயே உயிர்கட்குத் தீங்கு நேரிடின் அவனை என்னென்று குறிப்பது? எனவே, அரசன், அமைச்சர்கள் கூறிய அறிவுரையை எடுத்துக்கொள்ளத் துணியவில்லை. அன்றியும் அவ்வாறு செய்தால் இரண்டு நஷ்டங்கள் ஏற்படும் என்று கூறுகிறான். முதலாவது, இப்பசுவின் வருத்தம் தீராது. இரண்டாவது, அறமும் நிலை புரண்டு விடும். எத்துணையளவு 'பிராயச்சித்தம்' எனப்படும் கழுவாய் செய்யினும், அது ஒருவேளை அரசகுமாரன் பாவத்தைப் போக்கலாம்; ஆனால், 'குலக்கன்றை இழந்து அலறும் கோ உறுநோய் மருந்து ஆகுமோ? எனவே, 'பசுவின் துயரத்தைப் போக்காத எந்தக் கழுவாயும் பயன் அற்றதே' என்பது மன்னனுடைய வாதம்.

அடுத்து அவன் கூறுவது அமைச்சர்கட்கும் அச்சத்தை விளைவிக்கிறது. 'என் மகன் செய்த பாதகத்துக்கு மட்டும் கழுவாய் தேடிவிட்டு, அந்நியன் ஓர் உயிர் கொன்றால் அவனைக்கொல்வேனானால் அறம் பிழைத்துவிடாதோ?' என்று அரசன் பேசுகையில் யார்தான் மறுத்துக் கூற இடமுண்டு? அரசனுடைய மனம், நினைத்தற்கு அரிய வழியில் செல்வதை அறிந்த அமைச்சர்கள் மிகவும் அஞ்சிவிட்டனர். எவ்வாறாயினும் இதனைத் தடுக்கவேண்டும் என்ற ஒரே முடிவுடன் ஒரு வாதம் பேசத் தொடங்கிவிட்டனர். "அரசே இது என்ன புதுமை மைந்தனை இதற்காகக் கொல்வதா?

இதுபோல் முன்னர் யாரேனும் செய்தது உண்டா? அரசன் காக்கவேண்டியவற்றுள் தலையாயது மரபு அன்றோ? இத் தகைய சந்தர்ப்பங்களில் மறை நூல்கள் மொழிந்தபடி செய்தல் அன்றோ மரபு?'' என்ற முறையில் வாதிட்டனர்.

மரபைக் காத்தல் என்ற இப்புதுமுறை வாதத்தைக் கேட்ட மன்னனுக்குக் கோபம் பொங்கி வருகிறது. நெருப்பில் பட்ட செந்தாமரைபோல அரசன் முகம் கோபத்தால் கரிந்து விட்டது. ''அறமுறை ஆராயாத அமைச்சர்களே! மரபைப் பற்றிப் பேச வந்துவிட்டீர்களே நீங்கள்! எப்பொழுது மரபு ஏற்பட முடியும்? இதுபோல் முன்னர் இவ்வுலகில் ஒரு செயல் நிகழ்ந்தது உண்டா? ஒரு பசு பெருந்துயரம் தாங்காமல் கதறியழுது அரண்மனை வந்து ஆராய்ச்சி மணியை அடித்தது உண்டா? முன்னர் நடந்தறியாத இச்செயலை ஆராயப் புகுங்கால் மரபைப்பற்றிப் பேசுவது எத்துணைத் தவறானது?'' என்று அவர்களை மன்னன் இடித்துக் கூறி விட்டு, அடுத்து, தமிழன் கண்ட அறத்தை விளக்குகிறான்.

அரசன் கூறிய அறத்தை விளங்கிக்கொள்ள 'அறிவினால் ஆகுவது உண்டோ பிறிதின் நோய் தன் நோய்போல் போற்றாக் கடை' என்ற திருக்குறளை முதலில் கருத்தில் இருத்தவேண்டும். பிற உயிர்கட்கு வரும் துன்பத்தைத் தமக்கு வந்ததுபோலக் கருதி, அதனைப் போக்க முற்படா விடின் ஒருவன் பெற்ற அறிவினால் எப்பயனும் இல்லை என்பதே இக்குறள் குறித்த பொருள். இதற்கு உரை எழுதிய பரிமேலழகர் 'இது பெரும்பான்மையும் அஃறிணைக் கண் நுண்ணிய உடம்புடையவற்றைப் பற்றி வருதலின் 'பிறிதின் நோய் என்றார்' என்று கூறிச் சென்றதும் அறிதற் பாலது. எனவே, அறிவுடைய ஒருவன் கடமையாவது அஃறிணை உயிராயினும் அது துன்புற்றவழி அத்துன்பம் துடைக்க முற்படல் வேண்டும். முற்படல் வேண்டும் என்று கூறியதால் 'ஏதோ என்னால் ஆனமட்டும் முயன்று பார்த்

தேன். ஆனால், அத்துன்பத்தைப் போக்க முடியவில்லை' என்று கூறிவிடுதல் மட்டும் போதாது. பிற உயிர் படுந் துன்பத்தை எவ்வாற்றானும் போக்க முற்படல் வேண்டும்; அது இயலாது போமாயின் அவ்வுயிர் படுந் துன்பத்தைத் தானும் அனுபவிக்கவேண்டும் என்பதே இத்தமிழன் கண்ட அறமாகும். தனக்கு வந்த நோயை ஒருவன் போக்க இறுதிவரை போராடுகிறான் அன்றோ? இனி என் முயற்சி ஒன்றும் இல்லை என்று கூறிவிட்டு வாளா இருந்துவிடுதல் இல்லை அன்றோ? எனவே பிற உயிர்கட்கு வருந்துன்பத்தைப் போக்க இறுதிவரை போராடுதலும் அது இயலாத வழி அதனுடன் சேர்ந்து தானும் அத்துன்பத்தை அனுபவித்தலுமே தக்கதாகும். இந்த அறநெறியையே மனு வேந்தனும் மனத்துட்கொண்டு பின்வருமாறு பேசுகிறான்:

"எனமொழிந்து 'மற்றுஇதனுக்கு
இனிஇதுவே செயல் இவ்ஆன்
மனம்அழியும் துயர்அகற்ற
மாட்டாதேன் வருந்தும் இது
தனதுறுபேர் இடர்யானும்
தாங்குவதே தருமம்' என
அனகன் அரும் பொருள்துணிந்தான்
அமைச்சரும் அஞ்சினர் அகன்றார்."

(பெ. பு.—திருநகரம், 42)

இப்பசுவின் துயரைப் போக்கவில்லையாயின், இது வருந்தும் துயரத்தை யானும் ஏற்று அனுபவிக்க வேண்டிய செயலைச் செய்தலே அறம் என்று துணிந்துவிட்டானாம் மன்னன். அவன் கருத்தறிந்த அமைச்சர்கள் அச்சத்துடன் அவ்விடம் விட்டு அகன்றார்கள்.

பசுவின் துயரத்தைப் போக்கவேண்டுமாயின் அதற்கு ஒரே வழிதான் உண்டு. அதாவது அப்பசுவின் கன்றை உயிர்ப்பித்து எழுப்பினால் ஒழியப் பசு மகிழ்ச்சி யடையாது. இறந்த கன்றை எழுப்புதல் என்பது மனித முயற்சிக்கு

அப்பாற்பட்ட ஒன்று. எனவே, எஞ்சியிருப்பது ஒரே வழி தான். அதனை அரசன் பேசுகிறான். இப்பசுவின் பெரிய துன்பத்தை யானும் தாங்குவதே முறை என்று அவன் குறிப்பிடுகையில் அஞ்சத்தகுந்த ஒரு முடிவை மேற்கொண்டு விட்டான் என அமைச்சர்கள் அறிந்தனர்.

தற்காலத்தில் பிறர் துயரங் கண்டு நமது ஆழ்ந்த அநுதாபத்தைக் கடித மூலமாகவும், நரம்பு இல்லாத நாக்கின் மூலமாகவும் மிக எளிதாகத் தெரிவித்துக்கொள்ளப் பழகி விட்ட நமக்கு. அரசன் முடிபு என்னவென்று அறிந்து கொள்ளுதல் இயலாத காரியந்தான். தனது மகன் உயிருடன் இருக்கையில் அவனை இழந்த வருத்தத்தை அரசன் மேற் கொள்வதாகக் கூறினால், அது கலப்பற்ற பொய் என்று கூறாமலே விளங்குமன்றோ!

எனவே, மன்னர் மன்னனான மனுநீதிச் சோழன் உண்மையிலேயே பசுவின் துயரைத் தானும் தாங்க முடிவு செய்துவிட்டான். இவ்வாறு செய்வதால் பசுவுக்கு என்ன பயன் என்ற வினாவை எழுப்பிப் பயன் இல்லை. பசுவுக்குப் பயன்படும் முறையில் ஒன்றுஞ்செய்ய இயலாத அரசன், அக்கொடுமையைப் பார்த்துக்கொண்டு வாளாவிருத்தல் தகாது என உணர்ந்து, அறிவின் பயன் தானும் அந்நிலை அடைதலே எனத் துணிந்துவிட்டான். இனிப் பசுவைப் பற்றிய கவலை இல்லை. ஏனெனில், அதன் துயரைக் கண்டு வைத்தும் அதனைப் போக்காமல் வாளா இருந்துவிட்ட பாவம் அவனைச் சாராது அன்றோ?

இம்முடிவுக்கு வரத்தான் அரசனுக்கு ஆராய்ச்சி தேவைப்பட்டதே தவிர, முடிவு செய்தபின் அதைக் கொண்டு செலுத்தலில் அதிகக் காலந் தாழ்த்தவில்லை.

**"ஒருமைந்தன் தன்குலத்துக்கு**
**உள்ளானென் பதும் உணரான்**
**தருமந்தன் வழிச்செல்கை**
**கடனென்று தன்மைந்தன்**

மருமந்தன் தேர்ஆழி
உறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி
அரிதோமற்று எளிதோதான்"
(பெ.பு.—திருநகரம், 44)

தனக்கு மற்றொரு மகனும் இல்லை என்பதை மறந்து விட்டு, அறவழி செல்லும் கடமை ஒன்றையே பெரிதென மதித்த மனுவேந்தன் மகனுடைய மார்பில் தேரின் சக்கரம் ஏறும்படி அவனைக் கிடத்தித் தேரைச் செலுத்தினான்.

தமிழன் கண்ட அறம் எத்தகையது என்பதற்கு இதனினும் வேறு சான்று வேண்டுமோ? பிறிதின் நோய் தன்னோய்போலப் போற்றலும் இதுதானே. இயன்றவரை நோயைப் போக்க முயன்றான்; அது இயலாதவழி மனிதன் என்ன செய்கிறான்? நோயை ஏற்று அனுபவிக்கிறான் அன்றோ? அதையே மன்னனும் செய்து குறள்வழி வாழ்ந்து அழியாப் புகழை எய்திவிட்டான்.

## 13. காப்பியத் தலைவர்

சேக்கிழார் பெரிய புராணத்தைப் பாடினார். ஆனால், அவருக்கு முதல் நூலாக இருந்தது நம்பி ஆரூரர் ஆகிய சுந்தரமூர்த்திகள் பாடிய 'திருத்தொண்டத்தொகை'யாகும். சுந்தரமூர்த்திகள் காலத்திலும் அவருக்கு முன்பும் இத் தமிழ்நாட்டில் பல அடியார்கள் வாழ்ந்தனர். அவர்கள் வாழ்க்கையில் பல துறைகளில் ஈடுபட்டிருந்தாலும் அடிப்படையில் ஒரே குறிக்கோளுடையவர்களாக வாழ்ந்தனர். அவர்கள் கொண்டிருந்த இப்பொதுக் குறிக்கோள் காரணமாகவே அவர்கள் அனைவரையும் 'அடியார்கள்' என்ற

பொதுத் தலைப்பில் நம்பியாரூரர் அடக்கிவிட்டார். உலகின் பல்வேறு பாகங்களிலும், எல்லாக் காலத்தும் பெரியோர்கள், அடியார்கள் வாழ்ந்தார்கள், வாழ்வார்கள் என்பதை நம்பியாரூரர் அறியாதவர் அல்லர். எனவே அவர்கள் அனைவருக்கும் சேர்த்து 'அப்பாலும் அடி சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்று கூறிவிட்டார். காலம் இடை இட்டவும், தேசம் இடை இட்டவும், அன்ன நிலையில் வாழ்ந்தவர், வாழ்கின்றவர், வாழப்போகின்றவர் ஆகிய அனைவர்க்கும் அடியேன் என்று பரந்த மனப்பான்மையுடன் கூறிவிட்டார்.

ஆனால், 'திருத்தொண்டத்தொகை'யின் முற்பகுதியில் கூறப்பட்டவர்கள் அனைவருமே தமிழ்நாட்டில் வாழ்ந்தவர்கள்தாம். வேண்டுமென்றே தமிழ்நாட்டினரைத் தேர்ந்தெடுத்துச் சுந்தரமூர்த்திகள் கூறின அருமைப்பாட்டைச் சேக்கிழார் நன்கு அறிந்துகொண்டே பெரிய புராணம் பாடினார். ஆகலின் பெரிய புராணத்தைத் 'தேசிய இலக்கியம்' (National Literature) என்று குறிக்கலாம். இத்தகைய ஒரு தேசிய இலக்கியம் பாடுவதற்குத் தமக்கு வாய்ப்பு அளித்தவர் சுந்தரர் என்பதைச் சேக்கிழார் மறவாமல் அவருக்குத் தனிப்பட்ட முறையில் சருக்கந்தோறும் நன்றியுடன் வணக்கம் செலுத்துகிறார்.

தமிழ்நாட்டின் ஒரு பகுதியான திருமுனைப்பாடி நாடு ஒரு தனிச் சிறப்புடையது. எங்கும் நிறைந்த உருவமற்ற பரம்பொருள், வடிவுகொண்டு மண்மேல் நடந்து வந்த பெருமை, திருமுனைப்பாடி நாட்டிற்கே உண்டு; 'பெருகிய நலத்தால் மிக்க பெருந்திருநாடு' (தடுத்தாட் கொண்ட புராணம், 2) என்று சேக்கிழார் அந்நாட்டை வருணிக்கிறார். 'பெருந்திருநாடு' என்றால் செல்வத்தால் சிறந்த நாடு என்பதே பொருள். ஆனால், இந்த அடைமொழிகட்கும் அடையாகப் 'பெருகிய நலத்தால் மிக்க' என்ற மேலும் ஓர் அடைமொழியை வேண்டுமென்றே சேக்கிழார் பெய்கிறார்,

நிறைந்த செல்வம் பல இடங்களில் இருப்பதுண்டு. அதனால் நன்மையே விளையும் என்று கூறுவதற்கில்லை. இராவண னுடைய நாடு பெற்றிருந்த செல்வத்திற்கு உவமையே கூற முடியாது. இராவணன் பகைவனாகிய அநுமான் இலங்கை யைப் பார்த்து வியந்தவனாக 'நரகம் ஒக்குமால் அந்நல்நெடும் துறக்கம் இந்நகர்க்கு' (ஊர் தேடு-14) என்று கூறுகிறான்.

இலங்கையோடு ஒப்பிடும்பொழுது மோட்ச உலகமானது நரகம் என்று கூறும்படி ஆகிவிடுமாம். அத்தகைய பெருஞ் செல்வம் படைத்திருந்தும் பயன் யாது விளைந்தது? அந்நகரமும் அதைச் சேர்ந்த நாடும் தமக்கும் தம்மை ஆள்பவருக்கும் அழிவையே தேடித்தந்தன. எனவே, செல்வம் என்பது நன்மையே விளைக்கும் என்று கூறுவதற் கில்லை. இது கருதியே சேக்கிழார் திருமுனைப்பாடி நாட்டின் செல்வம் 'பெருகிய நலத்தால் மிக்கது' என்றும் கூறுகிறார். இன்னும் பெருகிய நலம் என்றதால், நாட்டு நன்மை செல்வத்தின் வளர்ச்சிக்கு ஏற்ப ஏறுகிறது என்ற கருத்தை யும் பெற வைத்தார். சில பொருள்கள் (செல்வமும் இவற்றுள் ஒன்று) மிகுதிப்படும்பொழுது ஓரளவு வரை நன்மை செய்து, அவ்வளவின் மீறி மிகுதிப்படுமாயின் தீமையே விளைவிக்கும். இவ்வாறு ஆகாமல் இருக்க வேண்டுமாயின், அச்செல்வ முடையார் தக்கவர்களாக இருத்தல் வேண்டும். செல்வத்தின் இயல்பையறிந்து அதனை அடக்கி ஆள்பவர் கையில் செல்வம் சிறப்புற்று விளங்குவதோடு பிறருக்கும் பயன்படும். எனவே, 'பெருகிய நலத்தைச் செய்யும் பெருஞ்செல்வம் மலிந்த நாடு' என்றமையின் அச்செல்வமுடைய மக்கள் பண்பாட்டையும் ஒருவாறு கூறிவிட்டார்.

'பெருகிய நலத்தால் மிக்க பெருந்திரு நாடு தன்னில்
அருமறைச் சைவம் ஓங்க அருளினால் அவத ரித்த
மருவிய தவத்தால் மிக்க வளம்பதி வாய்மை குன்றாத்
திருமறை யவர்கள் நீடும் திருநாவல் ஊராம் அன்றே'

(பெ.பு.—தடுத்தாள், 2)

இத்தகைய செல்வம் படைத்த மக்கள் வாழும் நாடு உண்மையிலேயே பெரியார்கள் தன்னிடம் தோன்றக் கூடிய தகுதியுடையது என்பதில் ஐயமென்ன? அரிய சைவ சமயம் மீட்டும் தழைத்தோங்க இறைவன் அருளால் ஒரு பெரியார் தோன்றப்போகிறார் என்றால் அவர் தோன்றக் கூடிய நிலைக்களம் அங்கு இருக்க வேண்டாவா? உண்டு என்பதையே இப்பாடல் கூறுகிறது. நம்பியாரூரர் அந்தணர் குலத்திலேயே பிறந்து, அரசர் வீட்டில் வளர்ந்து, பரவையார் என்ற பதியிலார் குலத்தில் பிறந்தவரை மணந்து சேரமான் பெருமாள் என்னும் சேர வேந்தரோடு நட்புக் கொண்டு, திருவாரூரில் அரசரைப்போல் வாழ்ந்தவர். எனவே, அத்தகைய பெரியவர் பிறக்கப்போகும் நாட்டை வருணிக்க வந்த சேக்கிழார் அந்நாடு நல்ல செல்வம் மலிந்த நாடு என்றும், பண்புடையாளர் பயிலும் நாடு என்றும் கூறுகிறார் அப்பெருநாட்டுள்ளும் நம்பியாரூரர் பிறக்கத் தவம் செய்த பதி திருநாவலூராகும்.

ஓர் ஊர் தவஞ்செய்தது என்றால் கருத்தென்ன? கல்லும் மண்ணும் தவஞ் செய்தன என்றா பொருள் செய்வது? ஊர் நல்லது என்றோ தீயது என்றோ கூறும்பொழுது என்ன கருத்தைப் பெற வைக்கிறோம்? அவ்வூரில் வாழும் மக்களைக் குறித்துதானே மேற்கண்டவாறு பேச்சு எழுகிறது? புற நானூற்றில் ஔவை பாடிய பாடல் ஒன்று உள்ளது.

**"நாடா கொன்றோ, காடா கொன்றோ,**
**அவலா கொன்றோ, மிசையா கொன்றோ;**
**எவ்வழி நல்லவர் ஆடவர்;**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே!"**

(புறம், 187)

என்ற பாடலில் 'ஏ நிலமே! நீ நாடாக இருப்பினும் பள்ளமாக இருப்பினும் மேடாக இருப்பினும் கவலை இல்லை. எங்கே நல்லவர்கள் இருக்கிறார்களோ அங்கே நீயும் நல்லை என்று

கூறப்படுகிறாய்' என்ற கருத்தைக் கூறுவதில் நாம் அறிய வேண்டுவதும் ஒன்றுளது.

அவ்வூரார் எத்தகைய தவஞ் செய்தனர் என்ற கேள்வி அடுத்துத் தோன்றும் அல்லவா? தவம் என்றவுடன் 'காடுகள் சென்று கன சடை வைத்து' வாழும் வாழ்வைப் பலர் நினைத்தல் கூடும். தவம் அது அன்று என்பதைக் கூறவந்த வள்ளுவப் பெருந்தகை, "தவஞ் செய்வார் தம் கருமம் செய்வார்" (குறள், 266) என்று தவத்திற்கு இலக்கணம் விதித்துவிட்டார். எனவே சேக்கிழார், நம்பியாரூரர் தம்மிடம் பிறக்கத் திருநாவலூர்வாசிகள் வேண்டிச் செய்த தவத்தை நான்காம் வரியில் குறிப்பிடுகிறார். வாய்மை குன்றாத் திருமறையவர்கள்' என்ற சொல்லால் அவர்கள் செய்த தவம் குறிக்கப்பெறுகிறது.

வாய்மை குன்றாத வாழ்க்கை வாழ்ந்தால் அதைவிடச் சிறந்த தவம் வேறு என்ன செய்ய வேண்டும்?

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று"

(குறள், 297)

என்பது சட்டநூல் விதித்தது அன்றோ? எனவே, வாய்மை குன்றாத வாழ்க்கை உடைமையின் அவர்கள் எல்லாவகைத் திருவும் உடையவர்கள் என்பதும் பெறப்படுகிறது.

ஆகலின் 'வாய்மை குன்றாத திருமறையவர்கள்' வாழும் ஊர் நல்ல தவஞ் செய்தலின் நம்பியாரூரைப் பெறத் தகுதியுடையதாயிற்று. இத்தவத்தைப்பற்றிக் கூறவந்த ஆசிரியர் 'மருவிய தவம்' என்று கூறியதிலும் ஒரு தனிச் சிறப்புண்டு. சிற்சில பொருள்கள் பலரிடத்திலும் காணப் படினும் ஒரு சிலரிடத்தில் அழகை அதிகப்படுத்தலையும் ஒரு சிலரிடத்தில்

அழகற்றுப் போமாறு செய்தலையும் காண்கிறோம். அங்ஙனமே தவமும், செய்தவர் அனைவரிடமும் இருப்பினும் அனைவரிடத்தும் அது நல்ல முறையில் அமைந்திருக்கும் என்று கூறுவதற்கில்லை. இராவணனும் தவம் நிறையச் செய்திருந்தான்; எனினும், அத்தவம் அவனிடம் நன்கு பொருந்தி இருக்கவில்லை. இன்றேல் அவன் அவ்வளவு தவறான வழிகளில் சென்றிருக்க மாட்டான். திருநாவலூர் செய்த தவம் அதனிடம் நன்கு பொருந்தி இருந்ததா இல்லையா என்பதை ஆசிரியர் ஒரு சொல்லால் விளக்கு கிறார். 'மருவிய தவத்தால் மிக்க வளம்பதி' என்னும் பொழுது அது விளங்குகிறது. மருவிய என்ற சொல்லுக்குப் பொருந்திய என்பதே பொருள். எனவே, பொருந்திய தவத்தையுடைய ஊர் என்பது பொருளாயிற்று. பொருந்திய தவம் என்றால் என்ன? தான் தங்கத்தக்க இடத்தைத் தேடிச் சென்ற தவம், இறுதியில் திருநாவலூரே தக்க இடம் என்று அறிந்து அங்கேயே பொருந்தி விட்டதாம்.

இத்துணைச் சிறப்புடைய ஊரில் ஒரு குடும்பம். அக் குடும்பத்திற்கே ஒரு சிறப்புண்டு, அவர்கள் பரம்பரையாகவே சிவபெருமானுக்குத் தொண்டு செய்யும்,—இல்லை—அடிமை செய்யும் இயல்புடையவர்கள். இத்தகைய பரம்பரையில் வந்த பெரியவர் சடையனார் என்ற ஆதி சைவர். அவருக்கு இசை ஞானியார் என்பவர் மனைவியாராக வாய்த்தார். இதனைக் கூற வந்த சேக்கிழார்.

"மாதொரு பாக னார்க்கு வழிவழி அடிமை செய்யும்
வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடையனார்க்கு
ஏதம்இல் கற்பின் வாழ்க்கை மனை இசை ஞானியார்பால்
தீதுஅகன்று உலகம் உய்யத் திருஅவதாரம் செய்தார்"
(பெ.பு.—தடுத்தாள், 3)

என்று கூறுகிறார்.

இப்பாடலின் முதல் அடி ஊன்றிக் கவனிக்க வேண்டிய ஒன்று. உமையொரு பாகனாகிய சிவபெருமானுக்குப் பரம்பரையாக அடிமை செய்யும் வேதியர் குடியில் பிறந்தார் சடையனார் என்பதே இதன் பொருள். பரம்பரையாக ஆண்டவனுக்கு அடிமை செய்யும் குடி என்று சேக்கிழார் குறிப்பிடும்பொழுது சிறந்த ஒரு கருத்தை நம் கவனத்திற்குக் கொண்டு வருகிறார். எந்தச் செயலையுமே புதிதாகச் செய்வதற்கும் நீண்ட நாளாகச் செய்வதற்கும் வேறுபாடு உண்டு. அதிலும், தன் தந்தையின் தொழிலில், மகனுக்கு இயற்கையாகவே ஒருவகை ஆற்றல் நிறைந்திருக்கும் என்பது இற்றை நாள் மனத் தத்துவர்கள் கண்ட உண்மையாகும். ஆனால், இக்கருத்தை நம் பழந்தமிழ் நூல்கள் பறைசாற்றுகின்றன. 'மகன் தந்தை அறிவு' (நாலடி: 376) என்று நாலடியாரும், 'குலவிச்சை கல்லாமல் பாகம்படும்' (பழமொழி: 5) என்று பழமொழி நூலும் கூறிச் செல்கின்றன. எனவே, பரம்பரையில் ஒரு பெருமை உளதென்பதை அனைத்தையும் நம்ப மறுக்கிறவர்கள் கூட, நம்பித்தான் ஆகவேண்டும்.

ஏனைய தொழில்கட்குப் பரம்பரை உதவி செய்யலாம். ஆனால், கடவுள் பக்திக்குக்கூட இது தேவையா என்ற வினா நியாயமானதே. இந்நாட்டில் ஆண்டவனிடத்து அன்பு செலுத்துவதைக்கூட ஒரு கலையாகவே வளர்த்துவிட்டார்கள். ஒருவன் கொண்ட பக்தியின் ஆழம், அகலம், உழைப்பு முதலியவை இப்பரம்பரையால் அறுதியிடப்படுகின்றன. எந்த நிலையிலும் இறைவனை அன்றி வேறு பொருளை நாடாத மனநிலை பரம்பரையால் பெறுகிற ஒரு மனநிலைதான். இதனால்தான் 'வழிவழி' என்று சேக்கிழார் கூறுகிறார்

அடுத்துள்ள சொல் 'அடிமை செய்யும்' என்பது. என்ன? 'தமிழர்களுக்கே இந்த அடிமைப் புத்தி போவதில்லை போல் இருக்கிறதே' என்று சிலர் சீறும் குரல் காதில் விழுகிறது. ஆண்டவனுக்கும், கொள்கை, நம்பிக்கை

என்பவற்றுச்கும் அடிமையாவதைச் சீறுபவர்கள் இந்த நம்பிக்கை செய்யும் விந்தை ஒன்றை அறிவதில்லை. இந்த நம்பிக்கை என்பது பல்லாயிரம் ஆண்டுகளாகப் பலராலும் கைக்கொள்ளப்பட்டு, அநுபவமாகக் கண்ட உண்மைகள். எனவே, அவற்றிற்கு அடிமையாவதில் அதிகத்தவறு இருப்ப தில்லை. ஆனால், எதனையும் நம்ப மறுக்கும் இவர்கள் கூற்று இன்னும் காலம் என்னும் உலையில் பெய்யப்பட வில்லை. எனவே, காலத்தை வென்று வாழக்கூடிய தகுதி அவற்றில் உண்டா என்று தெரியுமுன்னரே, சில வார்த்தை கட்கு இவர்கள் ஏன் இப்படி அடிமையாகி விட்டார்கள் அந்தச் சொற்களை மந்திரம்போல் நம்பிக்கொண்டு தம் சொந்த அறிவை அடகு வைத்துவிடக் காரணம் யாதோ? அடிமை என்ற சொல்லை வேரோடு களைய விரும்பி முயன்ற கவிஞர் பாரதியாருங்கூடப் 'பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்' என்றுகூறி வாய்மூடு முன்னரே 'பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்'' என்று கூறிச் சென்றார்.

## பெருஞ்சுட்டு வேண்டுவார்

எனவே, இறைவனுக்கு அடிமைத் தொழில் பூண்ட சடையனார் தம் அருமை மைந்தனுக்குத் தக்க பெயர் ஒன்றைத் தேடினார். 'பெயரில் என்ன இருக்கிறது' என்று பலரும் கேட்டாலுங்கூடப் பெயரில் சில உண்மைகள் இருக்கத்தான் செய்கின்றன. பெரியவர்களுடைய பெயர் களை வைப்பதனால் குழந்தைகளும் இளமை தொட்டே அப் பெயர் உடைய பெரியவர்கள்போல் உயர்ந்த குறிக்கோளுடன் விளங்க வாய்ப்பு ஏற்படும் என்று நம்பினார்கள். பல சந்தர்ப்பங்களில் ஏதேனும் பெயர் கொண்டவர்கள் செயற்கரிய செயல்கள் செய்து பெரியார்களாக ஆகிவிட்டால் பிற்காலத்தார் அப்பெயர்களைப் போற்றி எடுத்துக் கொண்டனர். எனவே, சடையனார் தம் மகனுக்கு வைத்த பெயர் ஞானிகளும் வணங்கி ஏற்றுக்கொள்ளும் பெயராக அமைந்தது என்று ஆசிரியர் சேக்கிழார் கூறுகிறார்.

தவத்தினால் மிக்க பெரியார்கள் போற்றும் நம்பியாரூரர் என்ற பெயரைச் சூட்டினாராம் தந்தையார்.

**"தம்பிரான் அருளினாலே தவத்தினால்மிக்கார் போற்றும்**
**நம்பியா ரூரர் என்றே நாமமும் சாத்தி மிக்க''**
(பெ.பு.—தடுத்தாள்,6)

இவ்வாறு சேக்கிழார் இப்பெயருக்குப் பெருமைகூறக் காரணம் உண்டா என்று பார்த்தால் உண்மை விளங்கும். 'பெருமிழலைக் குறும்பர்' என்ற நாயனார் வாழ்க்கையிலேயே செய்த அரிய தொண்டு யாது தெரியுமா? 'நம்பியாரூரர்' என்ற பெயரையே ஒரு மந்திரமாக ஏற்றுக்கொண்டு ஜபம் செய்தார். அதனால் பெரும் பயன் பெற்றார் அவரைப்பற்றிக் கூறவந்த சேக்கிழார்,

**'நாளும் நம்பி ஆரூரர் நாமம் நவின்ற நலத்தாலே**
**ஆளும் படியால் அணிமாதி சித்தி யான அணைந்ததற்பின்'**
(பெ.பு.—பெருமிழலைக் குறும்பர், 6)

என்று கூறுகிறார். 'நம்பியாரூரர்' என்ற பெயரையே மந்திரமாக ஜபித்து அப்பெரியார் அணிமா, லகிமா முதலிய அட்டமா சித்திகளும் கைவரப் பெற்றாராம். இத்தகைய அழகியதும் பயன் விளைவிப்பதுமான பெயரைப் பெற்ற நம்பியாரூரர் சிறுதேர் உருட்டி விளையாடும் பருவமெய்தினார். ஒருநாள் அந்நாடாளும் 'நரசிங்க முனையரையர்' என்னும் சிற்றரசர் இவரைக்கண்டு, இவர்மேல் அன்பு பூண்டார். தாய் தந்தையர் அனுமதி பெற்று நம்பியாரூரரை எடுத்துச் சென்று தம் காதற் பிள்ளையாக வளர்த்து வந்தார். இறைவனுக்குப் பூசை செய்யும் வேதியர் குலத்துப் பிறந்து அரசர் குடும்பத்தில் வளர்ந்தாலும் நம்பியாரூரர் கலைஞானம் முற்றும் கைவரப்பெற்றார். 'அளவில் தொல்கலைகள் ஆய்ந்து' என்று சேக்கிழார் இப்பண்பைக் குறிக்கிறார்.

நம்பியாரூரர் திருமணப் பருவம் அடைந்தவுடன் புத்தூரில் உள்ள ஒருவர் பெண்ணை மணம் பேசி முடிவு

திருமணம் நடைபெறத் தொடங்கும் அளவில் இறைவன் கிழவேதியர் வடிவுகொண்டு சென்று அம் மணத்தைத் தடை செய்துவிட்டான். நம்பியாரூரரின் பாட்டன் எழுதித் தந்ததாக ஓர் ஓலையைக் காட்டினான். அவ்வோலையில் நம்பியாரூரரும் அவர் மரபோரும் இக் கிழவனுக்கு அடிமை என்று வரையப்பட்டிருந்தது.

'ஆசில் அந்தணர்கள் வேறு ஓர் அந்தணர்க்கு அடிமை யாதல் பேச இன்று உன்னைக் கேட்டோம், பித்தனோ மறை யோன்?' (40) என்று நம்பியாரூரர் இவரை எள்ளி நகை யாடினார். என்றாலும் கிழவன் விடுவதாக இல்லை. இறுதி யில், நம்பி, கிழவனைப் பார்த்து 'அழிவழக்குப் பேசும் கிழவரே! உம்முடைய ஊர்தான் என்ன ஐயா, என வினவ, அவர் அண்மையில் உள்ள திருவெண்ணெய் நல்லூரே தம்முடைய ஊராகும் என்றார். இருசாரரும் அவ்வூரில் சென்று வழக்கு மன்றத்தில் வழக்காடச் சென்றனர். நம்பியாரூரர் தமக்கு அடிமை என்று வழக்காடிய கிழவரைப் பார்த்து நீதிபதிகள் கேட்கும் கேள்விதான் மிக அழகானது.

"கிழவரே, அந்தணர் அடிமை ஆதல் இந்த மாநிலத்தில் இல்லை. ஆனால், நீர் வழக்காடி வந்துள்ளீர். இதுவரை எங்கும் காணாத வழக்கைக் கொண்டுவந்துள்ள நீர் கூறுவதை உறுதிப்படுத்த மூன்று சான்றுகளில் ஒன்றைக் காட்டுங்கள்," என்றார். அவர்கள் கேட்ட அம்மூன்று சான்றுகளே இன்றும் நீதிமன்றங்களில் எடுபடுவனவாகும். "ஆட்சியில் ஆவணத்தில் அன்றி மற்று அயலார் தங்கள் காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்" (56) என்கிறார்கள். இங்கு ஆட்சிக்கு முதலிடம் தருதல் மிகவும் கவனித்தற்குரியது. ஆட்சி என்பதைத் தற்கால மேனாட்டுச் சட்ட நிபுணர்கள் 'Custom' என்பர். எழுத்துச் சட்டத்தையும் மேலாட வல்ல சக்தி பெற்றது ஆட்சி என்பது. அதனை அன்றே தமிழர்கள் போற்றிக் கொண்டனர் என்பதைத்தான் இப்பாடல் ஆட்சியை முதலிற் கூறி உறுதிப்படுத்துகிறது.

தெளிவான முறையில் ஆட்சி விளங்காதபொழுது 'ஆவணம்' (Recorded Evidence) பயன்படுகிறது. ஆட்சிக்கு அடுத்தபடியாக தமிழர் இதனைக் கொண்டனர். மூன்றாவதாக உள்ளதே 'அயலார் தங்கள் சாட்சி' (Eye Witnesses) என்பதாம். இம்மூன்றில் யாதானும் ஒன்றைக் காட்டி வழக்கை நிறுவுமாறு கேட்கின்றனர் நீதிமன்றதார்கள். இந்நிலையில் அந்தணக் கிழவர் வடிவு கொண்டு வந்த இறைவன் தம்பால் உள்ள மூல ஓலையைக் காட்டுகிறார். அதில் நாவலூரில் நம்பியாரூரரும் அவருடைய மரபோரும் வெண்ணெய்நல்லூரில் வாழும் இக்கிழவருக்கு அடிமையாவர் என எழுதப்பட்டுள்ளது ஆனால், பழைய நம்பியாரூரர் எழுதிய கையெழுத்துதான் இது என்பதை எப்படிக் கூறுவது? அதற்கு நீதிமன்றத்தார் ஒரு வழியைக் கையாள்கின்றனர். அப்பழைய ஆரூரர் எழுதியுள்ள ஓர் ஓலையை மிக்க பாதுகாப்புடன் வரவழைத்து ஒத்துப் பார்த்தார்களாம்.

> "..............................ஓலை
> அரண்தரு காப்பில் வேறு ஒன்று
> அழைத்துடன் ஒப்பு நோக்கி"
>
> (பெ.பு.—தடுத்தாள், 62)

என்று சேக்கிழார் கூறும்போது பழந்தமிழ்நாட்டின் நீதிமன்றம், நீதிபதிகள், அவர்கள் பழக்க வழக்கங்கள் என்பவை பற்றி நாம் ஒருவாறு அறிய முடிகிறது.

இதனையடுத்து வரலாறு மிக விரைவில் செல்கிறது. அக்கிழவர் யார் என்பதை நம்பியாரூரர் விரைவில் அறிந்து கொள்கிறார். வெண்ணெய் நல்லூர் திருக்கோயிலுட் சென்ற இறைவனைப் பாடுகிறார். ஓலை காட்டிய சமயத்தில் அவரைப் பித்தன் என்று ஏசினமையால் இப்பொழுதும் 'பித்தா பிறை சூடி' என்று தொடங்கிப் பாடுகிறார். இந்த விநாடியிலிருந்து திருநாவலூரர் வேற்று மனிதராகி விடுகிறார். இதுவரை அவருக்கு இருந்த உலகக் கட்டு முத...

விட்டு விடுகின்றன. இறைவனுடைய பக்தி அநுபவத்தில் ஈடுபடும் பெரியவர்கள் அவ்வுண்மையை அறிவார்கள்.

திருவெண்ணெய் நல்லூரில் திருமணம் தடைப்பட்டுப் போன பின்னர் நம்பியாரூரர் இரண்டு திருமணங்கள் புரிந்து கொள்கிறார். திருவாரூரில் தங்கி நிறைந்த செல்வர்போல வாழ்ந்து வருகிறார், என்றாலும் என்ன? இவ்வாழ்க்கை அவரை ஒன்றும் செய்துவிடவில்லை. இதுபற்றிப் பின்னர்க் காண்போம்.

திருவெண்ணெய் நல்லூரில் இறைவனைப் பாடி அவன் அருள் பெற்ற நம்பியாரூரர் இறைவன் அமர்ந்துறையும் பதிகள் பலவற்றையும் சென்று வணங்க விரும்பினார். அங்கிருந்து திருநாவலூர், திருத்துறையூர் முதலிய இடங்களை வணங்கிக் கொண்டு சிதம்பரம் செல்ல வேண்டும் என்ற விருப்புடன் வருகின்றார். பெண்ணையாற்றைக் கடக்கும்போது பொழுது சாய்ந்து விடவே இரவு ஓர் இடத்தில் தங்கவேண்டிய நிலைமை ஏற்பட்டு விடுகிறது. ஆற்றின் அக்கரையில் 'திருவதிகை வீரட்டானம்' பண்ணுருட்டி புகைவண்டி நிலையத்தின் சமீபத்தில் உள்ள ஊர்) எதிர்ப்படுகிறது. ஆனால், நம்பியாரூரர் அவ்வூரினுட் செல்ல அஞ்சுகிறார். திருநாவுக்கரசராகிய பெரியவர் இறைவன் திருவருள் பெற்றதும் இத்தலத்தேயாகும்; அப்பெரியார் பல நாள்கள் தங்கித் தம் கைகளால் உழவாரப்பணி (புல் செதுக்கும் தொழில்) செய்ததும் இவ்வூரில் ஆகுமன்றோ! எனவே, நம்பியாரூரர் இத்தலத்தினுள் தம் கால்களால் நடந்தேக அஞ்சுகிறார்.

**"உடையஅரசு உலகேத்தும் உழவாரப் படையாளி**
**விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்து**
**அடையும்அதற்கு அஞ்சுவன் என்று அங்கரில் புகுதாதே**
**மடைவளர்தண் புறம்பணையில் சித்தவட மடம் புகுந்தார்."**

(பெ.பு.—தடுத்தாள், 83)

'பெரியவராகிய நாவுக்கரசர் கையால் தொண்டு செய்த ஊருக்குள் யான் காலால் நடந்து செல்வது முறை அன்று' என நம்பியாரூரர் நினைக்கிறார்; நினைப்பது மட்டுமன்று. அவ்வூருள் சென்று இறைவனைக்கூட வணங்காமல், ஊரின் அருகில் உள்ள 'சித்தவடமடம்' என்ற மடத்தில் தங்கி இரவுப் பொழுதைக் கழிக்க முடிவு செய்து அவ்வாறே தங்கியும் விட்டார்.

இறைவனால் நேரே தடுத்து ஆட்கொள்ளப்பெற்ற பெருமை வாய்ந்தவர் நம்பியாரூரர்; அரசனால் வளர்க்கப் பெற்றவர்; இறைவனுடைய தோழராக இருப்பவர். என்றாலும், தமக்கு முன்னர் வாழ்ந்த பெரியார்களைப் பாராட்டும் முறை நாம் கண்டு பின்பற்றற்கு உரியதாயுள்ளது. ஆனால், நம்பியாரூரர் மட்டும் இவ்வாறு செய்தாரோ என்று நினைத்துவிட வேண்டாம். பெரியார்கள் பரம்பரையே இவ்வாறு இருக்கும்.

இதே கருத்துப்பட, 'நீதிநெறி விளக்கம்' என்ற நூலில் (பாட்டு—20) குமரகுருபரர்,

**"பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்**
**மறவாமே நோற்பது ஒன்றுஉண்டு—பிறர்பிறர்**
**சீர்எல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து**
**யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்."**

என்று கூறுகிறார்.

ஒருவன் புகழடைய வேண்டுமானால் அவன் பிறருடைய புகழை மட்டும் எடுத்துக் கூறி, அவருடைய குற்றத்தை மறைத்து யாவர்க்கும் எளியனாக நடந்துகொள்ள வேண்டுமாம்.

திருஞானசம்பந்தர் தம்மை இறைவனுடைய பிள்ளை என்றே கூறிக்கொள்ளுதலைத் தேவாரம் முழுவதிலும் காணலாம். 'தலைமகனாகி நின்ற தமிழ் ஞானசம்பந்தன்' என்று பல்லிடங்களில் தம்மைக் கூறிக் கொள்கிறார். அந்தணர் குலத்து உதித்து, அம்மையால் ஞானப்பால்

ஊட்டப்பெற்று, மூன்று வயதில் வேதமும் சுட்டிக்காட்ட முடியாத பரம்பொருளைச் சுட்டிக்காட்டிய பெரியார் அன்றோ ஞானசம்பந்தர். அப் பதியில் காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து சென்றதை நினைத்துவிட்டார். உடனே அம்மையார் தலையால் நடந்த இடத்தை யான் காலால் மிதித்து நடப்பதோ என்று கருதி ஊரினுள் செல்லாமல் தூரத்தே இருந்தபடி இறைவனை நினைந்து வணங்குகிறார்.

**''இம்மையிலே புவிஉள்ளோர் யாருங் காண**
**ஏழுலகும் போற்றிசைப்ப எம்மை ஆளும்**
**அம்மைதிருத் தலையாலே நடந்து போற்றும்**
**அம்மையப்பர் திருவாலங் காடாம்' என்று**
**தம்மைஉடை யவர்மூதூர் மிதிக்க அஞ்சிச்**
**சண்பைவரும் சிகாமணியார் சாரச் சென்று**
**செம்மைநெறி வழுவாத பதியின் மாடோர்**
**செழும்பதியில் அன்றிரவு பள்ளி சேர்ந்தார்."**

(பெ. பு.—ஞானசம்பந்தர், 1008)

ஞானசம்பந்தர் தமக்கு முன்னர் வாழ்ந்து அம்மையாருக்கு மரியாதை செய்த காரணத்தால் அவருக்குப் பின் வருபவர்கள் இம் மரியாதையை அவருக்கே செய்கின்றனர். நம்பியாரூரர் சீர்காழிக்குச் செல்கிறார். ஞானசம்பந்தர் பிறந்தருளிய ஊர் என்ற நினைவு தோன்றியவுடன் 'பிள்ளையார் திரு அவதாரம் செய்த பெரும்புகலி உள்ளும் நான் மிதியேன், (தடுத்தாள்! 112) என்று ஊர் எல்லைப்புறம் வணங்கிச் செல்கிறார்.

தம்மையன்றிப் பிறரை மதிக்கத் தெரியாத தற்காலம் வாழும் நாம் இப் பெரியார்கள் வாழ்வில் அறியவேண்டிய மிக இன்றியமையாத பாடம் அன்றோ இது?

### நுணங்கிய கேள்வியோன்

திருஞானசம்பந்தர் பிறந்த ஊர் என்பதால் சீர்காழி யைக் காலால் மிதித்துக் கடக்க விரும்பாமல் நம்பியாரூரராகிய

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவ்வூரைச் சுற்றிக்கொண்டு சென்றார் என்று கண்டோம். இத்தகைய மதிப்பை நாவுக்கரசர் பெருமானிடமும் காட்டி அப் பெரியார் தொண்டு செய்து வாழ்ந்த திருவதிகை என்னும் ஊரிலுள்ளும் நுழைந்து செல்ல விருப்பம் இன்றி ஊரின்புறத்தே உள்ள சித்தவட மடம் என்ற மடாலயத்தில் தங்கிவிட்டார் நம்பியாரூரர்.

இரவுப் பொழுதைக் கழிக்க நம்பியாரூரர் தங்கிய அந்த மடம் இன்று பாழ்பட்ட நிலையில் காட்சி அளிக்கிறது. அன்று அவரையும் அவருடன் வந்த நூற்றுக்கணக்கான அடியார்களையும் தன்னிடம் தங்கச் செய்த பெருமை அம் மடாலயத்திற்கு இருந்தது. அடியார்கள் புடைசூழ நம்பி யாரூரர் உறக்கம் கொண்டார். நடுநிசிப் பொழுதில் அவருடைய திருமுடியின்மேல் இரண்டு கால்கள் உதைப்பதை உணர்ந்தார். திருமணக் கோலத்துடன் இருப்பவரும் இறைவனை நேரே காணும் பேறுபெற்றவரும் ஆகிய நம்பியாரூரரை ஒருவர் தம் கால்களால் மிதித்துவிட்டார் என்றால் அதனை என்னென்று கூறுவது? அதிலும் அவருடைய தலையின் மேலேயே ஒருவருடைய கால்கள் பட்டன என்றால் கேட்கவும் வேண்டுமா?

வாழ்க்கையில் இத்தகைய நிகழ்ச்சிகள் பல நிகழ்கின்றன. புகைவண்டியிலும். பஸ்ஸிலும் நிறைந்த கூட்டத்துடன் நாமும் செல்கிறோம். சிற்சில சந்தர்ப்பங்களில் உடன் ஏறுபவர்கள் நம் காலை மிதித்துவிடுவதாக வைத்துக் கொள்வோம். உடனே புராணங்களிற் படிக்கிற 'துர்வாசராக' நாம் மாறிவிடுகிறோம். அதிலும் மிதித்தவர் 'குழாயும் தொப்பியும்' அணிந்தவராகவும் வயது முதிர்ந்தவராகவும் இருந்துவிட்டால் கேட்கவேண்டியதில்லை. நம் கோபம் உச்சநிலையை அடைந்து அவர் கண் பழுதுபட்டதைச் சுட்டிக்காட்டி, வயதானவர்கள் இவ்வாறு கூட்டத்தில் ஏறு வதன் பிழையையும் எடுத்துக்காட்டி ஒரு சொற்பொழிவே செய்து விடுகிறோம் மிதிபட்டவர் இளமையுடையவராய் வாழ்க்கை வசதியுடையவராயும் இருந்து, மிதித்தவர் வயது

முதிர்ந்தவராயும் ஏழையாயும் இருந்தால் இக் காட்சி இன்னும் மோசமான நிலைக்கும் சென்றுவிடுவதுண்டு.

இந்த அநுபவத்தை மனத்துட்கொண்டு அன்று இரவு சித்தமடத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் காண்டல் வேண்டும். நம்பியாரூரரை மிதித்தவர் தம்மைக் கிழவர் என்று கூறிக் கொண்டார். தம் தலையில் ஒருவருடைய கால்கள் படுகின்றன என்பதை உணர்ந்த ஆரூரர் 'அந்தணரே, உம் அடியை என் சென்னியில் வைத்தீர்' என்று கூறுகிறார் இவ் வார்த்தைகளில் எந்தவிதமான அருவருப்போ கோபமோ இருப்பதாகத் தெரியவில்லை; நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியைப் பிறர் ஒருவருக்கு எடுத்துக் கூறும் முகமாக அமைந்துள்ளன இச் சொற்கள். இதனைக் கேட்ட அக் கிழவர் மன்னிப்பு வேண்டும் முறையில் 'திசை அறியா வகை செய்தது என்னுடைய மூப்புக் காண்' என்றே கூறுகிறார்.

**"அந்நிலைஆ ரூரன்உணர்ந்து**
**'அருமறையோய் உன்அடிஎன்**
**சென்னியில்வைத் தனை'என்னத்**
**'திசைஅறியா வகைசெய்தது**
**என்னுடைய மூப்புக்காண்' என்றருள**
**அதற்கு இசைந்து**
**தன்முடிஅப் பால்வைத்தே**
**துயில் அமர்ந்தான் தமிழ்நாதன் "**

(பெ. பு —தடுத்தாள், 86)

எவ்வளவுதான் ஒருவர் மூப்படைந்திருந்தாலும் பிறருடைய தலையில் தம் கால்கள் படும்படி உறங்குதல் பொருத்தமில்லை அல்லவா? இதில் ஒரு சிறப்பும் இருக்கிறது. தம் தலையில் கால்கள் பட்டுவிட்டன என்று மட்டும் ஆரூரர் கூறினாரே தவிரப் பெரியவரை அப்பால் சென்று படுக்குமாறு கூறவில்லை. மூப்புக் காரணமாகவே இது நிகழ்ந்துவிட்டது என்பதைப் பெரியவர் கூறவும், அவ்வாறானால் வேறு இடத்தில் சென்று உறங்குங்கள் என்று சுலபமாகக் கூறிவிடாமல்

ஆரூரர் தாமே வேறு இடத்தில் தலையை வைத்து உறங்கச் சென்றார் என்றால் அவருடைய பண்பாட்டை என்னென்று கூறுவது? புதிய இடத்தில் தலையை வைத்து ஆரூரர் உறங்கப் போனாலும் கிழவர் அவரை விடுவதாக இல்லை. அந்தப் புதிய இடத்திலும் தம் கால்களை நீட்டினார். எங்கும் நிறைந்து அணுத்தோறும் உறைகின்ற பரம்பொருளே கிழ வடிவத்தில் இருத்தலின் புதிய இடத்திற்குத் தாமும் செல்லாமலே அக் கிழவர் தம் கால்களை இருந்த இடத்தில் இருந்தே ஆரூரர் தலையின்மேல் வைத்தார். எத்தனையோ பெரியோர்கள் 'காடுகள் சென்று, கனசடை வைத்து உணவை ஒடுக்கி, அருந்தவங்கள் முயன்று, எவனுடைய திருவடி தம் தலையில் சூட்டப்பட வேண்டும்' என்று விரும்புகிறார்களோ அவனுடைய திருவடி இவ்வளவு எளிதாக ஆரூரரின் தலையில் சூட்டப்படுகிறது. மீட்டும் பழைய கிழவரே இவ்வாறு செய்தார் என்பதை நினைத்த ஆரூரர் புதிய இடத்தில் சென்று உறங்கவும், அங்கும் இக் கிழவரின் திருவடிகள் தம் கடமையைச் செய்தன. இவ்வாறு பன்முறையும் நடைபெற, இறுதியில் ஆரூரர் இந் நிகழ்ச்சியின் அடிப்படையை அறிந்துகொள்ளவேண்டி அக் கிழவரை யார் என்று கேட்கிறார். புதிய ஒருவரை நீர் யார் என்று கேட்பது பண்பாடுடைய செயலன்று. எனவே அவ்வாறு கேட்கவேண்டிய காரணத்தை முன்னர்க் கூறிய பின்னரே அவர் யார் என்று கேட்கிறார் ஆரூரர்.

**அங்கும்அவன் திருமுடிமேல்**
**மீட்டும்அவர் தாள்நீட்டச்**
**செங்கயல்பாய் தடம்புடைசூழ்**
**திருநாவல் ஊராளி**
**'இங்குஎன்னைப் பலகாலும்**
**மிதித்தனைநீ யார்?' என்னக்**
**கங்கைசடை கரந்தபிரான்**
**'அறிந்திலையோ' எனக்கரந்தான்**

(பெ. பு.—தடுத்தாள், 87)

நம்பியாரூரர் ''பல முறையும் இவ்வாறு மிதித்தனை, நீ யார்?'' என்று கேட்கும்பொழுதுதான் கிழவர் மிதித்தது ஒரு முறையல்ல, இரு முறையல்ல, பன்முறை என்பதை அறிய முடிகிறது. இவ்வாறு பன்முறை ஒருவரை மிதிக்க வேண்டுமானால் இது மிதிப்பவருடைய மூப்பினால் நிகழ்ந்தது என்று கூற யாரும் துணியமாட்டார்கள். எனினும், ஆரூரர் காரணம் கேட்கும் ஒவ்வொரு முறையும் கிழவர் இதே காரணத்தைக் கூறி இருத்தல் வேண்டும். ஆதலால்தான் இறுதியாக மிதித்ததன் காரணத்தை அறிய விரும்பாமல் மிதித்தவர் யார் என்று அறிய விரும்புகிறார். விடிய விடிய இச் செயல் நிகழ்கின்றது. செய்பவர் ஒரே கிழவர்; செய்வதற்கு ஒரே காரணத்தைத் திருப்பித் திருப்பிக் கூறு கிறார். செய்யப்படுபவரோ அரசருடைய வீட்டில் வளர்ந்து திருமணக்கோலம் கொண்டுள்ள இளமை நிலையில் உள்ளவர். இந்தச் சூழ்நிலையில் ஆரூரருக்கு எத்துணைக் கோபம் வந்தாலும், கிழவரை எத்துணை ஏசினாலும், இல்லை, தண்டித்தாலும் அதனால் தவறு இல்லை என்றே கூறுவோம். ஆனால், இங்கு ஆரூரர் பேசிய பேச்சிலிருந்துதான் அவருடைய பண்பாட்டை நாம் அறிய முடிகிறது. ஒரு சிறிதும் வெறுப்போ, கோபமோ அடையாமல் ''ஐயா, தாங்கள் மிதிப்பதுபற்றி யான் கவலை கொள்ளவில்லை. ஆனால், காரணம் தெரியாமல் மிதிபடுவதை யான் விரும்பவில்லை. தயைகூர்ந்து காரணத்தைக் கூறிவிட்டுப் பிறகு தாராளமாக உதையுங்கள், பட்டுக்கொள்கிறேன்'' என்று கூறுபவர் போல ''நீ யார்'' என்று மட்டும் கூறுகிறார்.

**"செல்இடத்துக் காப்பான் சினம்காப்பான் அல்லிடத்துக்**
**காக்கில்என் காவாக்கால் என்?"**

என்ற திருக்குறள் (301) நினைவிற்கு வருகிறது. ஒரு மனிதன் தன் கோபத்தை அடக்க வேண்டிய இடத்தைக் கூறுகிறார் ஆசிரியர். தன்னைவிட எளியவன் மேல் வருகிற கோபத்தை அடக்கிக் கொள்ளுதல்தான் பண்பாட்டைத் தெரிவிக்குமே அன்றி வலியவன்மேல் வந்த கோபத்தை

அடக்கிக் கொண்டேன் என்று கூறுவதில் பொருள் ஒன்றுமில்லை. வந்த கோபத்தை அடக்கிக் கொள்ளுதலைச் சிறந்த செயல் என்று கூறலாமேனும் கோபமே வாராதிருத்தல் அதனினும் சிறந்த தன்றோ? இக் குறளின் முற்பகுதிக்கு முற்றிலும் இலக்கியமாகிறார் ஆரூரர். பல அன்பர்கள் புடைசூழ இளமை முறுக்குடன் இருப்பவர் ஆரூரர்; மிதித்தவரோ தொண்டு கிழவர். ஆரூரர் அவரைத் தண்டிக்க வேண்டும் என்று நினைத்திருந்தால் நன்கு தண்டித் திருக்கலாம். திக்கற்ற கிழவரைத் தண்டித்தல் தவறு என்றாலும் தண்டனைக்குரிய குற்றத்தை ஒரு முறையல்ல. பன்முறையும் செய்துவிட்டார் கிழவர். பன்முறையும் அவர் செய்தது அறியாமையால் என்று கூறுவதற்கும் இல்லை. கிழவர் செய்வது தவறு என்று எடுத்துக் கூறியவிடத்தும் அவர் அதனை மீட்டும் மீட்டும் செய்தார் என்றால் அவரை மன்னியாது தண்டித்தால் அதனால் தண்டித்தவரைக் குறை கூற வழி ஒன்றும் இல்லை. என்றாலும் கிழவரைத் தண்டிக்காமல் விட்டுவிடுகிறார் ஆரூரர். அவர்மேல் வந்த கோபத்தை அடக்கிக்கொண்டார் என்றுகூடக் கூறுவதற் கில்லை. கோபம் வந்து அதனை அடக்கியதாக நினைப்ப தற்கும் இடம் இல்லை. கோபம் தோன்றிப் பின்னர் ஆரூரர் அதனை அடக்கி இருந்தால் அக் கோபத்தின் நிழல் அவருடைய சொற்களில் பிரதிபலியாமல் இரா. ஆனால், சொன்ன சொற்கள், யாரும் யாரைப் பார்த்தும் கூறக் கூடியன. ஆதலால்தான் அவர் சினமே கொள்ளவில்லை என்று கூறுகிறோம்.

நம்பியாரூரரின் இப் பண்பாட்டைச் சேக்கிழார் மிகவும் அனுபவிக்கிறார். பண்பாடுடையவர்களை அறிந்துகொள்ளப் பல வழிகள் உண்டு. அவற்றுள் ஒன்று, அவர் வாயிலிருந்து வெளிவரும் சொற்கள்மூலம் அறிவது. ஒருவன் பேசும் சொற்களே அவனைப் பற்றிப் பிறர் அறிந்துகொள்ளக் கருவி யாக அமைவன. மன அடக்கம் இல்லாதபொழுது சொல் அடக்கம் வருதல் என்பது இயலாத காரியம். ஆனால்

சொல் அடக்கத்தைப் பழக்கத்தின் காரணமாகச் சிலர் மேற் கொள்ளலாம். இன்ஷூரன்ஸ் ஏஜென்டுகள் எவ்வளவு சொல் அடக்கம் உடையவர்கள் என்பதை நம்மில் பலரும் அநுபவித்துள்ளோம். அதேபோல வாணிகத் துறையில் ஈடுபட்டுள்ளவர்கட்கும் சொல் அடக்கம், பழக்கத்தில் அமைந்துவிடுகிறது. ஆனால், செயற்கையாகப் பழகிய பழக்கத்தால் வந்த இந்தச் சொல் அடக்கம், வேறு ஒரு பயனைக் கருதித் தோன்றிய இந்த அடக்கம், சந்தர்ப்பம் நேரும்பொழுது அழிந்துவிடும். உள்ளே தோன்றும் கோபத்தை வெளிக்காட்டாமல் அடக்கப் பழகிக்கொண்ட வித்தையே தவிர இது வேறு இல்லை. ஆனால், ஆரூரருடைய வார்த்தைகளில் எவ்விதமான உட்கோபமும் தொனிக்கவில்லை. எனவே, நல்ல பண்பாட்டில் தோன்றிய சொற்கள் அவை என்று அறிய முடிகிறது. இத்தகைய சொல் அடக்கத்தைத்தான் 'வணங்கிய வாய்' என்று குறிப் பிடுகிறார் வள்ளுவர். எத்தகைய பண்பாடு உடையாருக்கு இத்தகைய அடக்கம் கிடைக்கும்? இதோ விடை கூறுகிறது குறள்.

**'நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**
**வாயினர் ஆதல் அரிது'** (குறள், 419)

(நுண்மையான கேள்வி ஞானத்தை உடையவர் அல்லாதார்கள் பணிந்த மொழியினை உடையவராக ஆதல் முடியாது.)

நுண்மையான கேள்வி ஞானம், சிறந்த கல்வி ஞானம் உடையவர்கட்கே இயலும். எனவே, ஆரூரருடைய வணங்கிய வாய்க்குக் காரணம் அவருடைய சிறந்த கேள்வி ஞானமும் கல்வி ஞானமுமே என நினையவேண்டியுளது. சிறந்த கல்வியைப் பெற்றபொழுது, தம் சிறுமையை நினைக்க அக் கல்வி ஏதுவாகலின், பிறர்மாட்டு வணக்கம் தானே வரும் என்பது பெறப்படுகிறது.

நம்பியாரூரருக்குத் தோன்றிய இவ் வணக்கம் அவருடைய சிறந்த கேள்வி. கல்வி ஞானத்தாற் பெறப்பட்டது என்பதைச் சேக்கிழார் தாமே குறிப்பிடுகிறார். நம்பியாரூரைக் கூறும் பொழுது ''நுணங்கிய கேள்வி மேலோன்'' (14) என்றே கூறு கிறார்.

## அடியார் காதல்

''சித்தவட மடத்தில் விடிய விடிய நடைபெற்ற நாடகத் தைக் கண்டோம். இறுதியாக 'நுணங்கிய கேள்வி மேலோ' ராகிய நம்பியாரூரர் வணங்கிய வாயினராக, ''இங்கு என்னைப் பலகாலும் மிதித்தனை நீ யார்?'' என்று வினவினார். இவ் வினாவிற்கு விடை கூறுமுகமாக, கங்கை சடை கரந்தபிரான் ''அறிந்திலையோ?'' எனக் கரந்தான கிழவன், 'இன்னும் நீ என்னை அறிந்துகொள்ளவில்லையா?' என்று கூறிய சொற்கள் ஆரூரருடைய செவிவழிப் புகுந்து உறங்கிக்கொண்டு இருந்த அவருடைய உள்ளுணர்வைத் தட்டி எழுப்பிவிட்டன. உடனே உறக்கம்விட்டு எழுந்த ஆரூரர், இறைவனே இவ்வாறு கூறிப் போனான் என்பதை உணர்ந்து, 'தம்மானை அறியாத சாதியார் உளரோ, என்று தொடங்கும் அழகிய தேவாரத்தைப் பாடிக் கொண்டு திருவதிகை வீரட்டத்தில் அமர்ந்தருளும் பெருமானை வணங்கப் போனார். 'தன்னுடைய எஜமானனை அறிந்து கொள்ளாத ஏவலாளனும் இருத்தல் கூடுமோ' என்ற கருத்துடன் தொடங்கும் அத் தேவாரத்தில் எவ்வளவோ கருத்தை உள்ளடக்கிக் கூறி யுள்ளார். திருவதிகையை வணங்கி, இறைவனுடைய திருவருளைப் பெற்றுக்கொண்டு, திருமாணிக் குழியை வழிபட்டு விட்டு, யாழ் ஒலி, முழவின் ஒலி, நாதவொலி, வேதஒலி, அரம்பையார்தம் கீத ஒலி முதலியன அறாத் தில்லை மருங்கு அணைந்தார்.

தமிழ்நாட்டில் கோவில்கட்குப் பஞ்சமில்லை. என்றாலும் கோயில், என்று பொதுவாகக் கூறினால் அது சிதம்பரத் தையே குறிக்கும். அந்தப் பெரிய ஊரின் நடுவே அமைந் துள்ளது திருக்கோயில் அதன் நடுவே உள்ளது அம்பலம்.

அம்பலம் என்றால் திறந்தவெளி என்பது பொருள். இத் திறந்த வெளியில் (ஆகாசத்தில்) இறைவன் ஓயாது ஒழியாது ஆடுகிறான். அவ் ஆட்டத்தின் பொருளை உணர்ந்து வழி படுகிற அடியார்கட்கு அவ் ஆட்டம் மிக்க இன்பத்தைத் தருவது. நம்பியாரூரர் இத்தகைய அம்பலத்தைச் சென்று காண்கிறார். அக்காட்சியில் ஈடுபட்டார்; தம்மை மறந்தார். இதோ ஆரூரர்தில்லை அம்பலவனை வழிபட்ட முறையைச் சேக்கிழார் கூறுகிறார்;

**"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள**
**அளப்பரும் கரணங்கள் நான்கும்**
**சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும்**
**திருந்துசாத் துவிகமே ஆக**
**இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த**
**எல்லை இல் தனிப்பெரும் கூத்தின்**
**வந்த பேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து**
**மாறுஇலா மகிழ்ச்சியில் மலந்தார்"**

(பெ. பு.—தடுத்தாள்.,106)

(ஐந்து பொறிகளும் அடங்கிக் கண் ஒன்று மட்டும் பயன்பட, அந்தக்கரணங்கள் நான்கும் அடங்கிச் சிந்தை வழிச்செல்ல, முக்குணங்களுள் சத்வகுணமே மிகுந்து நிற்க, சந்திரனைச் சூடிய பெருமான் ஆடுங் கூத்தில் தம்மை மறந்து இன்ப வெள்ளத்துள் மிதப்பார்.)

சில சமயம் நாம் யோசனையில் ஆழ்ந்தபடியே தெரு வில் நடந்து செல்கிறோம். நம்முடைய கண்கள் பலரைப் பார்க்கின்றன ஆனாலும், யாரையும் பார்த்த நினைவு நம்மிடம் தங்குவதில்லை. காரணம் யாது? கண்ணாகிய ஒரு பொறி ஒரு பொருளைக் கண்டாலும், மனமும் சேர்ந்து கண்ணின் வழிச் சென்றால் ஒழியப் பயன் இல்லை. இதே போல ஆழ்ந்து ஒரு பொருளை நோக்கும்பொழுது காதில் விழும் ஒலிகளை நாம் அறிய முடிவதில்லை. இத்தகைய ஒரு நிலையைத்தான் சிதம்பரத்தில் ஆரூரர் பெறுகிறார். ஐந்து

பெரிய பொறி அறிவுகளும் கண்களின்மூலமே வேலை செய்யத் தொடங்கினவாம். ஒவ்வொரு பொறியும் தனித் தனி வேலை செய்யும்பொழுது எவ்வளவு ஆழ்ந்து நிற்குமோ அவ்வளவும் சேர்ந்து கண்ணின்மூலம் வேலை செய்தன. இனி, இதனை அடுத்து மனித மனத்தில் ஆழத்தில் காணப் பெறுவன 'அந்தக்கரணங்கள்' என்பவையாம். மனம், சித்தம் புத்தி' அகங்காரம் என்ற இவற்றுள் இரண்டாவ தாக நின்ற சிந்தையில் அம்பலக் கூத்தனின் சிந்தனை நிறைந்துவிட்டதாம். 'அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையே ஆக, என்ற அடியில் சேக்கிழார் இதனையே குறிக்கிறார்.

மனிதனிடம் காணப்பெறும் குணங்களை, தாமச குணம், இராஜச குணம், சத்துவ குணம் என்று பிரிப்பர். உயர்ந்த பெரியோர்களிடம் காணப்படுவது சத்துவ குணம். ஒவ் வொருவருடைய அன்றாட வாழ்விலும் இம் மூன்று குணங் களும் மாறி மாறி வருமேனும், பெரியோர்களிடம் 'சத்துவம்' மிகுதியாகவும் இருத்தல் உண்டு. ஆண்டவனுடைய திருமுன்னர் நிற்கின்ற ஆரூரருக்கு இம் மூன்று குணங்களும் இருக்கவேண்டிய இடத்தில் சத்துவ குணமே நிறைந்து இருந்ததாம். இதனைத்தான் ஆசிரியர் 'குணம் ஒரு மூன்றும் திருந்து சாத்துவிகமே ஆக' என்றும் குறிப்பிடுகிறார்.

தில்லை சென்ற நம்பியாரூரர் வழிபட்ட முறையைச் சுருக்கிக் கூறலாம், கும்பிடுகின்ற ஆரூரர், கும்பிடப்படு கின்ற அம்பலவர், கும்பிடுவதால் பெறுகிற இன்பமாகிய அனுபவம் என்ற மூன்றும் போக, அனுபவம் ஒன்றுமட்டுமே எஞ்சி நிற்கின்றது. இவ்வாறு பெறுகிற இன்ப அனுபவம் ஒன்றுமட்டும் எஞ்ச, இறைவனை வணங்குவதே சிறந்த வழிபாட்டு முறை எனப்படும். இவ்விதம் இறைவனை வழி படும் பேறுபெற்ற பெரியோர்கள் தம் பிறவியை வெறுப்ப தில்லை. அதற்கு மறுதலையாக இப் பிறவி வேண்டும் என்று விரும்புவார்கள். இப் பிறவியில் இறைவனைக் கும்பிட்டு

அதனால் 'மோக்ஷம்' முதலிய வேறு பயன்களை அவர்கள் கருதுவதுமில்லை விரும்புவதுமில்லை. அதற்கு மறுதலையாக அவனைக் கும்பிடுவதையே பயனாகக் கண்டவர்கள். கும்பிடு தல் வழி, வீடு பேறு பயன் என்று தனித்தனியாகக் கருதா மல் வழியும் பயனும் கும்பிடுதலே எனக் கண்டவர்கள். ஆரூரர் இவ்வாறுதான் கருதினார் என்பதை இதோ சேக்கிழார் குறிப்பிடுகிறார்.

**'தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்தன் திருநடம்**
**கும்பிடப் பெற்று**
**மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாம்**
**இன்பமாம் என்று**
**கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக் கைம்மலர்**
**உச்சிமேல் குவித்துப்**
**பண்ணினால் நீடி அறிவரும் பதிகம் பாடினார்**
**பரவினார் பணிந்தார்**

(பெ.பு.—தடுத்தாள், 107)

(தெண்ணிலா-தெளிந்த ஒளியையுடைய நிலா; வேணியாய்-சடையை உடையவனே; வாலிதாம்-தூய்மை.)

தில்லைக் கூத்தன் நம்பியாரூரைத் திருவாரூர் செல்லு மாறு பணித்தான்; அப் பணி தலைமேற்கொண்டு ஆரூரர் திருவாரூர் சென்றார். புற்றைத் தமக்கு இடமாகக்கொண்டு பூங்கோயில் அமர்ந்தருளும் தியாகராசப் பெருமானைக் கண்டார். தம்மை மறந்த நிலையில் அவனை வழிபட்டார். இறைவன் அருளால் 'தம்பிரான் தோழர்' என்ற பட்டப் பெயரைப் பெற்றார். இத் தொடரின் பொருள் 'இறைவ னுடைய நண்பர்' என்பதாகும்.

பெருமை வாய்ந்த இத் திருவாரூரிலே வாழும் கணிகை யர் குடும்பங்களில் ஒரு குடும்பத்தில் 'பரவையார்' என்ற பெண் ஒருவர் தோன்றி வாழ்கின்றார். இறைவனருளில்

திளைக்கும் அப் பெண்கொடியார் வளர்ந்து தக்க பருவம் எய்தி அழகெலாம் திரண்ட வடிவாய் இருக்கின்றார்.

**மான் இளம் பிணையோ தெய்வ**
**வளர்இள முகை யோ வாசத்**
**தேன்இளம் பதமோ வேலைத்**
**திரை இளம் பவள வல்லிக்**
**கான் இளம் கொடியோ திங்கள்**
**கதிர் இளம் கொழுந்தோ காமன்**
**தான் இளம் பருவம் கற்கும்**
**தனி இளம் தனுவோ என்ன'**

(பெ.பு.—தடுத்தாள், 134)

(இளமான் குட்டியோ, தெய்வத்தன்மை பெற்ற மலரோ, கடலில் உள்ள பவளக் கொடியோ, இளம் பிறையோ, இளங் கரும்போ)

இங்ஙனம் வருணிக்கக்கூடிய முறையில் வளர்ந்துள்ள இப் பெருமாட்டிக்கு இறைவன்மாட்டு உள்ள அன்பும் எல்லை இல்லாமல் வளர்ந்துள்ளது. தினந்தோறும் தியாக ராசப் பெருமானைச் சென்று வழிபட்டுவரும் இயல்புடையவர் பரவையார்.

ஒரு நாள் வழக்கப்படி திருக்கோயில் சென்று வழிபாடு ஆற்றச் செல்கையில், எதிரே அடியார்கள் புடைசூழ நம்பியாரூரர் வருகின்றார். அழகே வடிவாய்த் தம் எதிரே வருகின்ற பரவையாரை ஆரூரர் கண்டார். அவராகக் கண்டார் என்று கூறுவதைக்காட்டிலும் விதிகடைக்கூட்டுவிக்கக் கண்டார் என்று கூறுவதே முற்றிலும் பொருத்தமுடையது. சேக்கிழாரும் 'நற்பெரும் பான்மைகூட்ட' (ஷ 129) என்றே இந் நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறார். இவ்வாறு அவர் கூறவும் ஒரு காரணம் உண்டு. காமன், உலகை வெல்லக் கையில் எடுத்த வில்போலும் அமைந்துள்ள இப் பெண் அரசியை எத்தனையோ ஆடவர் கண்டிருத்தல் கூடுமன்றோ? அதிலும்

அவர் கணிகையர் குலத்தில் தோன்றிய காரணத்தால் பலரும் அவரைக் கண்டிருக்க நியாயம் உண்டு. ஆம். கண்டிருக்க லாமே தவிர, அவரைக் காதலிக்கும் துணிவு பெற்றிருக்க மாட்டார்கள்.

பரவையார் மனம் இறைவன் வழிபாட்டில் ஈடுபட்டிருந்த நிலையில் அவரைப் பிறர் காதலித்திருக்கலாம் என்று எண்ணு வது இயலாத காரியம். ஆதலால்தான் பரவையாரை ஆரூரர் கண்டு காதல் கொண்டது இறைவன் திருவருள் என்று கூறுகிறார் சேக்கிழார். பெரியோர்கள் தம் வாழ்க்கையில் நடைபெறும் அனைத்து நிகழ்ச்சிகளையும் இறைவன் திரு வருளால் நிகழ்ந்தன என்றே நினைப்பர். இந்நிலையில் ஆரூரர் பரவையாரையும், பரவையார் ஆரூரரையும் ஒரு கண நேரம் கண்டு சென்றுவிட்டனர். இக் கண நேரத்தில் இருவரும் மாறிச் சென்று ஒருவர் மனத்தில் ஒருவர் அமர்ந்து விட்டனர். பரவையாரைப்பற்றிக் கூறவந்த ஆசிரியர் 'அணடர்பிரான் திருவருளால் அயல் அறியா மனம் விரும்பப் பண்டைவிதி கடை கூட்டப் பரவையாரும் கண்டார்' (ஷெ.142) என்று கூறும் முறையில் பிறரைக் காண விரும்பாத பரவையார் ஆரூரரை மட்டும் ஏன் கண்டார் எனில் விதியே இவ்வாறு செய்தது எனக் கூறுகிறார்.

பரவையைக் கண்டு தம் மனத்தை அவள்பால் பறி கொடுத்த ஆரூரர், தம் இல்லம் சென்று வருந்துகிறார். காதலியைப் பற்றிக் காதலன் காணும் கனவு இதோ பேசப் படுகிறது.

" கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவன் அருளோ அறியேன் என்று அதிசயித்தார்"

(பெ.பு.—தடுத்தாள், 140)

தம் காதலியைப் பற்றிக் கற்பகத்தின் பூங்கொம்பு என்றும், காமன்தன் பெருவாழ்வு என்றும் பேசுபவர் உலகில்

உண்டு. ஆனால், அக் காதலியைச் சிவன் அருள் என்று நினைப்பவர் உண்டோ? நம்பியாரூரர் போன்ற ஒரு சிலரைத் தவிரப் பிறர் அவ்வாறு எண்ண இயலாது. காதலிக்கப்பட்ட பெண்ணைச் சிவன் அருள் என்று நினைக்கும் ஆடவனுக்கு ஏற்ற காதலியோ அவள் என்று காண்பது இன்றியமையாத தன்றோ? இதோ பரவையார் ஆரூரரைப் பிரிந்து சென்று வருந்துகிறார் :

"முன்னேவந்து எதிர்தோன்றும்
முருகனோ! பெருகுஒளியால்
தன்னேரில் மாரனோ!
தார்மார்பின் விஞ்சையனோ!
மின்னேர்செம் சடைஅண்ணல்
மெய்அருள்பெற் றுடையவனோ!
என்னே! என் மனம்திரித்த
இவன்யாரோ எனநினைந்தார்"
(பெ.பு.—தடுத்தாள், 144)

காதலியைச் சிவன் அருள் என்று நினைக்கிறார் காதலர் தன் காதலனைச் சிவபெருமான் அருளை உண்மையில் முழுவதும் பெற்றவன் என்று நினைக்கிறாள் அக் காதலி. எனவே, இவ் விருவர் இடையேயும் தக்க பொருத்தம் அமைந்து விட்டதை அறிகிறோம்.

"பாச மாம்வினைப் பற்றுஅறுப் பான்மிகும்
ஆசை மேலும்ஓர் ஆசை அளிப்பதுஓர்
தேசின் மன்னிஎன் சிந்தை மயக்கிய
ஈசனார்அருள் எந்நெறிச் சென்றதே"
(பெ.பு.—தடுத்தாள், 152)

பெரியோர்கள் இல்லறத்தைப் 'பந்தம்' 'கட்டு' என்று கூறுவர். இவ்வாறு உள்ள கட்டு நீங்கினால் அன்றி இறைவன் அடி கூடல் இயலாதென்பர். ஆனால், இத் தமிழ்நாட்டில்

வாழ்ந்த பெரியோர்கள் அக் கட்டு அல்லது பந்தத்தையும் இறைவன் அருளாகவே மதித்தனர். இக் கருத்தையே மாணிக்கவாசகரும் 'பந்தமுமாய் வீடும் ஆயினார்க்கு' என்று பொற்சுண்ணப் பதிகத்தின் இறுதிப் பாடலில் குறிக்கிறார். ஆதலால் ஆரூரர்,

> **"பந்தம் வீடு தரும்பர மன்கழல்**
> **சிந்தை ஆர்வுற உன்னும்என் சிந்தையை**
> **வந்து மால்செய்து மான்என வேவிழித்து**
> **எந்தை யார்அருள் எந்நெறிச் சென்றதே"**
>
> (பெ.பு. —தடுத்தாள், 154)

என்று வருந்துகிறார். ஆரூரர் வருத்தத்தை மிகுதிப் படுத்தவே போலும் காதலர்கட்குத் துன்பஞ் செய்யும் மாலைக் காலம் வந்து இருளும் கவிந்துவிட்டது. காதலர்க்கு நெருப்பைவாரி இறைப்பவனாகிய சந்திரன் தோன்றுகிறான். அதனைக் கவிஞன் இதோ கூறுகிறான்; இரவாகிய பெண் சிரிக்கிறாளாம், நிலவாகிய பற்களைக்காட்டி. ஏன் தெரியுமா? வன் தொண்டராகிய ஆரூரரே ஒரு பெண் பொருட்டு இவ்வாறு வருந்தினால் ஏனைய ஆண் மக்கள் என்ன கதி ஆவார்கள் என்று கேட்டுச் சிரித்தாளாம்.

> **"மறுவில் சிந்தைவன் தொண்டர் வருந்தினால்**
> **இறும ருங்குலார்க்கு யார்பிழைப் பார் என்று**
> **நறும லர்க்கங்குல் நங்கைமுன் கொண்டபுன்**
> **முறுவல் என்ன முகிழ்த்தது வெண்ணிலா"**
>
> (பெ.பு. தடுத்தாள்—160)

## திருமணமும் சீர்திருத்தமும்

பரவையாரைப் பிரிந்து துயில் கொள்ளாமல் நம்பி யாரூரர் வருந்திய விதத்தைக் கண்டோம். அதேபோல நம்பியாரூரைக் கண்டதிலிருந்து அவர்பால் தன்னெஞ்சைப் பறிகொடுத்த பரவையாரும் ஆரூரரைப் போலவே வருந்து கிறார். 'மணிநிலா முன்றலில் மலர்ப் படுக்கையில்' வந்து

படுத்த பரவையார் மனம் நிலைகொள்ளாமல் தவிக்கிறார். முன்பின் தெரியாத ஒருவர்மாட்டுத் தம் மனத்தை விட்டு விட்ட அவர், அவ்வாடவரை யார் என்று அறிந்து கொள்ளக்கூட இல்லை ஆடவர்களைப்போல் மாதவர்கள் தம் மனக்கருத்தை விரைவில் வெளியிடுவதில்லை. அதுவும் அக் கருத்து, காதல் தொடர்புடையதாக இருப்பின் பிறரிடம் எளிதாகக் கூறிவிட மாட்டார்கள்.

**"குடத்து விளக்கேபோல் கொம்பு அன்னார் காமம்**
**வெளிப்படா பூத்தார் வழுதி—வெளிப்படின்**
**ஆபுகு மாலை அணிவரைமேல் தீயேபோல்**
**ஊர்அறி கௌவைதரும்"**

என்ற பழம் பாடல் உண்மையை நன்கு விளக்குகிறது. வெளிப்படாத நிலையிலிருந்த பரவையார் காதல், வெளிப்படும் அளவுக்கு வந்துவிட்டது. தாங்கும் அளவைக் கடந்துவிட்ட பரவையார் 'அவ்வளவில் அருகிலிருந்த சேடி முகம் நேர் நோக்கி'த் தன் மனத்தில் உழன்றுகொண்டே இருந்த வினாவைக் கேட்டுவிட்டார். அவ்வினா, தாம் சந்தித்த அவ் ஆடவர் பெருமகன் யார்? என்பதுதான். அதற்கு அச் சேடி, 'இவ்வுலகில் அந்தணராய் இருவர் தேடு ஒருவர் தாம் எதிர்நின்று ஆண்ட சைவ முதல் திருத்தொண்டர் தம்பிரான் தோழனார் நம்பி' என்று விடை கூறினார்.

அவர் யார் என்ற பரவையின் வினாவுக்குத் 'தம்பிரான் தோழர்' என்று அத் தோழி விடை கூறி இருந்தாலே போதுமானது. ஆனால், அவர் பெயரை மட்டும் குறிப்பிட்டால் 'எந்த ஊரார், எந்த மனநிலை உடையார், திருமணம் ஆனவரா' முதலான வினாக்கள் தொடங்குமல்லவா? எனவே, அறிவுமிகுந்த அத் தோழி, பரவையார் மன நிலையை அறிந்துகொண்டு அவர் பின்னர் கேட்கக் கூடிய அத்தனை வினாக்களையும் மனத்தில் எதிர்பார்த்து, அவ் வினாக்கள் தோன்றுமுன்னரே அவை அனைத்திற்கும்

விடை கூறிவிடுகிறார். இவ்வாறு வினா இல்லாமலே அவற்றை எதிர்பார்த்து விடைகூறும் சிறப்பைச் 'சொற் செல்வம்' என்று கூறுவார்கள். இத்தகைய சொற்செல்வம் படைத்த ஒருத்தியே பரவையின் உயிர்த் தோழியாக இருந்திருக்க வேண்டும். நம்பியாரூரர் அந்தணர் என்பதும், திருமணத்தின்போது அவர் இறைவனால் தடுத்து ஆட் கொள்ளப்பெற்றவர் என்பதும், சைவப்பற்று மிகுதியும் உடையவர் என்பதும் அவர் கூறிய விவரங்கள், இவை அனைத்தையும் காட்டிலும் இறைவனிடம் பேர் அன்பு பூண்டவர் என்பதே மிக முக்கியமான செய்தியாகும். ஏனெனில், இச் செய்தி நம்பியாரூரராகிய அந்தணரையும், பரவையாராகிய பதியிலார் குலத்தவரையும் ஓர் இனத்தவராக ஆக்கிவிட்டது. இறைவன் அடியார்களுள் சாதிபேதம் ஏது? அவர்கள் அனைவரும் ஒரே இனந்தான்.

'எம்பிரான் தமரேயோ?' என்னா முன்னம் வன் தொண்டர்பால் வைத்த மனக் காதல் அளவின்றி வளர்ந்து பொங்கிவிட்டதாம் பரவையாருக்கு. தம்மால் காதலிக்கப்பட்ட வரின் ஏனைய குணநலங்களைக் காட்டிலும் அவர்களுடைய குறிக்கோளும் தம்முடைய குறிக்கோளும் ஒன்று என்று ஆகிவிடுமாயின் காதலர்கட்கு அதனைவிட இன்பம் தருவது வேறு யாது உளது? இச் செய்தி பரவையாருக்குப் பெரிய உவகையைத் தந்தபோதிலும், அந்த நேரத்துக்கு அவருடைய துன்பத்தைத் தணிக்கவேண்டும் என்ற நல்ல எண்ணத்தால், தோழிமார்கள் சில காரியங்களைச் செய்தனர். ஆனால், அவர்கள் செய்த அனைத்தும் நேர்மாறான பயனைத் தந்தனவாம்.

அவர்கள் செய்த செயல்கள்தாம் என்ன தெரியுமா? நல்ல வாசனை பொருந்திய சந்தனத்தைக் கொண்டுவந்து பூசினார்கள். பன்னீர்த் திவலை மேலே படும்படியாக வீசினார்கள். ஈரத்தோடு கூடிய நீர்க்குளிரி என்னும் கொடியில் படுக்கவைத்தார்கள். இன்னும் அவர்கள் அறிந்த உபசாரணை அனைத்தையும் செய்தார்கள். ஏன்? காதல்

நோய்கொண்ட பரவையார் வெப்பம் தாங்கமாட்டாமல் பட்ட துன்பத்தைக் குறைக்கவே சந்தனம் முதலியவற்றைப் பூசினார்கள். ஆனால், குளிர்ச்சி பொருந்திய சந்தனக் குழம்பு பரவையாருக்கு நெருப்பாகக் கொதித்ததாம். அந் நெருப்பில் போடும் சமித்தைப்போல மன்மதனும் தன் அம்புகளை அவர் மேல் எய்தானாம்.

'ஆரம்நறும் சேறுஆட்டி அரும் பனிநீர்
 நறுந்திவலை அருகு வீசி
ஈரஇளம் தளிர்குளிரி படுத்துமட
 வார்செய்த இலைவயும் எல்லாம்
பேரழலின் நெய்சொரிந்தால் ஒத்தனமற்
 றதன்மீது சமிதை என்ன
மாரனும்தன் பெரும்சிலையின் வலிகாட்டி
 மலர்வாளி சொரிந்தான் வந்து'

(பெ.பு.—தடுத்தாள்; 173)

(ஆரம்-சந்தனம்; குளிர்-ஒருவகைக் கொடி; சமிதை-நெருப்பில் போடும் சமித்துக் குச்சிகள்; மாரன்-காமன்; மலர்வாளி-மலர் அம்புகள்.)

சந்தனம் நெருப்புப்போல் சுடுவதும், தென்றல் காற்று சுடுவதும், இளம் பிறைச் சந்திரன் அனலை இறைப்பது காதல் கைகூடாத இடத்துக் காதலர்கள் அடைகின்ற அனுபவம். பரவையார் பட்ட துயரை இதே சேக்கிழார் குறிக்கிறார். 'மலர் அமளித் துயில் ஆற்றாள், வரும் தென்றல் மருங்கு ஆற்றாள்' என்ற இவ்வனுபவம் தம்பியாரூரைப் பெறமுடியாத பரவையாரின் அனுபவம். மற்றொரு பெண்ணின் அனுபவத்தை 'நந்திக் கலம்பக' ஆசிரியரும் குறிக்கிறார்.

'செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழும் சீதச் சந்தன மென்று யாரோ தடவினார்'

இனி, ஒரு பெண்ணுக்கு இதே சந்தனமும், தென்றலும், இளம்பிறைச் சந்திரனும் நெருப்பாகி விட்டது; அப் பெண்

'குற்றாலக் குறவஞ்சித்' தலைவியாகிய வசந்த வல்லி என்பவள். அவள் அனுபவத்தைக் கேளுங்கள்:

**"விண்ணிலே நெருப்பை வைத்தாய் தண்ணிலாக்**
**கொடும்பாவி வெண்ணிலாவே**
**தண்அமு துடன்பிறந்தாய் வெண்ணிலாவே,**
**தண்ணளியை ஏன் மறந்தாய் வெண்ணிலாவே"**

(அமிழ்தம் தோன்றிய பாற்கடலில் முதலில் சந்திரன் தோன்றியதால் இவ்வாறு கூறினாள்.)

**"கைக்கரும்பு என்ன கணைஎன்ன நீ என்ன மன்மதா இந்தச்**
**செக்கரும் பாவி நிலவுமே போதாதோ மன்மதா"**

(குற்றாலக் குறவஞ்சி; 23)

(செக்கர்—மாலைக்காலத்தில் சிவந்து தோன்றும் அந்தி வானம்.)

இப் பாடல்களில் காணும் தலைவியரைப் போலவே நம்பி யாரூரிடம் காதல் கொண்ட பரவையார் வருந்துகிறார். தோழிகள் செய்யும் உபசரணை அனைத்தும் அவர் காதல் தீயை வளர்க்கப் பயன்படுகின்றனவே தவிர, வேறு பயன் விளைவிக்கவில்லை. தோழிகளை நோக்கி அவர் இதோ பேசுகிறார்: 'கந்தம் கமழ்மென் குழலீர்! இது என் கலைவாண் மதியம் கனல்வான் எனைஇச், சந்திரன் தழலைப் பனிநீர் அளவித் தடவும் கொடியீர்! தவிரீர் தவிரீர் வந்திங்குலவி நிலவும் விரையார் மலையா னிலமும் எரியாய் வருமால்'— குளிர்ந்த இயல்புடைய மதியம் நெருப்பை வீசுவதாகவும் அத் தோழியர் சந்தனம் என்ற பெயரில் நெருப்பைப் பன்னீருடன் கலந்து பூசுவதாலும், அச் செயலைச் செய்யாது இருக்கும்படியாகவும் அவர் வேண்டுகிறார். இவ்வாறெல்லாம் பரவையார் வருந்துவது, காதல் கொண்டு வருந்தும் ஏனைய பெண்களைப் போலவே அமைந்துள்ளது. ஆனால், மற்றைப் பெண்கள் நிலவையும், தென்றலையும், சந்தனத்தையும் பழிப்பதுடன் நின்றுவிடுவர். ஆனால்,

இறைவன்பால் நீங்கா அன்பு பூண்ட பரவையாரோ ஒரு படி மேலே செல்கிறார்.

தம் வாழ்க்கையின் ஆழத்தில் நின்று தம்மைச் செலுத்துவது இறைவனுடைய திருவருள் என்பதை உணர்ந்த பெரியோர்கள், அவ் வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் அத் திருவருளே காரணம் என்று நினைப்பதில் தவறு இல்லை அன்றோ? ஆற்றோட்டம் போல் நேரே சென்று கொண்டிருந்த தம்முடைய வாழ்வில் இக்காதல் குறுக்கிட்டது இறைவனுடைய திருவருள் என்று ஒருவர் நினைப்பாரே யானால், அக் காதல் முற்றுப்பெற வேண்டும் என்றாலும் அத் திருவருளைத்தானே வேண்ட வேண்டும்? இதோ பரவையார் இறைவனிடம் தம் துயரை வெளியிட்டு வேண்டுகிறார் !

**'தேரும் கொடியும் மிடையும் மறுகில்**
**திருவா ரூரீர் நீரே அல்லால்**
**ஆர்என் துயரம் அறிவார் அடிகேள்!**
**அடியேன் அயரும் படியோ இதுதான்;**
**நீரும் பிறையும் பொறிவாள் அரவின்**
**நிரையும் நிரைவெறண் தலையின் புடையே**
**ஊரும் சடையீர்! விடைமேல் வருவீர்!**
**உமதுஅன் பிலர்போல் யானோ உறுவேன்?**

(பெ. பு—தடுத்தாள், 177)

(தேரும் கொடியும் நிறைந்து செல்லும் தெருக்களை யுடைய திருவாரூர் இறைவனே, என் துயரத்தை யார் அறிவார்கள்? யான் வருந்துவது முறையோ? கங்கையும், பிறைச் சந்திரனும், பொறிகளோடு கூடிய பாம்பின் கூட்டமும் எலும்பு மாலையின் இடையே ஊர்ந்து செல்லும் சடையை உடையவனே, உன்பால் அன்பில்லாதவர்கள் போல் யானும் வருந்துவது முறையோ?)

இறைவன் அடியார்கள், ஆணாயினும் பெண்ணாயினும் இம்மனநிலையுடனேதான் இருப்பார்கள். தம் துயரைத்

தீர்க்க இறைவனையன்றி வேறு யாராலும் இயலாது என்ற உறுதிப்பாட்டை அவர்கள் பேச்சில் காணமுடிகிறது. அம் மட்டோடு இல்லை உன்பால் அன்பு இல்லாதவர்கள்போல் யான் வருந்துவதும் முறையோ என்று பரவையார் பேசுவதும் அறிதற்குரியது. துயரம் என்பது அனைவருக்கும் பொதுவானதுதான். ஆனால் ஆண்டவனிடம் அன்புடை யவர்கள் தம் துயரைப் பிரார்த்தனை மூலம் போக்கிக் கொள் கின்றனர். பிரார்த்தனையால் அவர்கள் சாதித்துக்கொள்ளாத செயலே இல்லை என்றுகூடக் கூறிவிடலாம். 'More things are wrought by prayer than this world dreams of' என்ற கவிஞர் டென்னிஸன் பாடல் வரிகள் இவண் ஒப்பு நோக்கத் தக்கன.

பரவையார் இறைவனை வேண்டும் அதே நேரத்தில் நம்பியாரூரரும் இறைவனை வேண்டுகிறார். இருவரும் ஒரு முகப்பட்ட மனத்துடன் வேண்டினால் அது நடவாது போய் விடுமா? இறைவன் அருள் திருவாரூரில் வாழும் அன்பர்கள் மூலம் வெளிப்படுகிறது. அத்தொண்டர்கள் அனைவரும் கூடி மறுநாளே நம்பியாரூரருக்கும் பரவையாருக்கும் சிறந்த முறையில் திருமணம் நிகழ்வித்தனர்.

## காவியப் புதையல்

பரவையாரை மணந்துகொண்ட நம்பியாரூரர் திருவா ரூரிலேயே தங்கிவிட்டார். பரவையாரோடு இல்லறம் நடத்தி யும் தியாகேசனை வணங்கி ஆனந்தம் பெற்றும் நாள்களைக் கழித்துக்கொண்டிருக்கிறார். ஆண்டவனிடம் தோழமை கொண்டு பழகினாராதலின் தாம் கொண்ட மாப்பிள்ளைக் கோலத்துடன் திருக்கோயில் செல்வதும் வருவதுமாக இருந்தார். 'எக்கோலம் கொண்டாலும் முத்தர் மனம் இருக்கும் மோனத்தே' என்ற முதுமொழிக்கு இணங்க, ஆரூரர் மாப்பிள்ளைக் கோலத்துடன் கோயிலுக்குச் சென்றாலும் அவருடைய மனம் இறைவனிடம் ஈடுபட்டிருந்த தாதலின் புறக் கோலத்தால் தவறு நேரவில்லை. அந்தரத்து அமரர் போற்ற அணிகிளர் ஆடை சாத்தி, சந்தனத்து

அளறு தோய்ந்த குங்குமக் கலவை சாத்தி சுந்தரச்சுழியம் சாத்தி, சுடர்மணிக் கலன்கள் சாத்தி, இந்திரத் திருவின் மேலாம் எழில் பெற விளங்கித் தோன்ற' (184) அப்பெரியார் வாழ்ந்த வாழ்க்கை நமக்கு அறிவிக்கப்படுகிறது. ஏனைய நாடுகளில் தோன்றிய சமயங்கள் எண்ணற்ற கட்டுப்பாடுகளை வகுத்து இவற்றைக் கையாண்டால் ஒழிய, வீடு பேற்றை அடைய முடியாது என்று கூறவும் இந்நாட்டில் தோன்றிய சமயங்கள் மட்டும் இதுபற்றி வேறு கருத்துக் கொண்டன. ஆண்டவனால் உண்டாக்கப் பெற்ற இப்பரந்த உலகில் உள்ள பொருள்களை நாம் அனுபவிக்காமல் இருக்க வேண்டும் என்பது இறைவன் கருத்தானால் ஏன் இப் பொருள்களைப் படைத்தான்? படைப்பின் கருத்தை அறியாதவர்களே பொறி புலன்களால் அனுபவிக்கப் பெறுவனவற்றை வேண்டாம் என்பார்கள். ஒன்றிலும் பொறிபுலன் செல்லாமல் அடக்க வேண்டும் என்றால் ஏன் இவைகள் படைக்கப்பட்டன? இது கருதியே போலும் திருமூலநாயனார்,

> **'ஐந்தும் அடக்கு அடக்கு என்பர் அறிவிலார்**
> **ஐந்தும் அடக்கும் அமரரும் அங்கில்லை'**

என்று 'திருமந்திரத்தில்' அருளினார்.

எனவே, எல்லாப் பொருள்களையும் அனுபவித்துக் கொண்டே மனத்தை மட்டும் இறைவன் திருவடியில் வைத்திருந்தால் போதுமானது. இது கருதியே 'திருநாவுக்கரசர்',

> **'புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே**
> **வழுவாது இருக்க வரந்தரல் வேண்டும்'**

என்றார்.

மேலே கூறிய முறையில் மாப்பிள்ளைக் கோலத்துடன் திருவாரூர்க் கோயிலுக்கு ஒரு நாள் நம்பியாரூரர் சென்றார். திருக்கோயிலின் முன்மண்டபம் 'தேவாசிரிய மண்டபம்' என்று கூறப்படும். அந்த நாளில் இறைவனுடைய அடியார்கள் அம் மண்டபத்தில் நிறைந்து இருப்பார்கள்,

அவ்வடியார்களைக் கண்ட ஆரூரர் இவ்வடியார்க்கு நான் அடியவனாக ஆகும் நாள் என்றோ என்று எண்ணிக் கொண்டே இறைவனை வணங்கப் போனார். இறைவன் அருளால் அடியார்கள் பெருமை உணர்த்தப் பெற்றார் ஆரூரர். முன்னர் கூறியபடி, இத் தமிழர்கள், அடியார்களை இறைவனைக் காட்டிலும் போற்றினார்கள். எனவே, ஆரூரர் முன் தோன்றி, இறைவனே அடியார் பெருமையை இதோ பேசுகிறான்.

> 'பெருமையால் தம்மை ஒப்பார்
> பேணலால் எம்மைப் பெற்றார்
> ஒருமையால் உலகை வெல்வார்
> ஊனமேல் ஒன்றும் இல்லார்
> அருமையால் நிலையில் நின்றார்
> அன்பினால் இன்பம் ஆர்வார்
> இருமையும் கடந்து நின்றார்
> இவரை நீ அடைவாய்'

அடியார்கள் பெருமைக்கு உவமை கூற வேறு பொருளே இல்லையாதலால், 'தம்மை ஒப்பார்' என்று கூறினார். இவ்வளவு பெருமை அவர்கட்கு வரக் காரணம் யாது என்ற வினாவிற்கு விடை கூறுவார் போன்று, 'நெஞ்சு உறுதியிலும் ஒருமுகப்பட்ட தியானத்திலும் உலகையே வென்று விடக் கூடியவர்கள்' என்றும் கூறுகிறார்.

இத்தகைய அடியார்கட்குத் தாமும் அடியவனாக ஆக வேண்டும் என்ற எண்ணத்தால் உந்தப் பெற்ற நம்பியாரூரர் இறைவனை வேண்டுகிறார் இறைவன் திருவருளால் 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று தொடங்கி, அவர் காலத்தும் அவருடைய காலத்தின் முன்னும் தமிழ் நாட்டில் வாழ்ந்த அடியார்கள் அனைவரையும் குறிப்பிட்டு அனைவருக்கும் அடியேன் என்று பாடினார்.

நம்பியாரூரர் பாடிய இப் பதினொரு பாடல்களும் 'திருத் தொண்டத் தொகை' என்று கூறப்பெறும். இப் பாடல்

களின் மூலம் நம்பியாரூரர் தமிழ்நாட்டிற்கும் தமிழ்மொழிக்கும் ஓர் ஒப்பற்ற தொண்டைச் செய்து விட்டார் என்று கூறலாம். வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் இல்லாமல் இன்ப வேட்டை ஒன்றையே வாழ்க்கையின் பயன் என்று கொண்டிருந்த தமிழ் மக்களைத் தட்டி எழுப்பி, ஒரு குறிக்கோளுடன் வாழ்ந்து பயன் அடையச் செய்த பெருமை, பெரிய புராணம் பாடிய சேக்கிழாருக்கு உரியது ஆனால், சேக்கிழார் பெரியபுராணம் பாடக் காரணமாக இருந்தது 'திருத்தொண்டத் தொகையாகும்'. ஆதலால்தான் உயிர்கள்மாட்டுக் கொண்ட கருணையினால் திருத்தொண்டத் தொகையை நம்பியாரூரர் பாடினார்; 'அவ்வாறு பாடிய அவருடைய திருவடிகளை வணங்க வந்த இப் பிறவிக்கு வணக்கம் செலுத்துகிறேன்' என்ற பொருளில் பெரிய புராணத்தில் ஒரு பாடல் பாடுகிறார்.

"நேசம் நிறைந்த உள்ளத்தால்
நீலம் நிறைந்த மணிகண்டத்து
ஈசன் அடியார் பெருமையினை
எல்லா உலகும் தொழஎடுத்துத்
தேசம் உய்யத் திருத்தொண்டத்
தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க
வந்த பிறப்பை வணங்குவாம்"
(பெ. பு.—சண்டேசர், 60)

இவ்வாறு சேக்கிழார் கூறக் காரணம் யாது? திருத்தொண்டத் தொகை முழுவதும் தமிழ்நாட்டில் பிறந்த அடியார்களினுடைய வரலாற்றையே கூறுகிறது. அதில் கூறப் பெற்றவர்கள் யாவரும் 'வடவேங்கடம் தென்குமரி யாயிடைத் தமிழ் கூறும் இந் நல்லுலகில்' பிறந்தவர்களே யாவர். எவ்வளவு பெரியவர்களும் பிறந்த பொன்னாட்டை விரும்பத் தான் செய்கிறார்கள். நாடு, மொழி, கலை, பண்பாடு என்பவற்றைப் பற்றிப் பேசும் இத்தகைய ஒரு பாடலைத்

'தேசீயப் பாடல்' (National Poetry) என்று கூறலாம். நம்பியாரூரர் இந்தக் கருத்துடன்தான் திருத்தொண்டத் தொகையைப் பாடினாரோ என்றுகூட நினைக்க வேண்டியுள்ளது. உதாரணமாக, ஒன்றைக் காண்போம். திருப்புன்கூர் என்ற ஊரில் தாம் பாடிய 'அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத' என்ற தேவாரத்தில் மார்க்கண்டேயருடைய வரலாற்றை அப்படியே கூறுகிறார். இவ்வளவு அழகாக அவருடைய வரலாற்றைக் கூறும் நம்பியாரூரருக்கு மார்க்கண்டரைப் பற்றித் தெரியாது என்று கூறமுடியுமா? பின்னர் ஏன் அவரைப் பற்றித் திருத்தொண்டத் தொகையில் குறிப்பிடவில்லை? திருத்தொண்டத் தொகையில் கூறப்பெற்ற அடியார்களைப்போல் மார்க்கண்டர் பக்தர் அல்லர் என்று தான் கூறமுடியுமா? பின்னர் எந்தக் காரணத்தால் அவருடைய பெயரை ஆரூரர் விட்டுவிட்டார்? எவ்வளவு ஆராய்ந்தாலும் ஒரே வழியில்தான் இதற்கு விடை கூற இயலும். மார்க்கண்டேயருடைய வரலாற்றை ஒருவேளை மறதியினால் விட்டுவிட்டார் என்று சமாதானம் கூறினாலும் மற்ற உதாரணங்களும் சில உள.

சிதம்பரம் சென்று பெருமானின் ஆனந்தத் தாண்டவத்தைக் கண்டு களிக்காத அடியார்களே இல்லை. சைவ சமயாசாரியர்கள் என்று கூறப்பெறும் நால்வர் பெருமக்களும் தில்லையில் பல பாடல்கள் பாடியுள்ளனர். அத்தகைய புகழ் பெற்ற தில்லைப் பதிக்குப் பழமையான பல பெயர்களுள் 'புலியூர்' என்பதும் ஒரு பெயராகும். தேவாரத்திலேயே பல இடங்களிலும் பயின்று வரும் இந்தப் பெயர் காரணப் பெயராகும். வியாக்கிரபாதர்' எனப் பெறும் புலிக்கால் முனிவர் வழிபட்ட காரணத்தால் 'புலியூர்' என்ற பெயரைப் பெற்றது. எனவே, புலியூர் என்று கூறும் பொழுதெல்லாம் புலிக்கால் முனிவர் நினைவு வந்தே தீரும் அன்றோ? அத்தகைய ஒரு முனிவர் பெயரைத் திருத்தொண்டத் தொகையில் ஏன் ஆரூரர் பாடவில்லை? மார்க்கண்டரை மறந்திருக்கலாம் என்று கூறினாலும், இதனை அவ்வாறு கூறல் இயலாது. ஏன் எனில், திருத்தொண்டத் தொகையில் தொடக்

கமே 'தில்லைவாழ்' என்பதாகும். தில்லையை முதல் வரியில் கூறினால் அடுத்தாற்போல் புலிக்கால் முனிவர் நினைவு வரத்தானே செய்யும். அவ்வாறு இருந்தும் ஆரூரர் இவ் விருவரையும் விட்டுவிட்டார் என்றால் யாது காரணமாக இருக்கலாம்? முதலிற் கூறியபடி ஒரே ஒரு காரணம்தான் கூற முடியும். அது யாது? இவ்விருவரும் தமிழ்நாட்டு எல்லைக்குள் பிறந்தவர்கள் அல்லர். தமிழ்நாட்டில் உள்ள சிதம்பரத்தில் வியாக்கிர பாதரும், திருக்கடவூரில் மார்க் கண்டரும் வீடுபேற்றை அடைந்தாலும், அவர்கள் பிறந்தது தமிழ்நாட்டில் அன்று ஆதலால்தான் ஆரூரர் அவர்களைப் பாடாமல் விட்டுவிட்டார்.

தமிழ்நாட்டில் பிறந்த அடியார்களைமட்டும் திருத் தொண்டத் தொகையில் பாடினார் என்ற காரணத்தால், அவர்கள் மட்டுமே அடியார்கள் என்ற குறுகிய நோக்கம் கொண்டவரோ ஆரூரர் என்று நினைத்துவிடவேண்டா. திருத்தொண்டத் தொகை வரலாற்று உணர்ச்சியுடன் பாடும் பொழுது தமிழர்களை மட்டும் குறிப்பிட்ட நம்பியாரூரர், அத் தொகையின் ஒரு பாடலில் தம் பரந்த நோக்கத்தை வெளி யிடுகிறார். ஏனைய சமயவாதிகளைப்போல் தங்கள் சமயமே உயர்ந்தது என்றும் அதுவே வீடு பேற்றுக்கு வழி என்றும் நினைப்பவர்கள் அல்லர் இவ்வடியார்கள். எனவே, நம்பி யாரூரர் பரந்த நோக்கத்துடன் உலகின் எப்பக்கத்தில், எக் காலத்தில் தோன்றியவர்களாயினும் இறைவனை அவர்கள் எந்தப் பெயரில் வழிபட்டாலும் அவர்கட்கும் அடியேன் என்று கூறுகின்றார். 'அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்பது அப்பாடலில் ஒரு தொடர். அப்பாலும் என்ற சொல்லுக்குக் காலம், தேசம் இரண்டையும் கடந்து, அப்பாலும் இருப்பவர்கள் என்பதே பொருள். நம் நாட்டை அல்லாத பிற நாடுகளிலும், நம் காலத்தை அல்லாமல் அதற்கு முன்னும் பின்னும் வாழ்ந்தவர்களையும் குறிக்கிறார் இவ்வடியால். இவ்வளவு பரந்த நோக்குடன் நம்பியாரூரர் 'திருத்தொண்டத் தொகை' பாடியது உண்மைதான்.

எனினும், இப்பாடலின் மூலம் அவருடைய நாடு, மொழிப் பற்றுகளே வெளியாகும். அதனாலேயே தமிழ் நாட்டில் பிறந்து சிவபெருமானையே பரம்பொருள் என்று கருதி வழிபட்டவர்களைமட்டும் வரிசைப்படுத்திக் கூறியுள்ளார் பாடல் முழுவதும்.

நம்பியாரூரர் காலத்தில் இவ்வாறு தமிழர்களுடைய குறிக்கோள் முதலியவற்றை நினைவூட்டவேண்டிய நிலை ஏற்பட்டதுபோலும். ஒரு நாட்டு மக்கள், வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் (Ideal in life) உடையவர்களாக வாழ வேண்டும் என்று அவர்கட்கு எடுத்துக் கூறவேண்டினால் அவர்கட்குத் திருக்குறளைப்போல் நேரடியாக உபதேசம் செய்வதைக் காட்டிலும் ஒரு சிறந்த வழி உண்டு. அவர்களுடைய நாட்டில் அவர்கட்கு முன்னர் வாழ்ந்தவர்களுடைய வரலாற்றை நினைவூட்டுவதே அவ்வழியாகும். நம்பியாரூரரும் அவ்வழியைத்தான் கடைப்பிடித்துத் திருத்தொண்டத் தொகை பாடினார்.

இப்பாடலைப் பாடும்பொழுது நம்பியாரூரரின் கருத்து எதுவாய் இருந்திருக்கும் என்பதை நன்கு உணர்ந்த சேக்கிழார், தாம் பாடிய பெரியபுராணத்தில் இக்கருத்தை நன்கு வளர்த்துவிட்டார். தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்த இவ்வடியார்கள் அனைவரும் பல இடங்களில், பல காலங்களில் பிறந்து, பல தொழில்களில் ஈடுபட்டிருப்பினும், ஆண்டவனிடம் அன்பு பூண்டு, அவ்வன்பில் தம் வாழ்நாளைக் கழிக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் வாழ்ந்தனர். இந்தப் பொதுத் தன்மையை எடுத்துக்காட்டுவதன்மூலம் தம் காலத்தில் வாழும் தமிழர்களையும் திருத்தலாம் எனச் சேக்கிழார் நம்பியதனாலேயே பெரிய புராணத்தைப் பாடினார். எனவே, தமிழர் வாழ்வு, நாகரிகம், கலை, பண்பாடு என்பவற்றை எடுத்துக் காட்டுவதுடன் அவர்களுடைய வாழ்வின் குறிக்கோள் எது என்றும் எடுத்துக்காட்டுவதால் இந்நூலைத் தமிழர்களின் 'தேசிய இலக்கியம்' என்று கூறலாம்.

## சில நெல் பெற்றார்

நம்பியாரூரர் பரவையாருடன் கூடி இல்லறம் நடத்திக் கொண்டே இறைவனையும் ஒருமுகப்பட்ட மனத்துடன் வழிபட்டு வாழ்ந்து வரலாயினர். எப்பொழுதும் இறைவன்பால் மனத்தைச் செலுத்தி வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் பெரியார்களை உலகத் துன்பம் ஒன்றும் செய்வதில்லை.

நம்பியாரூராகிய அடியாருடைய குடும்பம் நன்கு நடைபெறவும் வாழ்க்கையின் அன்றாடக் கவலைகள் அவரைப் பாதிக்காமல் இருக்கவும், ஒரு வேளாளப் பெரியவர் உபகாரம் செய்துவந்தார். குண்டையூர் என்ற ஊரில் வாழ்ந்த அப் பெரியவர் நம்பியாரூரருடைய வீட்டிற்குச் 'செந்நெல்லும்' பொன் அன்ன 'செழும் பருப்பும்' கரும்பு முதலிய பலவான பொருள்களையும் அனுப்பிவந்தார். இவ்வாறு அனுப்புவதற்கு அப் பெரியார் யாதொரு பயனையும் கருதவில்லை. இறைவனால் தடுத்து ஆட்கொள்ளப்பெற்ற ஓர் அடியார்க்குத் தொண்டு செய்கிறோம் என்று எண்ணத்தைத் தவிரக் கிழவிக்கு வேறு கருத்து ஒன்றும் இல்லை.

குண்டையூர்க் கிழவர் நம்பியாரூரருக்குச் செய்து கொண்டிருந்த உபகாரம் முட்டுப்படும் நிலை வந்தது. அவருடைய பகுதியில் பஞ்சம் வந்துற்றது. விளைவு யாதும் இன்மையால் தமக்கே உணவு இல்லாமல் அவர் துயரமடைந்தாலும் அதுபற்றிக் கவலையுறவில்லை. ஆனால், ஆரூரருக்குச் செய்யவேண்டியவற்றை மட்டும் விடாது செய்துவந்தார். இதற்கும் ஒருமுறை இடையூறு ஏற்பட்டுவிட்டது. ஒன்றுமே அனுப்ப முடியாது என்ற நிலை வந்தவுடன் கிழவர் மிகவும் வருந்தத்தொடங்கி விட்டார். தம் கடமையைச் செய்ய இயலாமையால் மிகவும் வருந்தி உணவுகூட உட்கொள்ளாமல் அன்றிரவு கண் துயின்றார்.

கவலை இருவகைப்படும். ஒன்று தனக்கு நேர்ந்த துன்பத்தைப்பற்றிக் கவலைப்படுதல்; ஏனையது பிறருக்கு

உபகாரம் செய்ய இயலவில்லையே என்பதால் விளையும் கவலை. இரண்டாம்வகைக் கவலையால் பெரியோர்கள் அடிக்கடி வருந்துவர். இவ்வகைக் கவலையில் தன்னலம் என்பது சிறிதும் இராது. இவ்வாறு கவலை உறுபவர்கள் மற்றவர்களுடைய கவலைகளைப் போக்க இறைவனுடைய அருளை நாடுவர். தொடர்பில்லாதவர்கள் மாட்டுச் செல்லும் அன்பைக் கருணை என்று கூறுவர். தமக்கு உறவு இல்லாத பிறர் துன்பங் கண்டு துயரடையும் அவர்கள் கருணையைக் கண்டு இறைவனும் கருணை காட்டுகிறான் இறைவன் அருளால் இவர்கள் பிறர் துன்பத்தைக் கூடுமானவரை போக்கு கிறார்கள். ஆருரருக்கு நெல் கொடுக்க இயலவில்லையே என்றறிந்த குண்டையூர்க் கிழவர் கவலைப்பட்டார்.

தாம் நெல் தாராவிட்டாலும் ஆரூரர் உணவில்லாமல் வருத்தப்படப் போவதில்லை என்பது கிழவருக்கு நன்கு தெரியும். எனவே, அவர் அதற்கு வருந்தவில்லை. தாம் மேற்கொண்ட கடமையைச் செய்ய முடியாத ஒரு நிலை நேர்ந்துவிட்டதே என்றுதான் அவர் கவலையுற்றார். 'வன் தொண்டர் திருவாரூர் மாளிகைக்கு நெல் எடுக்க, இன்று குறை ஆகின்றது என்செய்கேன்' (ஏயர்கோன் : 13) என்ற கவலைதான் கிழவருக்குப் பெரிதாக இருந்தது. எனவே, அன்று இரவெல்லாம் அவர் உறங்கவில்லை. உண்ணா மலும் படுத்துவிட்டார். கடமையைச் செய்யமுடியாத பொழுது உணவு எவ்வாறு செல்லும்? படுத்துக் கவலை யுடன் இருந்த கிழவர் கனவில் இறைவன் தோன்றினான். 'ஆரூரன் தனக்கு உன்பால் நெல் தந்தோம்' (ஷெ 14) என்று கூறிவிட்டு மறைந்தருளினான். இறைவன் கட்டளைப்படி குபேரன், குண்டையூர் முழுவதும் நெல் மலையாகக் குவித்து விட்டான். பொழுது விடிந்தது. எழுந்துவந்த கிழவருக்கு ஓர் அதிசயம் காத்து நின்றது. ஊரின் எல்லைவரையும் ஓரே நெல் மலையாக இருந்தது. இனி, இந்த நெல்லை எவ்வாறு யார்மூலம் திருவாரூருக்கு அனுப்புவது என்ற வினாவிற்குக் கிழவனாரால் விடை காண முடியவில்லை.

எனவே, நெல்லுக்கு உரியவரான ஆரூரரிடம் இதனைத் தெரிவித்துவிடலாம் என்ற கருத்துடன் புறப்பட்டார். கிழவரைச் சந்திக்குமாறு இறைவன் ஆரூரருடைய கனவில் அருளிச் செய்ய அவரும் புறப்பட்டு வந்தார்.

இருவரும் இடைவழியில் சந்தித்துக் கொண்டனர். ஆரூரரை விழுந்து வணங்கிய கிழவர், 'பண்டெலாம் அடியேன் செய்த பணி எனக்கு இன்று முட்ட அண்டர்தம் பிரானார், தாமே நெல் மலை அளித்தார். (ஷெ 17) என்று கூறுகிறார். இவருடைய சொற்களில் இந் நெல்லைத் தாம் பெற்றதாகவோ தம்பொருட்டு இறைவன் அருள்செய்தது தமக்காக அன்று என்றும் பிறர் பொருட்டாகவே என்றும் நினைப்பதால், தம்மை எளிமையாக நினைந்துகொள்ள ஏதுவாகிறது. இருவருமாக ஆராய்ந்து, இந்நெல் மலையை மனிதர் உதவிகொண்டு திருவாரூர் கொண்டுசேர்க்க முடியாது என்பதை அறிந்துகொண்டனர்.

இந் நிலையில் ஆரூரர் 'எண்ணில் சீர்ப் பரவை இல்லத்து இந் நெல்லை எடுக்க ஆளும் தண்ணிலவு அணிந்தார் தாமேதரின் அன்றி ஒண்ணாது' (ஷெ 19) என்று கருதுகிறார். தாம் வாழ்கின்ற வீட்டைக் குறிப்பிடவேண்டியபொழுது 'பரவை இல்லத்து' என்று நம்பியாரூரர் குறிப்பது நோக்கற் குரியது. இதுவும் பழந்தமிழர் வழக்கம் ஆகும். வீட்டின் தலைவி அவள் ஆகலானும், அவளுக்கு மட்டுமே 'இல்லாள்' என்ற பெயர் இருத்தலானும், வீட்டைக் குறிப்பிடும்பொழுதும் அவளது வீடு என்று குறிப்பிடுவது சாலப் பொருத்தமுடைய தாகும். இந் நெல்லைக் கொண்டுசேர்ப்பது தம்மால் இயலாத செயல் என்பதை அறிந்த ஆரூரர் உடனே இறைவனுடைய கருணையை நாடுகிறார். பஞ்சம் வந்துள்ள நாட்டில் தெரு முழுவதும் நெல் மலையாக நிரப்பியவன் அதனைத் திருவாரூர் கொண்டுசேர்க்க மறுத்து விடுவானா? எனவே, குண்டையூரின் பக்கத்திலுள்ள 'திருக்கோளிலி' என்ற ஊரில்

உள்ள இறைவனைச் சென்று பாடினார். அந்த அழகிய பாடலில்தான் எவ்வளவு உலகியல் அறிவும் இறைவனிடத்து அன்பும் ததும்புகின்றன. இதோ ஆரூரர் பாடிய பாடல் :

**'நீள நினைந்து அடியேன் உமை**
**நித்தலும் கைதொழுவேன்**
**வாளன கண்மடவாள் அவள்**
**வாடி வருந்தாமே**

**கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச்**
**சிலநெல்லுப் பெற்றேன்**
**ஆள்இலை எம்பெருமான் அவை**
**அட்டித்தரப் பணியே'**

(திருக்கோளிலியில் இருக்கும் பெருமானே, உனது பழைய அடிமைகள் அல்லவா யானும் என் இல்லாளும்! பரவை இந் நெல் வராமையால் வருந்தும் வருத்தம் நீ அறிவாய். அவள் வருந்தாமல் இந் நெல்லைக் கொண்டுசேர்க்க உதவவேண்டும்.)

முதல் இரண்டு அடிகளில் தம் பக்தியின் திறத்தைப் பேசுகிறார் ஆரூரர். பரவையின் வருத்தம் இருவருடைய பக்திப் பெருக்குக்கும் இடையூறு அன்றோ? மனத்தில் ஒரு வருத்தம் தோன்றிவிட்டால் எவ்வாறு ஒருமுகப்பட்ட மனத்துடன் இறைவனை வணங்கமுடியும்? எனவே, ''வாள் போன்ற கண்ணை உடைய பரவை வாடி வருந்தாமல்' என்று கூறுகிறார்.

பின் இரண்டு அடிகளில் இவ்வடியாரின் கல்விப் பெருக்கமும் உலகியல் அறிவும் நன்கு விளங்குகின்றன. அடியார்கள் என்று கூறியவுடன் அவர்கள் ஏதோ மற்றோர் உலகில்

வாழ்ந்துகொண்டு இவ்வுலக நினைவே இல்லாமல் இருப்பார்கள் என்று பலர் நினைத்தல் கூடும். அவர்கள் பாடல்களைப் படித்துப் பார்த்தால் இது எவ்வளவு தவறான கருத்து என்பது வெளிப்படும். நம்பியாரூரர், நிறைந்த கல்வியறிவும் உலகியல் அறிவும் உள்ளவர் எனச் சேக்கிழார் கூறி இருப்பதை அறிவோம். சேக்கிழார் இதனை எங்கிருந்து அறிந்து கொண்டார்? இப் பெரியாருடைய தேவாரத்தில் நன்கு ஈடுபட்டுக் கற்றமையால், இப் பாடல்களின் பொருள் ஆழத்தை நன்கு அறிந்த பிறகே இவ்வாறு கூறியுள்ளார். இன்று நாம் உலகியலில் காணும் ஓர் அனுபவம் இங்கே பேசப்படுகிறது. நம் வீட்டில் விறகு வாங்கி வைத்திருப்பதாகக் கொள்வோம். அந்த விறகை உடைக்க ஆள் தேடுகிறோம். ஓர் ஆளைக் கூப்பிட்டு 'கொஞ்சம் விறகு இருக்கிறது. உடைத்துத் தரமுடியுமா?' என்றுதானே கேட்கிறோம். பத்து மூட்டைகளை வண்டியில் ஏற்றவேண்டுமென்றாலும், ஆளைப் பார்த்து 'கொஞ்சம் மூட்டைகள் வண்டியில் ஏற்ற முடியுமா?' என்றுதானே கேட்கிறோம்? விறகுக்கு ஏற்ற கூலியும் மூட்டைகளின் எண்ணிக்கைக்கு ஏற்ற கூலியும் கொடுக்கிறோம் என்றாலும், கேட்கும்பொழுது வேலையின் அளவைக் குறைத்துக் கூறுவதுதான் உலக இயற்கை. வேலை இது என்று அறியு முன்னரே அதைப் பற்றி ஒரு மலைப்பு ஏற்பட்டுவிடுமானால் யாரும் வேலையை ஒப்புக் கொள்ளமாட்டார்கள்.

இறைவனிடம் தோழமை பூண்டு நண்பர் என்ற முறையில் பழகுவதனால் இறைவனிடம்கூட இவ்வாறு பேசுகிறார் ஆரூரர். இதில் வியப்பு என்னவென்றால் இந்த நெல் மலையைத் தந்தவரிடமே போய்த் தம் திறமையைக் காட்டுகிறார். எவ்வாறு? குண்டையூரில் சில நெல்லுப் பெற்றாராம், எப்படி இருக்கிறது? மனிதர்களால் கொண்டு சேர்க்க முடியாதபடி மலையாகக் கிடக்கிற அவ்வளவு நெல்லைச் 'சில நெல்' என்று கூறுகிறார். அதுவும் யாரிடம் கூறுகிறார்? யார் இந்த நெல் மலையைத் தந்தானோ அவனிடமே சென்று

சில நெல் என்று கூறச் சற்று மனத்திடம் அதிகமாகவே வேண்டும். 'பிறந்த வீட்டுப் பெருமையை உடன் பிறந்தவனிடம் அளந்தாளாம்' என்ற பழமொழியை நினைவூட்டுகிறது ஆரூரருடைய வார்த்தைகள். இந்த அடியார்கள் இறைவனிடம் கொண்டாடுகிற உரிமைக்கு இதுவும் ஓர் உதாரணம். அம்மட்டோடு இல்லாமல் இறைவனுடைய எளிவந்த தன்மைக்கும் (ஸௌலப்பியம் என்பர் வடமொழியார் இது உதாரணமாக அமைகின்றது

எவ்வளவு உரிமை கொண்டாடினாலும் அடியார்களிடத்து இறைவன் வேண்டுவது தூய்மையான அன்பேயாகும். அந்த அன்புடையவர்கள் எவ்வளவு உரிமை வேண்டினும் அவன் தரக் காத்து நிற்கின்றான். அவன் கருணை மழைக்குக் குறையில்லை. அதனை அனுபவிப்பவர்கள் மனநிலைக்கு ஏற்றபடி அது பயன் தருகிறது. ஆற்றில் நீர் நிறைந்து ஓடினாலும் அவரவர் கொண்டு செல்லும் பாத்திரத்தின் அளவுக்கு ஏற்பவே முகந்துவர முடியும். கீதாஞ்சலியின் முதற் பாடலில் தாகூர் கூறிய கடைசி வரிகள் நினைவிற்கு வருகின்றன :

''இறைவனே! உனது எண்ணரிய கருணையின் பரிசுகள் என்னுடைய சிறிய கைகளின் மூலமே கிடைக்கின்றன. என்றாலும், உன் கருணை மழைக்குக் குறைவே இல்லை. இந்தச் சிறியவனிடம் இன்னும் இடம் இருக்கிறது.''

மாணிக்கவாசகர் தாம் அருளிய திருவாசகத்தில் 'வழங்குகின்றாய்க்கு உன் அருள்ஆர் அமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன். விக்கினேன் வினையேன் விதியின்மையால்' (திருவாசகம்-அடைக்கலப்பத்து-10) என்று கூறுவதும் அறிதற்குரியது.

இவ்வுண்மையை எந்த நாட்டிலும் எந்தக் காலத்திலும் வாழ்ந்த பெரியோர்கள் அறிந்து அதனைப் பயன்படுத்திக்

கொண்டுள்ளனர். அவருள் ஒருவரே நம்பியாரூரர். இறைவன் அருளால் குண்டையூரில் இருந்த நெல் மலை மறுநாள் காலை திருவாரூர் வந்து சேர்ந்தது.

## பொன் துஞ்சு மாளிகை

திருக்கோளியிலுள்ள பெருமானை வணங்கிக் குண்டையூரில் தமக்குக் கிடைத்துள்ள சில நெல்லைத் திருவாரூரில் கொணர்ந்து தருமாறு வேண்டினார் நம்பியாரூரர். அன்றிரவே நெல் திருவாரூரில் வந்து சேரும் என்று இறைவன் அருள் செய்தான், அதனை உணர்ந்த ஆரூரர் மிக்க மகிழ்ச்சியுடன் திருவாரூர் மீண்டு கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கிவிட்டுத் தம் வீட்டிற்குச் சென்று இந் நற்செய்தியைப் பரவையாருக்குத் தெரிவித்துவிட்டுப் பகற்பொழுதின் வரவை எதிர்நோக்கி இருந்தார்.

இரவு கழிந்து பொழுதும் புலர்ந்தது. திருவாரூரில் வாழ்பவர்கட்கு அன்று காலை விடிகிறபொழுது வீட்டின் எதிரே ஓர் அதிசயம் காத்திருந்தது. முதல் நாள் இரவுப் படுக்கைக்குப் போகுமுன் அவரவர்களுடைய வீட்டைத் தாழிட்டுவிட்டுத்தான் உறங்கச் சென்றிருப்பார்கள். அவ்வாறு தாழிடும்பொழுது வீட்டின் எதிரே ஒன்றும் இல்லை. வெறும் தெருவைப் பார்த்து அக் கதவுகள் அடைத்து நின்றன. ஆனால், விடிவதற்குள் ஒரு பெரிய மாறுதல். புழுதி படிந்து நின்ற தெருக்களில் எள் விழ இடமின்றி நெல் மலை குவிந்திருக்கிறது. அவரவர் விடியற்காலம் எழுந்து தத்தம் அடைத்த இல்லங்களைத் திறந்து பார்த்தார்கள். வெறும் தெரு இருந்த இடத்தில் நெல் மலையைக் கண்டார்கள். அவரவர் கண்களையே நம்ப முடியவில்லை. மீட்டும் கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்த்தனர். நெற் குன்றுகள் மறையவில்லை. தாம் காண்பது கனவன்று என்பதை அவரவர் முடிவு செய்துகொண்டனர். பன்முறையும் பார்த்த பின்னர் பலரும் கூடிப் பேசினர். ஒவ்வொருவருக்கும் இந்த

அனுபவம் வாய்த்திருந்தமையின் ஐயத்திற்கு இடமில்லை இத்தகைய ஓர் அதிசயத்தை அவரவர்கள் வாழ்நாளிலேயே கண்டதில்லை எனப் பேசிக்கொண்டனர்.

தெருவெல்லாம் நெல்மலையாக ஆன அதிசயத்தைப் பேசித்தீர்த்த பிறகு அடுத்துத் தோன்றும் வினா, இந் நெல் யாருடையது என்பதுதானே? பலருக்கும் இவ் வினா தோன்றி விட்டது. ஒரு சிலர் விடை அறிந்தவர்களாகலின் பலர் வினாவுக்கு இவர்கள் பதில் கூறினார்கள். என்ன விடை?

**"அவ்விரவு புலர்காலை ஆரூரில்**
**வாழ்வார்கண்டு**
**எவ்வுலகில் விளைந்தநெல் மலைஇவை? என்று**
**அதிசயித்து**
**நவ்விதமதர்த் திருநோக்கின் நங்கைப்புகழ்ப்**
**பரவையார்க்கு**
**இவ்வுலக வாழவரும் நம்பிஅளித்**
**தன" என்பார்**

(பெ. பு.—ஏயர்கோன்; 26)

"மான்போன்ற கண்ணை உடையவரும் பெண்களாலும் புகழப்படுபவருமாகிய பரவையாருக்கு நம்பியாரூரர் அளித்த நெல் மலையாகும் இது' என்று கூறினார்களாம் நெல்லின் அளவையும் கிடக்கும் நிலையையும் பார்த்தவுடன் இது மனிதன் முயற்சியால் கிடைத்தது அன்று என்பதை யாவரும் அறிந்தனர். என்றாலும், தங்கள் ஊர்ப் பெண்ணாகிய பரவையாருக்கு அவளுடைய கணவர் அளித்தது என்று கூறுவதில் அந்த ஊரவருக்கு ஒரு தனி மகிழ்ச்சிபோலும். இது பழந் தமிழ்நாட்டின் பண்பாடுகளுள் ஒன்றாகும். தங்கள் ஊரைச் சேர்ந்த ஒருவர் நல்ல நிலையில் வாழ்கிறார் என்றால் அதில் ஊரார் அனைவரும் பங்குகொள்வார். தங்கள் ஊரைச் சேர்ந்த பெண் ஒருத்தி நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட்டால், ஒவ்வொருவரும் அந்தப் பெருமையில்

பங்குகொள்வார். அத்தகைய மனநிலையில் இப்போது ஊரார் 'நம் பரவையாருக்கு அவளுடைய கணவர் அளித்த நெல் மலை இது' என்று கூறினர்.

இவ்வாறு அவ்வூர் மக்கள் பேசிக்கொண்டிருக்கையில் யாரோ ஒருவர் ஓர் ஐயத்தைக் கிளப்பிவிட்டார் 'எவ்வளவு பெரிய மாளிகையில் வாழ்ந்தாலும் பரவையாருக்குக்கூட இவ்வளவு நெல்லையும் கொண்டு சேர்ப்பது இயலாத காரிய மாயிற்றே. என்ன செய்யப் போகிறார்?' இந்த வினாவின் அடிப்படையில் ஓர் அளவு ஆசை இருப்பதையும் அறியலாம். 'போக்கும் இடம் அரிதாகும்' என்று ஏன் கூறவேண்டும்? பிறருடைய நெல்லை அவர் எது வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும் என்று கருதிவாளா இருந்துவிடாமல், என்ன செய்யப் போகிறார் என்று கேட்கையில் இந்த வினாவின் அடிப்படை வேறு இருக்குமோ என்று நினைக்கத் தோன்றியது.

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டு வியப்பில் மூழ்கி இருக்கையிலேயே பரவையார் வீட்டில் அவரும் ஆராய்ச்சி யில் ஈடுபட்டார்.

தம்முடைய பயனுக்கு மேற்பட்ட ஒரு பொருளைச் சேமித்து வைத்தல் முறையன்று என்று கூறுவர். உலகத்தில் பொருள்கள் ஓர் அளவுடன்தான் கிடைக்கின்றன. மக்கள் தொகை அதிகமாகிவிட்ட காரணத்தால் அவர்கட்கு வேண்டும் பொருளையும் அதிகமாகத் தரவேண்டும் என்று இயற்கை நினைப்பதில்லை. எனவே, மக்கள் தொகைக்கு ஏற்ற அளவுப் பொருள்கள் கிடைக்காதபொழுது நாட்டில் பஞ்சம் ஏற்படுகிறது. வேறு எந்தப் பொருளுக்குப் பஞ்சம் ஏற்பட்டாலும், அதனால் பெருந்துன்பம் விளைந்துவிடப் போவதில்லை. ஆனால் மக்கட்குலத்தின் வாழ்க்கைக்கே இன்றியமையாததான உணவிற்குப் பஞ்சம் வந்துவிட்டால் அதனைவிடப் பெருந் தீங்கு வேறு இருத்தற்கில்லை. எனவே, அனைத்துப் பஞ்சங்களிலும் உணவுப் பஞ்சமே மிகவும் கொடியது. அத்தகைய பஞ்சநேரத்தில் ஒருவர் தமக்கு

இருக்கவேண்டிய அளவினும் மிகுதியாக உணவு வைத்திருப்பாராயின் அவர் செய்யும் குற்றம் மன்னிக்க முடியாத தொன்று. அடியார்கள் இயற்கையாகவே பிற உயிர்களிடத்துப் பெருங் கருணை கொண்டவர்கள். இத்தகைய பெருங் குற்றத்தைச் செய்வார்களா? உறுதியாகச் செய்ய மாட்டார்கள். இங்குப் பரவையாரும் இத்தகைய குற்றத்தைச் செய்துவிடாமல் ஊரவர்கட்கும் இந் நெல்லைப் பகிர்ந்து அளிக்க முடிவு செய்துவிட்டார்.

பரவையார் இவ்வாறு முடிவு செய்த நேரத்தில் திருவாரூரின் நிலைமை எவ்வாறு இருந்தது?

செல்வத் திருவாரூர் என்று பலராலும் அழைக்கப்படுகிற அவ்வூரில் மக்களுடைய வாழ்க்கை வளத்துக்குக் குறைவில்லை. ஆனால், அவ்வூரை அடுத்துள்ள குண்டையூரில் பஞ்சம் வந்தபடியால் குண்டையூர்க் கிழவருக்கு நெல் கொடுக்க முடியாமற் போயிற்று என்று கண்டோம். அவ்வளவு பக்கத்தில் உள்ள ஊரில் மழை பெய்யாமையால் பஞ்சம் வந்துவிட்டது என்றால் அப் பஞ்சத்தின் கொடுமை திருவாரூரை மட்டும் தாக்காமல் விட்டுவிடுமா? அது பற்றிச் சேக்கிழார் ஒன்றும் கூறாவிட்டாலும், பரவையாருடைய சொற்களிலிருந்து திருவாரூரில் நெல் பஞ்சம் இருந்தது என நாம் அறியமுடிகிறது திருவாரூர் பெரிய நகரம் குண்டையூர் சிறிய கிராமம். பஞ்சம் இரண்டு இடங்களையும் ஒருசேரத் தாக்கினாலும் நகரத்தை அதிகம் தாக்கமுடிவதில்லை; இது இன்றும் காணும் அனுபவம். நகரத்தவர்களிடத்தில் பசியைப் போக்கும் நெல் இருப்பதில்லையே தவிர, அதைப் பெறக் கூடிய பணம், கிராமத்தில் இருப்பவர்களிடம் இருப்பதைக் காட்டிலும் மிகுதியாகவே இருக்கும். பஞ்சத்தின் தொடக்க காலங்களில் நகரத்தில் உள்ளவர் வருந்தவேண்டுவதில்லை. ஏனெனில், அவர்களிடமுள்ள பணத்தின் உதவியால் எவ்வளவு விலை ஏறிவிட்டாலும் நகரத்தார் பொருள்களை வாங்கிக்கொள்ள முடியும். நாளாக நாளாகத்தான், பஞ்சத்தின் கொடுமை மிகுதிப்பட்ட நிலையில், எவ்வளவு பொருள்

கொடுத்தாலும் உணவுப் பொருளை வாங்கமுடியாது என்ற நிலை ஏற்பட்டு விடும். அப்பொழுதுதான் வீட்டில் பயனற்ற பொருள் அல்லது பொன் கிடந்து உறங்கவும் அதனால் பெறக்கூடிய உணவுப் பொருள்கள் இல்லையாகவும் இருக்கிற நிலைமை ஏற்படும். நம்பியாரூரருக்கு இறைவன் நெல் கொடுத்த நிலையில் திருவாரூர் ஏறத்தாழ இந்த நிலையில் தான் இருந்திருக்க வேண்டும். அதனால்தான் அவரவர்கள் வீட்டு எல்லையில் இருக்கும் நெற்குவியலை அவரவர் அள்ளிக் கொள்ளலாம் என்று பரவையார் முரசு அறைவிக்கிறார்.

**"வன்தொண்டர் தமக்களித்த நெல்கண்டு மகிழ்சிறப்பார்**
**'இன்றுங்கள் மனைஎல்லைக்கு உட்படுநெல் குன்றுஎல்லாம்**
**பொன்தங்கு மாளிகையில் புகப்பெய்து கொள்க' என**
**வென்றிமுரசு அறைவித்தார் மிக்கபுகழ்ப் பரவையார்"**

(பெ.பு.—ஏயர்கோன்; 38).

அவர்களுடைய வீடுகளைப் 'பொன்தங்கு மாளிகை' என்று பரவையார் குறிப்பிடுகிறார். திருவாரூரில் ஏழைகள் என்று கூறத்தக்கவர் யாரும் இல்லை போலும். அனைவரும் அனைத்து வளங்களும் பெற்று வாழ்பவர்களே. பணம் அல்லது பொன்னுக்கு ஒவ்வொரு நாட்டிலும் பஞ்சமே இல்லை. தற்பொழுது ஏற்பட்ட உணவுப் பஞ்சமே அங்கு உண்டுபோலும். ஆகவேதான், 'பொன் தங்கு மாளிகையில் புகப்பெய்து கொள்மின்கள்'. என்று அம்மையார் அறிவிக்கின்றார். இவ்வாறு ஊரார் அனைவரும் தம்தம் வீடுகளின் முன்னர் இருந்த நெல்லை எல்லாம் எடுத்துக்கொண்ட பிறகு, பரவையார் தம்முடைய கணவரைச் சென்று வணங்கினாராம். வாய்விட்டு அவர் ஒன்றும் கூறவில்லையாயினும், 'பரவையாரின் வணக்கம் மிகுந்த குறிப்பை உடையதாய் இருந்தது.

ஒரு கணவனும் மனைவியும் இல்லறம் நடத்துவதற்கு மிக இன்றியமையாத பயனாக வள்ளுவர் குறிப்பிடுவது

உபகாரம்' என்றேயாம் 'இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும், நல்லாற்றின் நின்ற துணை' என்றும், 'பகுத்து உண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை' என்றும் கூறுகையில் இல்லறத்தின் தலையாய கடன் பிறர்க்கு உபகாரப்படுதலே என்பதை நன்கு குறிப்பிடுகிறார். எனவே, ஆரூரும் பரவையாரும் நடத்தும் இல்லறம் நன்கு நடைபெற வேண்டுமானால் பரவையார் அதனை நன்கு அறிந்து நடத்தவேண்டும். தமிழர் முறைப்படி பொருளைச் சம்பாதித்துக் கொணர்ந்து தரவேண்டியது கணவன் கடமை. அதனை வகையறிந்து பிறர்க்கும் ஈந்து, தானும் வைத்து வாழ்க்கை நடத்த வேண்டியது மனைவியின் கடமை. பெரும்பான்மை மனைவியின் கடமையில் தலைவன் தலையிடுவதில்லை. சிற் சில சந்தர்ப்பங்களில் தலைவன் தலையிட்டு மனைவியின் கடமையை நினைவூட்டுதலும் உண்டு. 'பெருஞ்சித்திரன்' என்ற சங்ககாலப் புலவன் குமணனிடம் தான் பெற்றுவந்த பரிசிலை மனைவியிடம் தந்துவிட்டு 'ஏ' பெண்ணே, நீண்ட நாளாக வறுமையில் வாடிய காரணத்தால் இப் பொருளைப் பிறர் அறியாமல் மறைத்துக்கொண்டு வாழவேண்டும் என்று நினையாதே. உன்னை விரும்புபவர்க்கும் நீ விரும்புபவர்க்கும் வேண்டுமென்ற அளவு வரையாமல் வழங்குவாயாக' என்று கூறுகிறான்.

**"நின்நயந்து உறைநர்க்கும் நீநயந்து உறைநர்க்கும்**
**பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்**

**......................................**

**இன்னோர்க்கு என்னாது என்னோடும் சூழாது**
**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே"**

(புறம், 163)

அந்தத் தமிழ்ப் பரம்பரையில் வந்த பரவையார் கணவனுடைய கருத்தை அறியாமற்கூடப் பறை அறைவித்துவிட்டார். தாம் செய்யும் இந்த நற்காரியத்துக்குக்

அண்ணவனுடைய உடன்பாடு உறுதியாகக் கிடைக்கும் என்ற உறுதிப்பாட்டுடன் இதனைச் செய்துள்ளார். தற்காலம் இல்லறம் நடத்தும் நம்மில் பலருக்கு இது ஒரு நல்ல படிப்பினையாகும்.

இத்துணைச் சிறந்த முறையில் இல்லறம் நடத்திவரும் தம்பிரான் தோழர், இறைவன் உறையும் பல தலங்களையும் சென்று வணங்க முடிவு செய்துகொண்டு புறப்பட்டார். திருநாட்டியத்தான் குடி என்பது சோழநாட்டில் உள்ள ஓர் அழகிய ஊர். அதில் 'கோட்புலியார்' என்ற அடியார் வாழ்ந்து வந்தார். நம்பியாரூரரை அழைத்துச் சென்று சிறந்த முறையில் உபசரித்தார். இறுதியாக, தாம் பெற்ற 'வனப்பகை', 'சிங்கடி' என்ற இரு பெண்களையும் நம்பி யாரூரர், மனைவியராக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வேண்டிக்கொண்டார். ஆரூரர் அவர்கள் இருவரையும் தாம் பெற்ற மக்கள் என்று கூறி, அவர்கட்கு வேண்டும் பரிசில்களையும் தந்து மகிழ்ந்திருந்தார். தாம் அவ்விருவரை யும் மக்களாய் ஏற்றுக்கொண்டமைக்குப் பல தேவாரங்களில் தம்மை 'வனப்பகையப்பன்', 'சிங்கடியப்பன்' என்றும் பாடி யுள்ளார்.

இதனையடுத்துத் திருப்புகலூர் என்ற ஊரில் சென்று இறைவனை வணங்கினார். அது பங்குனி மாதம். பங்குனி உத்திரத் திருநாள், ஆரூரில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெறும். ஊரில் திருவிழா நடைபெறும்பொழுது சிறந்த முறையில் இல்லறம் நடத்தும் ஒவ்வொருவருடைய வீட்டிலும் விருந்தினர்கள் வந்து நிரம்பிவிடுவார்கள். அவர் களைத் தக்க முறையில் உபசரிக்க வேண்டுமானால் அனைத் திற்கும் பணம் வேண்டுமன்றோ? பரவையார் செலவு செய்து இல்லறத்தை நன்கு நடத்த வேண்டுமாயின் அதற்குரிய பொருளை நம்பியாரூரர் தேடித்தரவேண்டும் அன்றோ? பரவையார் பணம் வேண்டும் என்று வாய் திறந்து கூறாவி டினும் ஆரூரர் தம் கடமையை நினைத்துக்கொண்டார்.

இம் மாதிரி சந்தர்ப்பங்களில் இவ் வடியார்கள் நடந்து கொள்ளும் முறை அலாதியானது. நலம், தீங்கு என்ற இரண்டிலும் இறைவன் உதவியையே நாடுபவர்கள் இவர்கள். அவனுடைய திருவருளால் ஒரு திருமணம் தடைப்பட்டது, மற்றொரு திருமணம் நடைபெற்றது. முதலாவதைத் தடுத்து இரண்டாம் திருமணத்தை நடத்தி வைத்தவனுடைய பொறுப்புத்தானே அவ் வாழ்க்கை நன்கு நடைபெறப் பார்த்துக்கொள்வதும் எனவே, அந்த இல்லறம் முட்டுப்படும் பொழுது இறைவனிடமே சென்று முறையிடுகிறார்கள். 'கேள் தரப்படும்' 'தட்டு, திறக்கப்படும்' என்று மற்றோர் அடியார் கூறியதை இந் நாட்டு அடியார்கள் வாழ்க்கையில் செய்தே காட்டிவிட்டனர். கேட்கும் முறையில் கேட்டால் கருணை வடிவினனாக உள்ள இறைவன் தாராமல் இருப்பானோ? 'பஞ்சமும் நோயும் நின் மெய் அடியார்க்கோ?' என்று பாரதி பாடியதை நினைவிற்குக் கொணர்ந்தால் ஆரூரருடைய செயலில் வியப்பதற்கு ஒன்றும் இல்லை என்பதை உணரலாம். திருப்புகலூரில் நடைபெற்ற அதிசயத்தைக் காண்போம்.

## இவர் அலாது இல்லையோ பிரானார்?

திருப்புகலூரில் நுழைந்ததும் தமக்குப் பொருள் வேண்டுமே என்ற நினைவு வந்துவிட்டது ஆரூரருக்கு. இறைவனிடம் தம்முடைய மனக் கருத்தை நிறைவேற்றும்படி பாடினார் 'எண்ணிய எண்ணியாங்கு எய்துவர், எண்ணியர் திண்ணியராகப் பெறின்' என்பது பொய்யாமொழியன்றோ? எனவே, இறைவனிடம் ஒருமுகப்பட்ட மனத்துடன் ஆரூரர் வேண்டினார். உடனே அவருக்குச் சற்று உறக்கம் வந்தது. அருகேயுள்ள மடத்திற்குச் சென்று உறங்க விருப்பம் இல்லாமல் திருக்கோயிலின் வாயிலிலேயே தங்கிவிட்டார். அக் கோயிலுக்குத் திருப்பணி செய்வதற்காகச் செங்கற்கள் அடுக்கப்பட்டிருந்தன. மாப்பிள்ளைக் கோலத்துடன் எங்கும் சென்று வரும் நம்பியாரூரர் அந்தச் செங்கற்களில் சிலவற்றைத் தலைக்குத் தலையணைபோல்

உயரமாக வைத்துக்கொண்டு உறங்கிவிட்டார். சாதாரண வசதியில் வாழ்பவர்கள் கூட இன்று தலைக்குத் தலையணை இல்லாமல் உறங்க மறுத்துவிடுகிறார்கள். 'வேறு எது இல்லாமல் வேண்டுமானாலும் இருந்துவிடுவேன்; ஆனால், தலையணை இல்லாமல் மட்டும் உறங்க முடியாது என்று கூறு பவர்களை நாம் காண்கிறோம். தலையணை என்று பெயர் வந்ததே தலைக்கு அது அணையாக இருக்கிறது என்பதனால் தான். அதன் பெயர்க் காரணத்தைக்கூட மறந்துவிட்டுக் கால் அணையாகவும், கையணையாகவும் பயன்படுத்துகிற பெரியோர்களும் உண்டு. இத்தகையோர் அனைவரும் நம்பியாரூருடைய செயலில் அறிய வேண்டியது ஒன்று உண்டு. உறக்கம் வந்தபொழுது அரசச் செல்வத்தில் வளர்ந்த அவர் சற்றும் யோசனை செய்யாமல் செங்கற்களைத் தலைக்கு வைத்துக்கொண்டு உறங்கியும் விட்டார். பக்கத் திலுள்ள மடத்திற்குச் சென்றிருந்தால் நல்ல படுக்கை கிடைத்திருக்குமே. ஆனால், அடியார்கள் வாழ்க்கையில் அரச இன்பமும் ஆண்டி வாழ்க்கையின் இன்பமும் ஒன்று தான். ஒன்றை அவர்கள் விரும்புவதும் இல்லை மற்றொன்றை அவர்கள் வெறுப்பதும் இல்லை. இதுவே அவர்களுடைய வாழ்க்கையின் உட்பொருளும் மறைபொருளும் ஆம்.

நம்பியாரூரர் உறங்கியவுடன் உடன் வந்த அடியார்களும் உறங்கிவிட்டனர் சற்று நேரம் கழித்தவுடன் அனைவரும் விழித்துகொண்டனர். ஆரூரரும் விழித்துக்கொண்டார். என்ன அதிசயம்? அவருடைய தலைக்கு வைத்திருந்த செங்கற்கள் அனைத்தும் பொன்கற்களாக மாறி இருந்தன.

''சுற்றும் இருந்த தொண்டர்களும் துயிலும்
அளவில் துணைமலர்க்கண்
பற்றும் துயில்நீங் கிடப்பள்ளி உணர்ந்தார்
பரவை கேள்வனார்

வெற்றி விடையார் அருளாலே வேம்மண்
கல்லே விரிசுடர்ச்செம்
பொன்றின் கல்லா யினகண்டு புகலூர்
இறைவர் அருள்போற்றி"
(பெ. பு.—ஏயர்கோன், 50)

தலைக்கு வைத்திருந்த கற்கள் அனைத்தும் பொன்னாக மாறிவிட்டமை கண்டு ஆரூரர் பெரு மகிழ்ச்சி அடைந்தார். இறைவன் திருவருளை நினைந்து நினைந்து அன்பு பெருகினார். அவரையும் அறியாமல் பாடல் புறப்பட்டது. உலகத்து மக்களை ஒரு கணம் நினைந்து பார்த்தார். கேவலம் ஒரு வேளை உணவுக்கு வேண்டி தம்மைப்போன்ற மக்கள் பின்னே சென்று வாயில் வந்ததை எல்லாம் கூறி இரக்கின்றதைக் காண்கின்றோம்; என்றுமே வாழ்நாளில் தந்து பழக்கம் இல்லாத ஒருவனைப் பாரி என்று புகழ்ந்தும், நடப்பதற்கும் சக்தியற்ற ஒருவனைப் பீமன் என்றும், அருச்சுனன் என்றும் நாக்கில் நரம்பு இல்லாமல் புகழ்ந்தும் பேசுகிறார்கள். ஏன்? இப் புகழ்ச்சியில் ஈடுபட்ட அவர்கள் ஒரு வேளை உணவு தரமாட்டார்களா என்ற எண்ணத்தால் தானே? இக் காட்சி நம்பியா4ரூரர் மனத்தில் எழுகிறது. ஐயோ எத்துணைப் பைத்தியக்கார உலகம்? அனைத்துலகையும் ஆக்கி, அளித்து, அழிப்பவனாகிய இறைவன் எல்லாச் செல்வங்களையும் அளிக்கக் காத்து நிற்கிறான். ஆனால், அவனிடம் சென்று வேண்டுவார் ஒருவரும் இலர். அப்படி வேண்டினாலும் ஒருமுறை கோயிலுக்குச் சென்று தம் குறைபாடுகளைக் கூறினவுடன் அவை சரிப்பட்டுவிட வேண்டும் என்று நினைக்கின்றனர். ஆனால், தம்மைப் போன்ற மனிதர்களிடத்து ஐந்து ரூபாய் கடன் வாங்குவதற்காக நூறு தடவை நடக்கவும் அஞ்சமாட்டார்கள். மனிதர்களிடம் சிறு உதவி பெற இத்தனை முறை நடக்கின்ற இவர்கள், ஆண்டவனிடம் போகிறபோக்கில் கேட்டது உடனே கிடைத்துவிடவேண்டும் என்று மட்டும் ஏனோ எதிர்பார்க்கிறார்கள்! இவர்கள் அனைவரையும் நினைந்த 'தம்பிரான் தோழர்' இதோ பாடுகிறார் :

"தம்மை யேபுகழ்ந்து இச்சை பேசினும்
சார்கி னும்தொண்டர் தருகிலாப்
பொய்மை யாளரைப் பாடா தேஎந்தை
புகலூர் பாடுமின்' புலவீர்காள்!
இம்மை யேதரும் சோறும்கூ றையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே"

(சுந்தரர் தேவாரம், 340)

இறைவனிடம் அன்பு செய்பவர் பலவகைப்படுவர். இந்த உலகத்தில் தாம் விரும்பும் இன்பங்கள் அனைத்தும் கிடைக்கவேண்டும் என்று வேண்டுபவர் சிலர். இம்மை பற்றிக் கவலைப்படாமல், மறுமையில் இன்பம் வேண்டு மென்று விரும்புபவர் சிலர். எத்துணைச் செல்வம் உடையவ ரேனும் நம்மைப் போன்ற மனிதரிடம் நாம் பெறுவது அளவால் குறைந்தே இருக்கும். ஏன் எனில், நாம் விரும்புவன அனைத்தையும் தரும் இயல்பு பாரி போன்ற ஒருசிலர் தவிரப் பிறரிடம் இருத்தல் அரிது. எனவே, அவர்களாக விரும்பிக் கொடுக்கும் ஒரு சிறு பகுதியைப் பெற இத்துணை முயற்சி எடுத்துக்கொள்ளும் நாம், விரும்பிய அனைத்தையும் தரக் காத்திருக்கும் இறைவனிடம் பொறுமை யுடன் பல முறையும் கேட்க ஏனோ அஞ்சவேண்டும்? நம்மைப் போன்றவர்களிடம் இரக்கச் செல்லும்பொழுது உள்ள மானத்தை விற்றுவிட்டுச் செல்ல நேரிடுகிறது. ஆனால், அனைத்துலகுக்கும் தாயான இறைவனிடம் கேட்க யாரும் அவமானப்பட வேண்டியதில்லை அல்லவா. இவை அனைத்தையும் மனத்திற் கொண்டே ஆரூரர், இம்மையுல கத்தில் வேண்டப்படுவனவாகிய சோறும் கூறையும் தரும் இறைவன், மறுமை உலக இன்பமும் தரத் தயாராக உள்ளான். அடுத்து வீட்டின்பமும் தானே கிடைக்கும் என்ற கருத்துடன், 'இம்மையிலே தரும் சோறும் கூறையும்

ஏத்தலும் இடர் கெடலுமாம்' என்று பாடிச் செல்கிறார். மக்களுள்ளும் சிலர் இவ்வாறு தருவதுண்டு என்று கூறுவார்கள் உளராயின், அவர்கட்கு விடை கூறுவார்போல 'ஆம். பாரி வள்ளலுக்குப் பிறகு அடுத்த ஆள் இல்லையே' என்று அடுத்த பாடலில் கூறுகிறார். எது வேண்டினும் தரக் காத்து நிற்கின்றவனிடம் சென்று கேளாதது நம்முடைய குறையன்றோ?

பொன்னாக மாறிய கற்களைப் பொதிமூட்டையாகக் கட்டிக்கொண்டு திருவாரூரை அடைந்து இல்லறத்தை இனிது நடத்தினார் நம்பியாரூரர். சில நாள்கள் ஆரூரில் தங்கிய பிறகு இறைவன் உறையும் பதிகள் பலவற்றை வணங்கிக்கொண்டு, திருச்சிராப்பள்ளியை அடுத்த 'திருவானைக்கா' என்ற அரிய திருப்பதியில் வந்து சேர்ந்தார். நம்பியாரூரர் ஆனைக்காவுக்கு வருவதற்குச் சில நாள் முன்னர் அவ்வூரில் ஓர் அற்புதம் நிகழ்ந்திருந்தது உறையூரைத் தலைநகராகக்கொண்டு சோழ வேந்தர் ஆட்சி செய்து வரலாயினர். அவருள் ஒரு சோழன் காவிரியில் நீராடச் சென்றான். நீராடும்பொழுது அவன் கழுத்தில் அணிந்திருந்த விலை மதிக்க முடியாத மணியாரம் ஆற்றில் தவறிவிட்டது. எத்துணைத் தேடியும் கிடைக்கவில்லை. சோழனுடைய வருத்தம் எல்லையில்லாமல் மிகுந்துவிட்டது. அன்று ஆனைக்காவுடைய அண்ணலார்க்குத் திருமஞ்சனம் செய்விக்க வழக்கம்போல் காவிரியிலிருந்து தண்ணீர் கொண்டு வந்தார்கள். திருமஞ்சனக் குடத்தில் அம் மாலை புகுந்துவிட்டது. இறைவனுக்கு நீராட்டும்பொழுது மாலையும் நீருடன் சேர்ந்து இறைவன் கழுத்தில் விழுந்துவிட்டது. இச் செய்தியைக் கேட்ட சோழன் பெருமகிழ்ச்சி அடைந்தான். நம்பியாரூரர் ஆனைக்கா சென்று பாடும் தேவாரத்தில் இவ்வரிய செய்தியை வைத்துப் பாடினார்.

**''தாரம் ஆகிய பொன்னித் தண்துறை**
**ஆடி விழுத்து**

நீரின் நின்றுஅடி போற்றி நின்மலா
கொள்ளஎன ஆங்கே
ஆரம் கொண்டஎம் ஆனைக் காவுடை
ஆதியை நாளும்
ஈரம் உள்ளவர் நாளும் எம்மையும்
ஆளுடை யாரே''

(சுந்தரர் தேவாரம், 767)

திருவானைக்காவிலிருந்து 'திருப்பாச்சிலாச்சிராமம்' என்ற ஊரை அடைந்து ஆரூரர் பணம் வேண்டி இருந்தமையின் இறைவனைப் பாடினார். வழக்கம் போல் இறைவன் பொருள் தரவில்லை. எல்லையற்ற வருத்தம் வந்துவிட்டது ஆரூரருக்கு. நண்பன்போலப் பழகிவிட்ட காரணத்தாலும் இதுவரை வேண்டும் பொழுதெல்லாம் பொருள் தந்துவந்த காரணத்தாலும் இம் முறை ஆரூரருக்கு வருத்தம் மிகுந்து விட்டது. எல்லையற்ற வருத்தத்தால் 'இவர் இல்லாவிட்டால் வேறு நமக்குக் கதியா இல்லை'? என்னும் பொருள் படப் பாடத் தொடங்கிவிட்டார். அவ்வாறு பாடியதிலும் ஒரு நயம் தோன்றவே பாடினார். தம்பிரான் தோழர் ஒவ்வொரு பாட்டின் இறுதிலும் 'எனக்குப் பொருள் தராவிட்டால் இவர் அல்லாமல் தலைவர் இல்லையா?' என்ற கருத்தில், 'இவர் அலாது இல்லையோ பிரானார்' என்றே பாடிக்கொண்டு வந்தார். இல்லையோ என்ற வினாவில், 'வேறுவழியில்லையே இவரை விட்டால்' என்ற கருத்தும் இருத்தல் கண்டு இன்புறத்தக்கது. இவர் அலாது இல்லையோ பிரானார்' என்று முடிக்கும் முறையில் பதினொரு பாடல்களும் பாடி விட்டார். அதற்குள் இறைவன்மேல் வந்த கோபமும் மாறிவிட்டது போலும் மேலும், அவனுடைய பெருமையும், தம்முடைய சிறுமையும் நினைவுக்கு வந்துவிட்டன. கொடுத்தாலும் கொடாவிட்டாலும் தாம் ஒன்றும் செய்து கொள்ள முடியாது என்பதும் நினைவிற்கு வந்தது. தமக்குக் கொடுக்க வேண்டும் என்ற கட்டுப்பாடு இறைவனுக்கு இல்லை என்பதும், அதனை மீறி அவன் தருபவை

அனைத்தும் அவனுடைய கருணையாலேயே தருகிறான் என்பதும் நினைவிற்கு வந்தன. தாம் அவசரத்தில் செய்து விட்ட பிழையை உடனே உணர்ந்துவிட்டார். உடனே இறைவனிடம் பிழைக்கு மன்னிப்பு வேண்ட முடிவு செய்து விட்டார். ஆனால், இதுவரையில் நண்பன்போல் பழகி விட்டமையின் முழுவதும் மன்னிப்பு வேண்டுவதும் சற்றுப் பொருத்தம் இல்லாத செயல்போல் ஆகிவிட்டது. கணவன் மனைவிப் போராட்டத்திலும் நண்பர்களுடைய போராட்டத் திலும் இத்தகைய ஒரு நிலை வருதல் அனுபவம். மன்னிப்பு வேண்ட விரும்பினாலும் கேட்பது புதுமையாகவே இருக்கும். எனவே, வேடிக்கை பேசவது போலவும், மன்னிப்புக் கேட்பது போலவும் அமைந்த முறையில் இப்பேச்சு நிகழும். ''ஏதோ நான்தான் தவறுதலாகப் பேசிவிட்டாலும் அதை இவ்வளவு தூரம் மனத்தில் வைத்துக் கொள்ளலாமா? விட்டு விடுங்கள்'' என்று மன்னிப்பு வேண்டும் முறை நாம் அறிந்ததுதானே. அதோ ஆரூரர் பன்னிரண்டாம் பாட்டில் இம் முறையில் இறைவனிடம் வேண்டுகிறார்.

**'ஏசின் அல்ல இகழ்ந்தன அல்ல**
**எம்பெரு மான்என்று எப்போதும்**
**பாயின புகழான் பாச்சிலாச் சிராமத்து**
**அடிகளை அடிதொழப் பன்னாள்**
**வாயினாற் கூறி மனத்தினால் நினைவான்**
**வளவயல் நாவல்ஆ ரூரன்**
**பேசின பேச்சைப் பொறுத்திலர் ஆகில்**
**இவர்அலாது இல்லையோ பிரானார்?'**

(சுந்தரர் தேவாரம் 145)

இப் பாடலிலும் தமக்கே உரிய நயம் தோன்றப் பாடுகிறார். திருக்குறளில் 'பழைமை' என்று ஓர் அதிகாரமே (81) வகுக்கிறார் வள்ளுவர். நட்புச் செய்துவிட்ட பிறகு நண்பர் ஏதேனும் தவறு செய்துவிட்டால் அவருடன் பல நாள்களாக இருக்கும் நட்புக் கருதி அப் பிழையை உடனே

மறந்துவிடவேண்டும். இதுவே நண்பர்களின் தலையாய இலக்கணம். இக் குறளை நன்கு கற்ற நம்பியாரூரர் இறைவனுக்கே திருக்குறளை நினைவூட்டுகிறார். அவன் அனைத்திற்கும் மேலான இறைவனாகவே இருப்பினும் வேண்டுமென்றே நம்பியாரூரரை நண்பனாக்கிக்கொண்டான் அல்லனோ? எப்பொழுது அவரை நண்பனாகக் கொண்டானோ அப்பொழுதே அவருடைய பிழைகளை மன்னிக்க வேண்டிய கடப்பாடும் இறைவனுக்கு உண்டல்லவா? இதோ குறள் பேசுகிறது.

**"பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்று உணர்க**
**நோதக்க நட்டார் செயின்''**

(குறள், 805)

நண்பன் ஒருவன் தவறு செய்துவிட்டால், ஒன்று, அறியாமையால் செய்துவிட்டான் என்றாவது அல்லது அதிக உரிமைபற்றிச் செய்துவிட்டான் என்றாவதுதான் கொள்ளவேண்டும். இங்கு ஆரூரர் கோபத்துடன் பேசியதை அறியாமையால் செய்துவிட்டார் என்று கூற முறை இல்லை. ஏனெனில், நன்கு கற்றறிந்த பெரியவரான அவர் இறைவனுடைய பெருமையை அறியாமல் இவ்வாறு கூறினார் என்பது முறையன்று. எனவே, எஞ்சி இருப்பது ஒரு காரணந்தானே? அதிக உரிமையால் கூறினார் என்றுதான் மதித்து மன்னித்துவிடவேண்டும். அதைத்தான் ஆரூரர் பன்னிரண்டாம் பாடலின் மூன்றாம் அடியில் குறிக்கிறார். 'பன்னாள் வாயினாற் கூறி, மனத்தினால் நினைவான் வளவயல் ஆரூரன்' என்று தம்மைக் கூறிக்கொள்ளும்போது பழங்காலத்தொட்டே தமக்கும் இறைவனுக்கும் உள்ள நட்பைக் குறிப்பிடுகிறார். நான்காம் அடி 'இவ்வளவு நாள்' பழகிய நண்பனாகிய நான் பேசின பேச்சை அது தவறாகவே இருந்தாலும் என்னுடைய நட்பின் பழைமையைக் கருதிப் பொறுத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு நண்பனாகிய நான் பேசின குற்றத்தைப் பொறுக்கவில்லை

என்றால் இவரை எவ்வாறு நண்பன் என்று கூறுவது?' என்ற பொருளில் அமைந்துள்ளது. என்னதான் இப் பாடலில் வேடிக்கை இருப்பினும் பாட்டின் உள்ளே ஆரூரரின் ஆழ்ந்த அன்பும், இறைவனுடைய பெருமையும், உயிர்களினுடைய உதவியற்ற தன்மையும், அவனுடைய கருணையின் பெருமையும் அடங்கி இருத்தல் கண்கூடு. ஆழ்ந்த அன்பில் பிறந்த அவலச்சுவை அல்லது 'சோகரசம்' இப் பாட்டில் அமைந்துள்ளது.

## 14. அன்பே சிவம்

சிவராத்திரி என்ற ஒரு நன்னாள் இறைவனுக்கு உகந்த நாள். சிவராத்திரி என்று குறிப்பிட்ட ஒரு நாளில் தான் ஆண்டவனை நினைக்க வேண்டுமோ என்று பலர் நினைக்கலாம். ஆனால், நம்முடைய பெரியவர்கள் மிகவும் ஆராய்ந்து பார்த்துத்தான் இப்படிப்பட்ட நாள்களையெல்லாம் ஏற்படுத்தியிருக்கின்றார்கள். மனிதனுடைய தோற்றம் என்று தொடங்கிற்று என்று உறுதியாகச் சொல்லமுடியாது; என்றாலும் அவன் வாழ்வு வெகு விரைவாக நாகரிகம் முதிரப் பெற்று அறிவு உலகத்திலே வளர்ச்சி அடைந்துகொண்டு வருவது கண்கூடு. இப் பரந்த உலகையும் அதில் இவ்வளவு நுகர்ச்சிப் பொருள்களையும் நம்மை அனுபவிக்குமாறு செய்த இறைவனுடைய கருணையை மனிதன் அல்லும் பகலும் நினைத்தல் வேண்டும் ஆனால் வாழ்வின் வேகம் அதிகரித்துக் கொண்டே போகின்ற நிலையிலே, பல சமயங்களில் மனிதன் தன்னுடைய கடமையைக்கூட மறந்துவிடுகின்றான். எவ்வளவு ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப் பின் சில கடமைகளை அவன் வகுந்துக் கொண்டாலும், பல சமயங்களில் அவற்றை விட்டு நழுவவேண்டி ஏற்பட்டு விடுகிறது.

இம்மாதிரி மனிதனுடைய வாழ்வு மாறிக் கொண்டு போகிற காரணத்தால், பெரியவர்கள் விழாக்காலங்களை

வகுத்தார்கள். அந்த ஒரு நாளிலாவது ஆண்டவனை நினைப்பதற்கு நமக்கு ஒரு வாய்ப்பைக் கொடுத்தார்கள். அனைத்தும் இறைவனுடைய படைப்புகள்தாம். முன்னம் மதி, கனலி என்று இவற்றைப் படைத்தான் அவன். இருபத்தேழு விண்மீன்களையும் அவன்தான் படைத்திருக்கிறான். அப்படியிருக்கத் திருவாதிரை நட்சத்திரம் மட்டும் இறைவனுக்கு உகந்தது என்று சொல்லுவதன் கருத்தென்ன? இதே கருத்தைத்தான் முத்தொள்ளாயிரம் என்ற நூலில் ஓர் ஆசிரியர் விளையாட்டாகப் பேசுகிறார். சந்திரன், சூரியன், விண்மீன்கள் ஆகிய அனைத்தையும் படைத்த இறைவனை 'ஆதிரையான்! ஆதிரையான்' என்று இந்த உலகம் குறிப்பிடுவதன் கருத்து யாது? இவ்வாறு கேட்பதன் மூலம் அனைத்தும் அவனுடைய படைப்பேயாகும் என்ற கருத்தைக் கூறுகிறார் ஆசிரியர். அவற்றுள்ளே தனியாக ஒன்றை அவனுக்கு ஏற்றது என்று சொல்லுவதன் மூலம், அந்த நட்சத்திரம் வரும்பொழுது நம்மையும் அறியாமல் ஆண்டவனை நினைக்கின்றோம். மனித மனத்திற்கு உள்ள தனிப்பட்ட ஓர் இயல்பு அது.

சில பொருள்களைச் சில பொருள்களோடு சம்பந்தப்படுத்தி, மனித மனம் பழகிவிடுகிறது. எப்பொழுதாவது நம்முடைய நண்பர் ஒருவரை ஒரு தனிப்பட்ட உடையிலே சந்தித்துப் பழகியிருப்போமேயானால், அதேபோல உடையுடுத்திய மற்றொருவரைப் பார்க்கும்பொழுது, நண்பருடைய நினைவு வருகிறது. அதனை மனித மனம் இயல்பாகப் பெற்றிருக்கிறது. அந்தக் காரணத்தினால்தான் மனித மனத்தின் இந்த இயல்பை அடிப்படையாக வைத்து இந்த விழா நாள்களை வகுத்தார்கள். ஆண்டில் ஒரு நாளைக்குச் சிவராத்திரி என்று சொல்லுவதன் மூலமாக, ஆண்டவனை அன்று முழுமனத்தோடு நினைப்பதற்கு நமக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்தார்கள். மற்ற நாள்களில் இறைவனை நினைக்க வேண்டா என்பது கருத்தன்று. ஆனால் இன்றைக்குத்

தனிப்பட்ட முறையிலே ஆண்டவனை நினைக்கின்றோம் என்பதுதான் கருத்து.

அதிலும், உலக வாழ்வில் ஈடுபட்டு அனைத்தையும் மறந்து வேகமாக ஓடிக்கொண்டிருக்கின்ற நாம் ஓர் இரவு முழுவதும் கண்விழித்து ஆண்டவனை மூன்று காலத்திலும் வழிபட வேண்டுமென்று வைத்ததன் காரணம் ஒன்றுண்டு. வேகமான வாழ்க்கையிலேயும் அமைதியான வாழ்க்கையை அடைவதற்கு இதனை வழியாக வகுத்தார்கள். இப்படிப் பட்ட காரணங்களை வைத்துத்தான் இத் தமிழ்நாட்டில் 12 மாதங்களிலும் 12 பெரு விழாக்களை அமைத்தார்கள். அவற்றுள்ளே ஒன்றுதான் சிவராத்திரி என்று சொல்லப் படுவது. இந்த நாளின் சிறப்பைப் பற்றிப் பழங்காலத்தில் எத்தனையோ கதைகளும் வரலாறுகளும் எழுதினார்கள். திருடன் ஒருவன் அரசனுக்குப் பயந்துகொண்டு, காட்டிலே ஓடி ஒளிந்து மரத்தின்மேலே ஏறியிருந்தான். அவனுடைய கைகால்களெல்லாம் நடுக்கம் எடுத்தன. அப்பொழுது அவனையும் அறியாமல் அந்தப் பயத்தைப் போக்கிக் கொள்ளுவதற்கு அந்த மரத்தின் தழைகளையெல்லாம் பறித்துப் பறித்துக் கீழே போட்டுக் கொண்டிருந்தான். அம் மரத்தின் அடியில் ஒரு சிவலிங்கம் இருந்தது. திருடன் ஏறி இருந்த மரம் வில்வ மரமாக இருந்தமையின், அவன் பறித்துப் போட்ட வில்வ இலைகள் கீழே உள்ள சிவலிங்கத்தின் மேல் அர்ச்சனையாக விழுந்தன. அவன் வேண்டுமென்று அந்த அர்ச்சனையைச் செய்யாவிட்டாலும் வில்வ மரத்தின்மேல் ஏறியிருந்து, அந்த வில்வ இலைகளையெல்லாம் பறித்துப் பறித்துப் போட, அது ஆண்டவனுக்குச் செய்த அர்ச்சனை யாக ஆகிவிட்டது எனவே, யமபடர்கள் அவனை அழைத்துக்கொண்டு போக முற்படுகையில், சிவகணங்கள் வந்து 'இவன் சிவராத்திரி முழுவதும் விழித்துக்கொண்டிருந்து இறைவனுக்கு வில்வத்தினாலே அர்ச்சனை செய்தான். ஆதலால், நாங்கள் அழைத்துக் கொண்டு போகிறோம்' என்று சொன்னார்களாம்.

இந்தக் கதையினுடைய அடிப்படையை நாம் கூர்ந்து கவனிக்கவேண்டும் திருடனாக இருந்த ஒருவன் அச்சத்தின் காரணமாக மரத்தின் மேல் ஏறிக்கொண்டு கை நடுக்கம் தீர்வதற்காகத் தழைகளைப் பறித்துப் போட்டான். அத் தழைகள் தற்செயலாகக் கீழே இருந்த இலிங்கத்தின் மேல் வீழ்ந்து அதன் பயனாக அவன் சுவர்க்கம் சென்றான் என்றால் இதன் அடிப்படை யாது' அனைவரும் எல்லாத் தவறையும் செய்துவிட்டு இறுதியில் இவ்வாறு செய்து சுவர்க்கம் அடைந்துவிடலாம் என்று கருதிட வேண்டா. 'அஞ்சியாயினும் அன்புபட்டாயினும்' இறைவனை வழிபட வேண்டும் என்று திருநாவுக்கரசர் கூறியதையே மற்றொரு வகையில் குறிக்கின்றது இக் கதை. இப்பெருநாளில் எவ்வாறாயினும் இறைவனை வழிபாடு செய்யவேண்டும். என்பதைத் தவிர இக் கதையால் அறியப்படுவது வேறு ஒன்றும் இல்லை. ஆண்டவனை வழிபாடு செய்ய வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துவதற்காகத்தான் இந்தச் சிவராத்திரி மகாத்மியம் போன்ற பல கதைகள் எழுந்தன. சிவராத்திரியில் முக்கியமாக நாம் நினைக்க வேண்டியது ஆண்டவனைப் பற்றியாகும். ஆண்டவன் என்ற பொதுச் சொல்லினாலே சொன்னாலும், ஒன்றுதான். ''ஒரு நாமம் ஓருருவம் ஒன்றும் இல்லாற்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ'' என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். கருவி, கரணம், கற்பனை அனைத்தும் கடந்து நிற்கின்ற கடவுளுக்கு எந்தப் பெயரைச் சொன்னால்தான் என்ன? அவ்வளவு பழங் காலத்திலேயே ஆண்டவன் வடிவில்லாதவன், முற்றறிவினன், எங்கும் நிறைந்தவன், சர்வ வல்லமையுள்ளவன் என்பவற்றையெல்லாம் நன்றாகத் தெரிந்திருந்தது இந்த நாட்டினுடைய பெருமையாகும். அப்படியானால், அவனை எப்படித்தான் அழைப்பது? எந்தப் பெயரைச் சொல்லி அழைத்தாலும் தவறில்லை. இன்னும் சொல்லப் போனால் 'செந்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்பான்' என்று அருணகிரியார் கூறுகிறார். வைதுகூட ஆண்டவனை வழிபட முடியுமா? ஆம்

உலகத்திலே வேறு எங்கும் காண முடியாத முறையிலே இந்த நாட்டிலே சில வரலாறுகள் உண்டு.

ஆண்டவனுக்கு அர்ச்சனை செய்வதைக் கேள்விப் படுகின்றோம். பால் பழம் முதலியவற்றினாலே அபிஷேகம் செய்வதைக் கேள்விப்படுகின்றோம் ஆண்டவனைக் கல்லால் அடித்தும் வழிபடலாம் என்று எங்கேயாவது கேள்விப் பட்டிருக்கின்றோமா? ஆனால், இந்த நாட்டிலே அப்படியும் ஒரு வரலாறு உண்டு. சாக்கிய நாயனார் என்ற ஓர் அன்பர் ஆண்டனைத் தினந்தோறும் கல்லால் அடித்தார். கல்லால் அருச்சனை செய்து மோட்சத்தையும் பெற்றார். இதைவிட வியப்பு வேறென்ன இருக்க முடியும்? மனித மனத் தத்துவத்தை எவ்வளவு அடிப்படையாக ஆராய்ந்து அதன் பயனாகத் தமிழர்கள் இந்தப் பேருண்மையைக் கண்டார்கள் என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும். ஆண்டவனைக் கல்லால் அடிப்பதைவிடத் தவறான காரியம் வேறு இருக்க முடியுமா? ஆனால், அதுவும் வீடுபேற்றிற்குக் காரணமாயிற்று என்றால் உண்மை என்ன? ஒருவன் செய்கின்ற செயலை இந்த நாட்டவர்கள் பெரிதாகக் கருதியதில்லை. செயலின் பின்னே இருக்கின்ற மனோ நிலை என்ன என்பதைத்தான், கேட்டார்கள். ஆண்டவனைக் கல்லாலும் அடிக்கலாம்; மலராலும் அடிக்கலாம். மலரால் அடிப்பது உயர்ந்தது என்று கருதுகிறோம் கல்லால் அடிப்பதைத் தவறானது என்று கருதுகின்றோம். ஏன்? உலகம் முழுவதும் அப்படித்தான் கருதும். அதில் தவறொன்றுமில்லை உலகத்தார். பலரும் ஏற்றுக் கொள்ளும் ஒரு கருத்தை இத் தமிழ் நாட்டார் ஏற்றுக்கொள்ள வில்லை. அவ்வாறு ஏற்றுக் கொள்ளாததற்குத் தக்ககாரணமும் உண்டு. கல்லால் அடித்தவர் போற்றப்பட வேண்டிய சந்தர்ப்பமும் இருக்கலாம் அல்லவா? இக் கருத்தைத் திருநாவுக்கரசர் அழகாகப் பாடுகிறார்.

"கரும்பு பிடித்தவர் காயப்பட்டார் அங்கு ஓர் கோடலியால்
இரும்பு பிடித்தவர் இன்புறப் பட்டார்"
(திருநாவுக்கரசர் தேவாரம். 990)

ஒருவன் கரும்பாகிய வில்லை வளைத்து மலராகிய அம்புகளை எய்தான் இறைவன் மேல். இது குற்றமா? மலர் மாலையை நம்முடைய கழுத்தில் யாராவது அணிவதைத் தவறு என்போமா? அப்படி மலரால் எய்யப்பட்டவர் என்ன செய்தார்? தம்முடைய கண்ணைத் திறந்து தம்மேல் மலரை எறிந்தவரை எரித்தே விட்டார். மற்றொருவர் கல்லை எடுத்து ஆண்டவன் மேல் தினந்தோறும் அடித்துக் கொண்டே இருந்தார். இனி ஒருவன். சரியான இரும்புக் கோடாரியை எடுத்துத் தம்முடைய தந்தையின் காலையே வெட்டி விட்டார்.

கல்லால் அடித்தவருக்கும், இரும்புக் கோடாரியால் பெற்ற தந்தையின் காலை வெட்டியவருக்கும் என்ன வெகுமதி கிடைத்தது? மோட்சம். உலகத்தில் வேறு எங்கும். காண முடியாத வரலாறுகள் இவை. இந்த இரண்டு வரலாறுகளும் தாம் இந்த நாட்டின் ஒப்பற்ற அறிவுத் திறமையை எடுத்துக் காட்டுகின்றன கல்லால் அடிப்பது பொருளன்று. மலர் மாலை எடுத்து அணிவதும் பொருளன்று. இவை இரண்டு செயல் களின் பின்னே இருக்கின்ற மனோநிலையைப் பார் என்று சொன்னார்கள். கல்லால் அடித்தவன் என்ன மனநிலையில் அடித்தான்? அன்பின் அடிப்படையில் அடித்தான். மன்மதன் மலரைக் கொண்டு இறைவன் மேல் தொடுத்தானே, என்ன எண்ணத்தினால் தொடுத்தான்? அன்பு இல்லை அவனுக்கு! ஆண்டவனுடைய தவத்தைக் கலைக்க வேண்டுமென்பது தான் அவனுடைய எண்ணம்.

செய்யப்பட்ட செயலைமட்டும் வைத்துக்கொண்டு முடிவுக்கு வருவதானால் மன்மதன் செயலைப் போற்றவும், கல்லால் அடித்த சாக்கியரைத் தூற்றவும், தந்தையின்காலை வெட்டிய சண்டேசுவரரைப் பழிக்கவும் நேரிடும். இவைபற்றி முடிவுக்கு வருமுன் உலகியலிலும் இத்தகைய ஒரு செயலைக்

காணலாம். அறுவை மருத்துவம் செய்கின்ற மருத்துவர் என்ன செய்கிறார்? நம்முடன் கூடவே பிறந்து வளர்ந்த உடலைப் பெரிய கத்தியால் வெட்டிக் கருணை இல்லாதவர்போல் துன்பம் செய்கிறாரே, அது முறையா? அறுவை மருத்துவம் செய்பவரை நாம் வெறுக்கிறோமா? சிறு கத்தியால் ஒருவர் நம்மைக் குத்தினாலும் அவரை வழக்கு மன்றத்தில் நிறுத்தித் தண்டனை பெற்றுத்தருகிறோமே! அப்படி இருக்கப் பெரிய கத்தியால் நம் உடலைச் சோதிக்கும் மருத்துவருக்கு எவ்வளவு பெரிய தண்டனை பெற்றுத்தர வேண்டும்? அவ்வாறு செய்கின்ற பைத்தியக்காரர் யாரேனும் உண்டா? ஏன் ஒருவரும் அவ்வாறு நினைக்கவில்லை? சிறு கத்தியால் நம்மைக் குத்துபவர் நமக்குத் தீங்கிழைக்கும் நோக்கத்துடன் குத்துகிறார். பெரிய கத்தியால் அறுக்கும் மருத்துவர் நம்மை வாழவைக்கும் கருத்துடன் அறுக்கிறார். சிறிய கத்தியால் குத்தப்பட்ட பொழுது பிழைத்துக்கொள்ளலாம். வாழவைக்கச் செய்யப்பெற்ற அறுவை மருத்துவரைத் தண்டிப்பார் ஒருவரும் இலர்! ஏன்? செய்யப்பட்ட செயலைப்பற்றி அதிகக் கவலை கொள்ளாமல் செய்தவரின் மனக்கருத்தை ஆராய்ந்தனர் அறிவுடையோர். வாழவைக்கும் கருத்துடன் அறுவை செய்யப் பெற்றமையின் அவரைப் போற்றினர். அவரால் வாழவைக்க முடியாதபொழுதுங்கூட உலகம் அவரைப் போற்றியது. கொல்லும் கருத்துடன் குத்தினமையின் உலகம் குத்தியவரைத் தூற்றியது. இவற்றால் அறியப்படுவது ஒன்றுண்டு எனில் அது யாது? செய்யப்படும் செயலைப்பற்றிக் கவலையுறாமல் செய்பவர் மனக்கருத்தை மட்டுமே காண்டல் வேண்டும். அன்பின் அடிப்படையில் கல்லால் அடித்தவரும் தந்தையின் காலை வெட்டியவரும் போற்றப்பட்டனர். தவத்தைக் கலைக்கும் தவறான கருத்துடன் மலர்களை எறிந்தாலும் அச்செயல் பழிக்கப்பட்டது.

ஆகையினால், ஆண்டவனை நினைக்கும்பொழுது நினைக்கின்ற நினைவு தூய்மையுடையதாக இருக்க

வேண்டும். அந்த அன்பின் வெளிப்பாடக, பரிணாமமாக வெளியே வருகின்றது எதுவாகவேனும் இருக்கலாம். அது அபிஷேகமாக இருக்கலாம்; ஆராதனையாக இருக்கலாம்; இல்லை, வசவாகக்கூட இருக்கலாம்; அந்த அளவுக்கு இந்த நாட்டிலே உரிமை கொடுத்திருந்தார்கள் என்பதைத்தான் 'செந்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்பான்' என்ற அருணகிரிப் பெருமான் திருவாக்கிலே காணுகின்றோம். செந்தமிழால் வைகின்றான் ஒருவன். ஆனால், வைகின்றவனுடைய மனோநிலை என்ன? எல்லை மீறிய அன்பினாலே குழந்தை தாயைத் திட்டவில்லையா? எந்தத் தாயாவது உடனே கோபித்துக்கொண்டு அந்தக் குழந்தையை எடுத்து எறிந்துவிடுகிறாளா அல்லது தண்டனை கொடுக்கிறாளா? இல்லையே. குழந்தையினுடைய மனோநிலையைப் பார்க்கலாம். வாய் ஏசத்தான் செய்கிறது. ஆனால், மனம் அன்பால் பெருகி வழிகின்றது. இப்படியே மறக் கருணையைப் பற்றியும் நினைத்தார்கள் இந்த நாட்டிலே. தந்தை மகனை அடிக்கின்றான். சில சமயங்களிலே மனம் மிகவும் நோவும் படியான சொற்களைச் சொல்லி ஏசுகின்றான். எந்த மகனாவது தந்தையின்மேல் வழக்குத் தொடுக்கலாம் என்று போனதுண்டா? ஒரிருவர் போயிருக்கலாம். ஆனால், அவர்கள் சட்டத்திற்கு அப்பாற்பட்டவர்கள்; மனிதத் தன்மையிலிருந்து நீங்கியவர்கள். அவர்களைப்பற்றிக் கவலையில்லை. பொதுவாக நோக்குமிடத்து யாரும் அதைத் தவறாகக் கருதுவதில்லை. ஏன்? தந்தை ஏசத்தானே செய்தான்? அடிக்கத்தானே செய்தான். இச் செயல்களைப் பற்றிச் சிந்தியாமல், பின்னே இருக்கின்ற தந்தையின் மனோநிலையைக் கண்டார்கள். அந்த மனோநிலை என்ன? மகனை வாழவைக்கவேண்டும் என்ற மனோநிலை, திருத்தவேண்டுமென்ற மனோநிலை. இதனால்தான், இந் நாட்டவர் மனத்தின் அடிப்படையிலே இருக்கின்ற எண்ணத்தைப்

பெரிதாகக் கருதினார்களே தவிர, செயலைப் பெரிதாகக் கருத வில்லை என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

இதை உணர்ந்துகொண்ட பிறகு ஆண்டவனுக்கு இத்தனை பெயர் கொடுத்த காரணங்களும், ஆண்டவனைப் பற்றி இத்தனை கதைகள் எழுந்த காரணங்களும் நமக்கு நன்கு விளங்கும். பல கதைகளைப் பார்த்தால் இது என்ன பைத்தியக்காரக் கதைகள் என்று கூட நினைக்கத் தோன்றுகிறது. ஆனால், கதையின் அடிப்படையில் இருக் கின்ற சாரத்தை ஆராய்ந்து பார்ப்போமோயானால், இந்த நாட்டவர்களுடைய பண்பாட்டை விளக்கக்கூடிய கதைகளாக அவை அமையக் காண்கின்றோம். அந்த முறையிலே சிவன் என்று சொன்னாலும், வேறு எந்தப் பெயர் கொண்டு சொன்னாலும் தவறில்லை. அவன் நாமரூபம் கடந்தவன். கற்பனை கடந்த ஒருவன். அவனுக்கு நாமம் கற்பித்தார்கள்; ரூபம் கற்பித்தார்கள். கற்பனைக்கு உட்பட்டவனாகச் செய்தார்கள் எத்தனை எத்தனையோ வரலாறுகள் எல்லாம் ஆக்கித் தந்தார்கள்.

மிக ஆழ்ந்த கருத்தை எடுத்து நமக்குத் தத்துவரூபமாக வெளியிட்டவர்களுள் திருமூலர் ஒருவர். முதன்முதலாக 'அன்பே சிவம்' என்ற ஒரு சொல் தொடரை அவர்தாம் நமக்குத் தந்தார். "அன்பும், சிவமும் இரண்டு என்பர் அறிவிலார். அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்" என்று பாடினார். இரண்டு தனிச் சொற்கள் இருக்குமே யானால் இரண்டு பொருள் உண்டோ என்று யாரும் ஐயப்படு வார்கள். அப்படிச் சந்தேகப்படாதே என்று சொல்லுகிறார் திருமூலர். அன்பு, சிவம் என்பன இரண்டு வேறு வேறு சொற்கள் என்றால், அவற்றின் பொருளிலும் கொஞ்சம் கொஞ்சம் வேறுபாடு இருக்குமே என்று கருதுபவர்க்கு அதுவும் இல்லை என்றார். அன்பும் சிவமும் இரண்டு என்று சொல்லுபவர்கள் யாரேனும் இருந்தால் அவர்கள் அறிவில்லாத முட்டாள்கள் என்றே சொல்லிவிட்டார். அப்படியானால் ஏன்

பழைய விவிலிய நூலில் கூறப்பெற்ற கதை ஒன்று இதனை வலியுறுத்துகின்றது. "விதைகள் விழுந்தன; குருவிகள் அவற்றைக் கொத்திக்கொண்டு போய்விட்டன. களர் நிலத்திலே சில விதைகள் விழுந்தன; அவை முளைக்கவே யில்லை. நல்ல பக்குவமுடைய நிலத்தில் சில விதைகள் விழுந்தன. அவை ஒன்று நூறாகப் பல்கிப் பலன் அளித்தன." அதைப்போல ஆண்டவன் தந்த அன்பாகிய விதையைப் பெருக்க வேண்டும்,

பிறக்கும் பொழுதே நாம் கொண்டுவருகின்ற ஒரு சொத்து அது. தாயினுடைய கருவிலே தோன்றுவது முதல் கொண்டு நம்மிடத்திலே ஊறி உண்டாகின்ற ஒரு பொருள் அது. அந்த அன்பு இறுதிவரையிலே இருக்கின்றதைக் காண்கின்றோம். எல்லோருக்கும் சமமாகக் கிடைக்கின்ற இந்தச் சொத்தை ஒரு சிலர் பெருக்குகின்றார்கள், ஒரு சிலர் எந்த அளவில் பெற்றார்களோ அந்த அளவிலேயே வைத்து விடுகிறார்கள். அனைவருக்கும் பொதுவாகக் கிடைக்கின்ற இந்த அன்பு ஒரு சிலரிடத்திலே பட்டு நல்ல பக்குவமான நிலத்திலே விழுந்த விதையைப்போலப் பெருகிப் பயன் அளிக்கின்றது.புத்ததேவர், ஏசுநாதர் நம்மாழ்வார், ஞானசம்பந்தர், இராமகிருஷ்ணர் போன்ற பெருமக்களிடத்தில் ஆண்டவன் கொடுத்த அன்பாகிய இந்த விதை வளர்ந்து பெரிய மரமாகப் பல்கிப் பலன் அளித்ததைக் காண்கிறோம். நம் போன்ற ஒரு சிலரிடத்திலே எந்த அளவுக்கு அது கிடைத்ததோ அந்த அளவிலேயே நின்று விட்டது. மேலே கூறிய இப் பெரியோர் களிடத்தில் கிடைத்த அன்பு எவ்வாறு முதிரத் தொடங்குகிறது என்பதைத்தான் கொஞ்சம் ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

**"நான்தனக்கு அன்புஇன்மை நானும்தானும் அறிவோம்**
**தான்என்னை ஆட்கொண்டது எல்லாரும் தாமறிவார்"**
(திருவாசகம் - திருகோத்தும்பி, 13)

அவன் அன்பைத் தந்தான் எனினும், அந்த அன்பை நான் பயன்படுத்தவில்லை என்ற பொருளில் 'நான் தனக்கு அன்பு இன்மை நானும் தானும் அறிவோம்!' என்கிறார் மாணிக்கவாசகர். அவனிடத்திலே கொஞ்சங்கூட எனக்கு அன்பு இல்லை என்பதை அவன் அறிபவன். அவ்வாறு இருந்தும், அவன் என்னை ஆட்கொண்டான் என்று சொல்லும் பொழுது, ஒரு பெரிய உண்மையை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். அவன் நமக்குக் கொடுத்த இந்த அன்பாகிய விதை இருக்கிறதே அதைத் தக்க முறையில் நாம் பயன்படுத்தாமற்போனாற்கூட அவன் அப்பொழுதும் நமக்குப் பேரருள் செய்கின்றான் என்பதைத் தெரிந்து கொண்டால், ஒரு பெரிய நன்மை அடையலாம். அஃது என்ன நன்மை?

நம்மையும் மீறிய துயரம் வரும்பொழுது, நாம் செய்த தவறுகளையெல்லாம் சிந்தித்துப் பார்த்து, 'இனி உய்கதியே கிடையாதா? என்று வருந்துகிறோமே, அப்படி வருந்துபவர் கட்கும் கவலை வேண்டா, அவன் அருள் எப்படியும் கிட்டும் என்ற ஒரு தைரியத்தைக் கொடுக்கிறது. வைணவர்கள் 'உடைமைக்கு ஒரு முழுக்கு. உடையானுக்குப் பத்து முழுக்கு' என்று சொல்வார்கள். மோதிரத்தை விரலில் அணிந்து கொண்டு ஒருவன் கிணற்றில் தண்ணீர் இறைத்தான், மோதிரம் தவறிப் போய்க் கிணற்றுள் விழுந்துவிட்டது. மோதிரம் தண்ணீருக்குள் போகும்பொழுது ஓர்ச்சந்திலே போய் விழுந்துவிட்டது. மோதிரக்காரனுக்கல்லவா அதை மீட்கும் கவலை. எனவே, பல முறை மூழ்கி மூழ்கிப் பார்க்கிறான். எட்டுத் தடவை மூழ்கினான். எனினும் மோதிரம் கிடைக்கவில்லை. அதோடு விட்டுவிடுகிறானா? இல்லை. மறுபடியும் மூழ்கிப் பார்க்கிறான் மண்ணையெல்லாம் வெளியில் கொண்டுவந்து கொட்டுகிறான் மோதிரம் கிடைக் கிறவரையில் அவன் விடவே இல்லை. நாமெல்லாம் மோதிரம் போன்ற உடைமைகள்; அடிமைகள். நம்மைப் படைத்த இறைவன் இருக்கின்றானே அவன் உடைமைக்காரன். நாம

எவ்வளவுதான் அவன் கொடுத்த அன்பையெல்லாம் பொரித்துத் தின்றுவிட்டாலும், அவன் விடமாட்டேன் என்கிறான். மறுபடியும் மறுபடியும். நமக்குப் பிறவியைக் கொடுத்து எப்படியாவது முன்னேறுகிறோமா என்று கவலைப் படுகிறான். அப்படிக் கவலைப்பட்டு, எப்படியாவது நம்மைத் தன்னிடத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று அவன் கவலைப்படுகின்றான். நம் போன்றவர்கட்கு அந்தக் கவலை இல்லை என்பது நன்றாகத் தெரிந்த விஷயம். ஆனால், மாணிக்கவாசகர் போன்ற பெரியோர்களும் அன்பில்லை என்றே சொல்கிறார்களே என்றால், நம்மிடம் உள்ளவற்றைத் தம்மிடம் உள்ளவைபோலப் பேசுதல் பெரியார் இலக்கணம். நம்முடைய குறைகளை நேரிடையாக எடுத்துக் காட்ட மாட்டார்கள் அவர்கள். தங்கள் இடத்தில் அந்தக் குறை இருப்பது போலவும், அதை உலகத்தார்க்கு எடுத்துச் சொல்லுவது போலவும் சொல்லுவார்கள். அவர்கள் அப்படிச் சொல்வதன் அடிப்படை என்ன? நம்முடைய உண்மை நிலையைத்தான் அவர்கள் எடுத்து விளக்குகிறார்கள். நம் குற்றத்தை நேரிடையாக எடுத்துக்காட்டினால், திருத்திக் கொள்ளும் மனநிலையைவிட அவர்கள் மேல் சினமே உண்டாகும். ஆகவேதான், நம்மாட்டுக் கருணையுடைய பெரியோர்கள் பிழைகளைத் தம்மேல் ஏற்றிக்கொண்டு வருந்துகிறார்கள்.

ஒருவாறு இதனை உணர்ந்து வாழத் தொடங்குபவர்கள் இழைக்கும் இரண்டாவது தவறும் ஒன்றுண்டு, தொடக் கத்திலே இந்தச் சூரத்தனத்தோடு எதையும் செய்வார்கள். கொஞ்ச காலம் ஆனபிறகு கொஞ்சம் கொஞ்சமாகக் கொள்கையை மறந்துவிடுவர். இவ்வாறு நேராமல் அன்பை வளர்ப்பதற்கு அடிப்படையாகத்தான், இந்தக் கிரியைகளை யெல்லாம ஏற்படுத்தினார்கள். சிவராத்திரியே ஏறத்தாழ அந்தக் கருத்தில் ஏற்பட்டதுதான். அதன்மூலமாக ஆண்டவனை நினைத்து வழிபடவேண்டுமென்பதற்காக,

காலஞ் செல்லச் செல்ல என்ன ஆயிற்று? இந்தக் கிரியைகள் தங்கிவிட்டன. இவற்றின் பின்னே நின்ற அடிப்படைகள் மறைந்துவிட்டன. ஏதோ ஒரு காரணத்தைப்பற்றி ஒரு பொருள் ஒரு காலத்தில் ஏற்படுகிறது. காரணம் மறைந்து பல நாட்கள் ஆகிவிட்ட பிறகும் பொருள் நின்று கொண்டே இருக்கும். பலர் எதற்காக இப் பொருள் இங்கே இருக்கிறது என்று கூடக் கேட்பர். ஏதோ பெரியவர்கள் காலத்திலே இருந்தது: இன்றும் இருந்துக்கொண்டேயிருக்கின்றது என்று விடைவரும். இப்படி நம்மையறியாமல் எந்த அடிப்படை யிலே ஒன்றை ஏற்படுத்தினோமோ அந்த அடிப்படையை மறந்துவிட்டுப் பொருளைமட்டும் வைத்துக் கொண்டிருப்போம். ஒரு நண்பன் வைர மோதிரத்தை அழகான பெட்டியில் வைத்துப் பரிசாக அனுப்பினான். என்னைப்போல ஒருவனுக்கு அந்தப் பரிசு அனுப்பப் பெற்றது. பரிசைப் பெற்றவன் மோதிரத்தைத் தூக்கி வெளியிலே வைத்து விட்டான். பெட்டி அழகாக இருந்தது என்று அதைச் சாக்கிரதையாக வைத்துக்கொண்டான். அது போல, அன்பாகிய ஒரு மோதிரத்தை உடம்பாகிய பெட்டியில் வைத்து ஆண்டவன் அனுப்பினான். நாம் என்ன செய்கிறோம்? அந்த அன்பாகிய மோதிரத்தை விட்டு விட்டோம். பெட்டி அழகாக இருக்கிறதென்று அதற்குச் செய்கின்ற உபசாரம், உள்ளே இருக்கின்ற பொருளையே மறைத்து விடுகின்றது.

இதேபோலக் கிரியைகளையே பெரிதாக நினைத்துக் கொண்டு சிவராத்திரி அன்று தவறாமல் மூன்றுவேளை பூசை செய்கின்ற பெருமக்கள் உண்டு. அன்பு கலவாத அந்தப் பூசையை நினைத்துப் பார்க்கின்றார் திருநாவுக்கரசர். அனுபவம் முதிர்ந்த அக் கிழவர் பல பேர்களுடைய பூசையைப் பார்த்திருப்பார்போலும்! அந்தப் பூசையிலே இவருக்கு ஒரு சந்தேகம் வந்துவிட்டது. பூசை எதற்காகச் செய்கிறான்? ஆண்டவனிடத்திலே தன்னை வழிபடுத்து

வதற்காக அன்றோ! வழிப்படுத்தினானா? அவனுடைய கைகள் வழிப்படுத்தின. மலரை எடுத்து ஆண்டவன்மேல் தான் போட்டன. ஆனால், உள்ளம் எங்கே? பூசையில் மனம் ஒன்றியதா என்ற சந்தேகம் வந்துவிட்டது திருநாவுக்கரசருக்கு. ஐயத்துடன் பார்க்கும்பொது இவனுடைய பூசை எதற்குப் பயன்படும் என்று நினைத்து இதோ பாடுகிறார்.

**"பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு**
**நக்கு நிற்பர் அவர்தமை நாணியே "**

ஒவ்வொருவர் உள்ளத்துள்ளும் இருந்துகொண்டு அவரவர் பூசையை ஏற்றுக்கொள்கிறானே ஆண்டவன் அவனுக்குத் தெரியாதா இந்தப் பூசையினுடைய உண்மைத் தன்மை? ஆகவேதான், நெக்கு நெக்கு உருகி நினைத்தால் இறைவன் பூசையை ஏற்றுக்கொள்ளுவான் என்று பாடுகிறார். அன்பு என்பதை அடியோடு மறந்துவிட்டு ஏதோ ஓர் இலாபத்தைக் கருதி ஒருவன் பூசை செய்கிறான். இப்படிப்பட்ட ஒரு பூசையைக் கண்டு உலகம் ஏமாறலாம். 'என்ன பூசை! என்ன பூசை! அடடா!' ஏன்று ஆச்சரியப்படுகிறார்கள். திருநாவுக்கரசர் ஒரு சிவப்பு விளக்குப்போட்டுக் காட்டு கின்றார். இந்தப் பூசையைக் கண்டு ஏமாந்துவிட வேண்டா! அது அன்பே சிவமான பூசை அன்று. சிவமோ அன்போ அங்கில்லை. மிச்சம் என்ன? பூ இருக்கிறது. கனி இருக்கிறது, தேங்காய், பழம் இருக்கிறது; செய்கின்றவன் இருக்கிறான்; ஆனால் ஆண்டவன்தான் அங்கு இல்லை. அப்படியானால், ஆண்டவன் அங்கு இல்லாமலே போய் விட்டானா என்றால் இருக்கிறான் என்கிறார் நாவுக்கரசர். எங்கே? இறைவனை மறந்துவிட்டு ஆனால் அவன் விக்கிரகத்தின்மேல் மலரை எடுத்துப் போட்டுக் கொண்டிருக்கிறானே அந்தப் பூசைக் காரன் எதிரே ஆண்டவன் இருக்கிறான். இருந்து கொண்டு என்ன செய்கிறானாம்? சிரிக்கின்றானாம்! 'உள்ளுவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்து அறிகின்ற வனாகிய என்னையே நீ ஏமாற்றப் பார்க்கிறாயே!'' என்று

சிரிக்கின்றானாம். பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்கு நிற்கின்றானாம். அன்பில்லாது செய்யப்படுகின்ற பூசையை எவ்வளவு அழகாகத் திருநாவுக்கரசர் பாடுகின்றார்.

"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்
பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு
நக்கு நிற்பர் அவர்தமை நாணியே"

(திருநாவுக்கரசர்தேவாரம், 892)

இனி அடுத்த ஒரு மனநிலையைக் காணவேண்டும். ஏன் அன்பே சிவம் என்று சொல்ல வேண்டும்? கல்வியே சிவம் என்று சொல்லக்கூடாதா? பண்பே சிவம் என்று சொல்லக் கூடாதா? நன்றாகச் சொல்லியிருக்கலாமே. எல்லாம் ஆண்டவனுடைய வடிவம். எல்லாம் அவனுடைய நிலை என்றால், ஏன் அறிவே சிவம் என்று சொல்லக்கூடாது? ஏன் கல்வியே சிவம் என்று சொல்லக்கூடாது? இதற்கும் காரணம் கண்டார்கள் நம்முடைய பெரியவர்கள். உலகத்தில் ஆதி மனிதன் தோன்றினானே அந்தச் சூழ்நிலையிலிருந்து அவனுடைய வளர்ச்சியை இரண்டாகப் பகிர்ந்து விட்டார்கள் ஒன்று அவனுடைய அறிவு வளர்ச்சி; மற்றொன்று அவனுடைய அன்பு (உள்ளம்) வளர்ச்சி. மனிதனைப் பொறுத்த மட்டிலே இரண்டும் மிகமிகத் தேவை. அறிவும் வேண்டும்; அன்பும் வேண்டும். அறிவின்றி வாழ்கின்ற வாழ்க்கையும் வாழ்க்கை ஆகாது. அன்பில்லாமல் வாழ்கின்ற வாழ்க்கையும் வாழ்க்கையாகாது. அப்படியானால் எது மிகுதியாகத் தேவை? மனித உடற் கூற்றை ஆராய்ந்து பார்த்தால்கூட, அந்த உண்மை விளங்கும். 'ஆசிட்' என்று சொல்லப் பெறும் அமில சக்தியும் நம்முடைய உடம்பில் உண்டு. 'ஆல்கலி' என்று சொல்லப்பெறும் காரசக்தியும் நம்முடைய உடம்பில் உண்டு. ஆனாலும், இந்த இரண்டு சக்திகளிலே ஒன்று சிறிது மிகுதியாக இருக்க வேண்டும். அமில சக்தி மிகுதியானால் வயிற்றில் பல வேண்டாத தொல்லைகள் ஏற்படும். இரண்டும் வேண்டும் என்றாலும் கொஞ்சம் அதிகப்படியாக இருக்க வேண்டியது

கார சக்திதான் அதே போல அன்பும் வேண்டும்; அறிவும் வேண்டும். ஆனால், எது மிகுதியாக வேண்டும்? அன்புதான் மிகுதியாக வேண்டும் என்று கண்டு பிடித்தார்கள். மிகப் பழைய காலத்திலேயே நம்முடைய பெரியவர்கள் கண்டு பிடித்த பேருண்மை இது. எப்படித் தெரிகிறது? மிக எளிதாகத் தெரிந்து கொள்ளலாம்.

இப்பொழுது நம்முடைய வாழ்க்கை முறை நடந்து கொண்டு போவதைக் காண்போமேனால், அறிவு உலகமாகிய விஞ்ஞான உலகம் நமக்கு எத்தனையோ நன்மைகளை வழங்கியுள்ளது. நோய் என்று போனால் சகஜமாக இன்று மருத்துவர்கள் பயன்படுத்துகின்ற ஒன்று பென்சிலின். இது போல எத்தனையோ மருந்துகள். பென்சிலின் ஊசி போட்டுக் கொள்கிறவர்கள் யாராவது இதைக்கண்டு பிடித்தவர்யாரென்று நினைத்தது உண்டா இல்லை இங்கே பேசுகின்றதை உலகம் முழுவதும் பரப்புகின்றதே வானொலி, இதைக் கேட்கின்றவர் கள் யாராவது இதைக் கண்டு பிடித்தவர்கள் யார் என்று நினைத்துப் பார்த்ததுண்டா? வேகமாகக் பறந்து செல் கிறார்களே விமானத்தில், அப்படிப் பறக்கும்போது விமானத் தைக் கண்டு பிடித்தவர்கள் யார் என்று நினைக்கிறார்களா? இல்லை. விமானமும், ஒலிபரப்பியும், இந்தப் பென்சிலின் மருந்தும் அறிவின் பயனாக உலகத்தில் தோன்றியவை பிற மக்கள் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். வேண்டா என்று யாரும் சொல்வதே கிடையாது. ஆனால், இதைக் கண்டு பிடித்தவர் யார்? அவருக்கு நன்றி பாராட்ட வேண்டும் என்று ஒரு வினாடி கூட நினைத்தது கிடையாது. அறிவினாலே செய்யப்பட்ட எவ்வளவு சிறந்த பொருள் இருந்தாலும், உலகம் அதனைப் பயன்படுத்திக் கொண்டதே தவிர அதற்கப்பால் சென்று அதற்கு நன்றி பாராட்டவே யில்லை.

ஆனால், இன்னும் சிலர் இத்தகைய உபகாரங்கட்கு நேர்மாறானவற்றையே செய்தார்கள். மாதத்தில் முப்பது நாள் என்றால் 25 நாள் பட்டினி கிட என்று சொன்னார்கள்,

என்னிடம் 2 சட்டைகளே இருக்கின்றன என்றால், மற்றவர் கேட்டால் ஒருசட்டையைக் கொடுத்துவிடு என்று சொன்னார் ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைத் திருப்பிக் காட்டு என்று சொன்னார் ஒருவர். பிறருடைய துன்பத்தைக் கண்டு அதனைப் போக்க முயலாமல் இருக்கக் கூடாது என்கிறார்கள் சிலர். 'பெரியவர் தம் நோய் போல் பிறர்நோய் கண்டு உள்ளம் எரியின் இழுதாவர்'' என்று சொன்னார் ஒருவர். இதில் ஏதாவது நன்மை உண்டா? நம்மிடம் உள்ள உணவு நமக்குக் கூடப் பற்றவில்லையென்றாலும் அடுத்தவனுக்குக் கொடுத்துவிடு என்று சொன்னவர்கள், நமக்கு நன்மையா சொன்னார்கள்? இல்லையே? நம்முடைய நோயைப் போக்க மருந்து கண்டு பிடித்தவர்களை மறந்து விட்டோம். ஆனால், இப்படி நமக்கு வேண்டாதவற்றைச் சொன்னார்களே இவர்களைத் தவறாமல் நினைவு வைத்துக் கொண்டிருக்கிறது உலகம்! இது என்ன புதுமை? நமக்கிருக்கிற இரண்டு சட்டையைக் கொடுத்துவிட்டால் நமக்கென்ன நன்மை? நம்முடைய சாப்பாட்டை எதிரில் இருக்கிறவனுக்குக் கொடுத்து விட்டால் நமக்கென்ன நன்மை? நம்முடைய கன்னத்தில் அறைபவருக்கு அடுத்த கன்னத்தைத் திருப்பிக் காட்டினால் நமக்கு என்ன நன்மை? ஒரு நன்மையும் இல்லை. அப்படியிருந்தும் இதைப் பெரிதாக நினைத்து உபதேசம் செய்தார்களே அந்தப் பெரியவர்களை உலகம் மறக்கவேயில்லை உலகத்திலே நன்றாக வாழ்வதற்கு இவர்கள் நமக்கு வழி வகுத்துக் கொடுத்தார்களா? இல்லை! இவர்களுள் ஊசி மருந்து கண்டுபிடித்துக் கொடுத்தவர் உண்டா? இல்லை, வேகமாக ஊருக்குப் போவதற்கு வழி வகுத்துக் கொடுத்தவர் உண்டா? ஒன்றுமில்லையே. பயன்படக் கூடிய காரியங்களைச் சொன்னவர்களையெல்லாம் மறந்து விட்டோம். இப்படிப் பயன்படாத உபதேசங்களைச் சொன்னவர்களையெல்லாம் நினைவு வைத்துக்கொண்டிருக்கிறோமே என்ன காரணம்? அதுதான் அடிப்படை.

அறிவின் பயனாகக் கண்ட பேருண்மைகளை எல்லாம் உலகத்தார் விடாமல் பயன்படுத்திக் கொண்டார்களே தவிர, அதற்கப்பால் சென்று அவற்றைக் கண்டுபிடித்து நமக்களித் தவர்கட்கு நன்றி பாராட்டவில்லை. இதன் எதிராகப் பெரியோர்கள் கூறிய வழிகளைக் கடைப்பிடிக்க நம்மால் இயலவில்லை என்றாலும், கடைப்பிடிக்க முயன்று ஓரளவு தோற்றுவிட்டாலும் அவர்கள் செய்த உபதேசங்களையும் அவர்களையும் மறப்பதே கிடையாது இந்தப் பகுப்பில் வந்தவர்களெல்லாம் அன்பின் வழியினாலே உண்மையைக் கண்டவர்கள். அறிவின் வழியிலே சென்று மெய்ம்மை கண்டவர்களை உலகம் மறந்துவிட்டாலும், அன்பின் வழியிலே சென்று உண்மையைக் கண்டவர்களை மறக்கவே இல்லை. ஏன்? மனித இனத்துக்கு உண்மையான நன்மையை நிலைத்த நன்மையைச் செய்தது எது என்று ஆராய்ந்து பார்த்தார்கள் நம்முடைய பெரியவர்கள். மருந்து இல்லாவிடின் இறப்பு உறுதி என்றாலும் கவலையில்லை என்றார்கள். இந்த மருந்து நேற்றுதான் கண்டுபிடிக்கப்பட்டது; ஆனால் அதற்கு முதல் நாள் மனிதன் வாழ்ந்தானா, வாழவில்லையா? 100 வருடங்களுக்கு முன் வாழ்ந்தானா, வாழவில்லை? வாழ்ந்து கொண்டுதானே இருந்தான். இனி, நாளையும் வாழத்தான் போகிறான். மணிக்கு 1500 மைல் வேகத்தில் இன்று செல் கிறோம். போக்குவரத்துச் சாதனமே இல்லாத காலத்தில் மனிதன் வாழ்ந்தானா வாழவில்லையா? வாழ்ந்து கொண்டு தான் இருந்தான். இன்னும் சொல்லப் போனால் ஓரளவு அமைதியோடு கூட வாழ்ந்தான். இவ்வளவு வேகமாகப் போகின்ற காலத்தில், இன்றைய மனிதன் வேகமாகப் போகின்ற சக்தியைப் பெற்றானே தவிர, அமைதியை இழந்து விட்டான். ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தார்கள் நம்முடைய பெரியவர்கள். எது தேவை? அறிவின் துணைக்கொண்டு கருவி செய்து இவ்வளவு வேகமாகப்போவது தேவையா? என்று. இரண்டாலும் தவறில்லை. சந்தர்ப்பம் வந்தால் அறிவின் பயனாகிய கருவிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம்;

அதனால் தவறில்லை. ஆனால், இந்தக் கருவிக்காகத் தன்னையே முழுவதுமாகத் தியாகம் பண்ணத் தேவையில்லை. அறிவினாலே வாழ வழி கண்டுபிடித்த இவர்களைக் காட்டிலும், அன்பினாலே வாழ வழி கண்டுபிடித்தவர்களைத் தான் பெரியதாகப் போற்றியது உலகம். உலகத்திலுள்ள நீதி நூல்களை எல்லாம் கற்றுப் பார்த்தார்கள் நம்மவர்கள். நீதி நூல்கள் கைகாட்டி மரங்கள். இன்ன இடத்திற்குப் போவதற்கு இது வழி என்று காட்டுமே, தவிர, அதற்கடியிலேயே போய் உட்கார்ந்து கொண்டால் போக வேண்டிய இடத்திற்குக் கொண்டு சென்றுவிடுமா?

வேதம், திருக்குறள் முதலான நீதி நூல்கள் அனைத்தையும் உள்ளடக்கி, ''வேதம் ஓதில் என்? வேள்விகள் செய்கில் என்?'' என்று திருநாவுக்கரசர் பாடுகிறார். இவையெல்லாம் கருவிகளே தவிர, மனத்தைக்கொண்டு செலுத்தக் கூடியவை அல்ல. அப்படியானால், இவற்றைக் கற்க வேண்டாவா? கற்கத்தான் வேண்டும்; ஆனால், அடிப்படையை மறந்து விடக்கூடாது. கைகாட்டி என்ன சொல்கிறது? 'இதன் வழியாக நீ போ' என்று சொல்கிறது அதை விட்டுவிட்டு 'மரமே பெரிது. அதில் எழுதியிருக்கிற செங்கல்பட்டு என்ற பெயரே பெரிது' என்று அதனடியில் உட்கார்ந்து கொண்டால் ஒரு நாளும் செங்கல்பட்டு போய்ச் சேரமாட்டார். அதுபோல, வேதம் கற்பதும், வேள்விகள் செய்வதும் உன்னைக் கொண்டு செலுத்துகிற வழிகள். அந்த வழிகளிலே நீ செல்லவேண்டும். ஆனால், அதனை மாத்திரம் கற்றுக்கொண்டிருப்பதில் ஒரு பயனுமில்லை என்பதைச் சொல்ல வந்தவர்கள் மேலே அழகாகப் பாடினார்கள். அடிப்படையை மறந்துவிட்டு நீ வேதங் கற்பதனாலும் வேள்விக் கிரியைகளைச் செய்வதனாலும் பயன் விளையாது. உள்ளத்தில் அன்பு இருந்து, மேலே கூறியவற்றை ஒருவேளை நீ செய்யவில்லை என்றாலும்கூடக் கவலையில்லை. ஆனால் அன்பு இல்லாமல் நீ இவை அனைத்தையும் செய்தாலும் பயன் இல்லை என்ற கருத்துப்பட,

''வேதம் ஓதில் என் வேள்விகள் செய்யில் என்
நீதி நூல் பல நித்தம் பயிற்றில் என்
ஓதி அங்கம் ஓர் ஆறும் உணரில் என்
ஈசனை உள்கு வார்க்கு அன்றி இல்லைகே"

"நன்று நோற்கில்என் பட்டினி யாகில் என்
குன்றம் ஏறி இருந்தவம் செய்யில் என்
சென்று நீரில் குளித்துத் திரியில் என்
ஒன்றும் ஈசன் என் பார்க்கு அன்றி இல்லையே"

''கோடி தீர்த்தம் கலந்து குளித்து அவை
ஆடி னாலும் அரனுக்கு அன்பு இல்லையேல்
ஓடும் நீரினை ஓட்டைக் குடத்து அட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோடு ஒக்குமே''

கோடி தீர்த்தம் குளித்து அவை ஆடினாலும் அரனுக்கு அன்பு இல்லையேல் என்ற சொல்லைப் பயன்படுத்துவதனாலே இவ்வளவையும் பயனற்றதாக ஆக்குகிறார் திருநாவுக்கரசர். இனி, இதே கருத்தைப் பிற்காலத்தில் வந்த ஒரு புலவர் அழகாகப் பாடுகிறார். ''பாசவதைப் பரணி'' என்ற நூலில் இன்னும் கொஞ்சம் சுவைப்படுத்தி இதைக் கூறுகின்றார். ஒருவன் வழிபாடு அதாவது பூசை செய்ய வேண்டுமென்று நினைத்தான். ஏழ் கடல்களிலுள்ள தீர்த்தத்தை யெல்லாம் கொண்டு வந்து சேர்த்தான். சங்கல்பம் சொல்லும்போது சொல்லுகிறோமே, கங்கை முதலிய அத்தனை ஆறுகளிலே கிடைக்கின்ற தீர்த்தங்கள் அத்தனையும் கொண்டுவந்து சேர்த்தான். அவற்றை இறைவிக்கு அபிஷேகம் செய்தான். இறைவியின் மனம் குளிரவில்லையாம்! அன்பன் மனம் நொந்துவிட்டான். 'இவ்வளவையும் செய்தேனே! பெருமாட்டி, ஏற்றுக்கொள்ள உனக்கு மனமில்லையா?' என்று வருந்தி இரண்டு சொட்டுக் கண்ணீர்விட்டான். இறைவி மனங் குளிர்ந்துவிட்டாளாம்.

"என்பாவம் ஆறு, கடல் ஏழிருந்தும் என் அம்மை
அன்பாளர் கண் அருவி ஆடுவது திருவுள்ளம்"

என்று அழகாகப் பாடினார். ஏழு கடல், எத்தனை ஆறுகள் உண்டோ அத்தனை ஆறுகளிலிருந்தும் தீர்த்தங்கள் கொண்டு வந்தான்: ஆட்டினான் ஆண்டவனுக்கு. ஆண்டவன் இரங்கவில்லை; ஏன்? ஆண்டவனே படைத்த அந்த ஆறுகளிலிருந்தும், அவன் படைத்த அந்தக் கடல்களி லிருந்தும் நீரைக்கொண்டு வந்து அவனுக்கு வழிபாடு செய்வ திலே அவன் மகிழ்ச்சி அடையவில்லை. அப்படியானால், அவன் எதில் உண்மையான மகிழ்ச்சி அடைகிறான்? அவன் கொடுத்த விதையாகிய அன்பை இவன் நல்ல முறையிலே பயன்படுத்தினானான் என்பதற்கு அடையாளம் பக்தனின் கண்ணில் வரும் கண்ணீராகும் ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும் என்று சொல்லுகிறாரே வள்ளுவர், அந்தப் புன்கணீர் தான். அன்புக்கு அடைக்கும் தாழ் இல்லை; ஆகவே, சொட்டுக் கண்ணீராகவே அந்த அன்பு வெளிப்படுகிறது அந்தச் சொட்டுக் கண்ணீரைக் கண்டவுடனே ஆண்டவன், இத்தனைக் குடங்குடமான தீர்த்தங்களிலேயும் மகிழ்ச்சி அடையாத அந்த ஆண்டவன், இந்த இரண்டு சொட்டுக் கண்ணீராகிய உப்புத் தண்ணீருக்கு இரங்கிவிடுகின்றான். இதில் மற்றும் ஒரு பொருள் சிறப்பும் உண்டு. உண்மையாக ஒருவர் கொடுத்ததை நல்ல முறையில் வைத்துக் கொண்டு வாழ்ந்தால் கொடுத்தவருக்கு மகிழ்ச்சிதானே ஏற்படும். தானே கொடுத்த பொருளைத் திருப்பித் தன்னிடத்திலே கொண்டு வந்து தருவதைக் காட்டிலும், தான் கொடுத்த மூலதனத்தை வைத்துக்கொண்டு மைந்தன் பெருக்கினான் என்றால், பெற்றோர்களுக்கு மகிழ்ச்சி ஏற்படுவது இயற்கை தானே! அதே முறையிலே அன்பாகிய சின்ன விதையைக் கொடுத்தோமே, அந்த அன்பு என்ற விதையை இவன் வளர்த்துப் பெருக்கிப் பிறர் நலம் என்ற மரமாக ஆக்கினானா?

இல்லை, தன்னலத்தைப் பெருக்குவதன் மூலம் அந்த விதையையே இவன் தின்று வாழ்ந்து கொண்டிருக்கிறானா என்று ஆண்டவன் பார்த்துக்கொண்டேயிருக்கிறான். இவன் அந்த விதையைப் பெரிதாக ஆக்கிவிட்டான் என்றால் அதனை அறியும் அடையாளம் என்ன? அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகுகின்றது, அதைக் கண்டதும் மகிழ்ச்சியடைகிறான் இறைவன் என்ற கருத்தைத் தான், "என்பாவம் ஆறு கடல் ஏழிருந்தும் அவற்றிலே எல்லாம் அபிஷேகம் கொள்ளப் பெருமாட்டி திருவுளம் கொண்டதில்லை. ஆனால், அன்பாளருடைய கண் அருவி இருக்கிறதே அதிலே குளிக்க விரும்புகிறாள்" என்று இவ்வளவு அழகாக அந்தப் பாசவதைப் பரணிப் பாடல் எடுத்துக் கூறுகின்றது. இந்த அன்பு எப்படி எப்படி எல்லாம் வெளிப்படுகிறது?

மனிதர்க்கு எது இன்றியமையாதது என்ற வினாவை யெழுப்பி, அன்பு ஒன்றுதான் என்று வள்ளுவர் கூறுகிறார். அன்பு இல்லையானால், மனிதன் வாழ்ந்தவனாகவே கருதப் பட மாட்டான். அன்பில்லாதவனுடைய மனத்திலே எதுவும் வளர முடியாது என்பதைச் சமயம் வரும்போது வள்ளுவர் இடித்துக் கூடச் சொல்லுவார். ஏன், வைதுகூடச் சொல்லுவார். 'வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று' என்று சொல்கிறார். அன்பில்லாதவனுக்கு வாழ்வே இல்லை என்பதை இதைவிட அழுத்தமாக வேறு யாரும் சொல்ல முடியாது என்பதை அறிந்துகொள்கிறோம். இத்துணைச் சிறந்த அன்பைப் பெற்றுவிட்டான் ஒருவன் என்று வைத்துக் கொள்வோம் அதற்கு மேலே அது எப்படு விரிகின்றது? கண்ணுக்குத் தெரியாத சிறிய ஆல விதை வளர்ந்து ஒரு பெரிய முடிமன்னன் படையுடன் வந்து தங்கியிருக்கப் பெரு நிழலைத்தந்திருத்தல்போல, இவனிடத்திலே முன்னர்க் கொடுக்கப்பட்ட அந்த அன்பு என்ற சிறு விதை விரிந்து விரிந்து மற்றொரு மூன்றெழுத்துப் பொருளாக பரிணமிக் கிறது. அன்பு என்ற சொல்லும் மூன்று எழுத்துக்களை

உடையதுதான். அதன் வளர்ச்சியாக உள்ளதும் மூன்று எழுத்துக்களை உடையதுதான். 'அன்பு' என்ற சொல் விரியுமேயானால், அது 'அருள்' என்ற சொல்லாக வளர்கிறது. இரண்டுக்கும் வேறுபாடு கண்டார்கள் நம்மவர்கள். அன்பு பழுத்தால் சிவமாயிற்று என்று சொன்னாரே திருமூலர். அந்தச் சிவத்திற்கு வேறொரு பெயரும் கொடுத்தார்கள். அன்பு பழுத்தால் சிவமாயிற்று என்றால் சிவத்தை வேறு என்ன என்று சொல்லலாம்? அருள் என்றும் சொல்லலாம். ஆகவே, அன்பு என்ற ஒன்று எவ்வாறு விரிந்து விரிந்து அருளாகும் என்று ஆராயவேண்டும் "என்னில் யாரும் எனக்கு இனியார் இல்லை" என்று பாடுகிறார் நாவுக்கரசர். பார்க்கப்போனால் உலகத்தில் யார்மேல் நமக்கு அதிக அன்பு இருக்கிறது? ஆராய்ந்து ஆராய்ந்து பார்த்தால் முடிவு ஏது? நம் பேரில் நமக்கிருக்கிற அன்புதான் உண்மை. ஆனாலும், இதற்கு மேலும் ஏதாவது உண்டா என்று கேட்டால், "என்னிலும் இனியான் ஒருவன் உளன்" என்னைவிட என்னால் அன்பு செய்யப்படும் பொருள் ஒன்று இருக்கிறது. அது எது? "என்னுள்ளே உயிர்ப்பாய் புறம் போந்து புக்கு என்னுள்ளே நிற்கும் இன்னம்பர் ஈசனே" என்று சொல்லும் பொழுதுதான் இந்த அன்பு விரிந்து அருள் ஆவதற்கு முதற் படியினைக் காண்கிறோம்.

விவரம் அறியாக் குழந்தையாக இருக்கும்பொழுது காணப்படும் தன்னைத் தவிரப் பிறிதொன்றையும் ஏற்றுக் கொள்ளாத தன்னலம், ஏறத்தாழக் கடைசி வரையிலே வளர்ச்சிபெறாமல் இருந்துவிடுபவர்களும் உண்டு. ஆனால், அது விரிந்து புத்த தேவனைப்போல உலகம் முழுவதும் பரிபாலிக்கின்ற சூழ்நிலையில் அருளாக மாறுகின்றதும் உண்டு. அப்படி அருளாக மாறுகின்ற சூழ்நிலை எல்லோருக்கும் கிடைப்பதில்லை. ஒரு சிலருக்குத்தான் கிடைக்கிறது. அப்படி ஒரு சிலருக்குக் கிடைக்கும்பொழுது அது எவ்வாறெல்லாம் வேலை செய்கின்றது என்பதை நம்முடைய வள்ளலார்

அழகாகக் காட்டுவார். அன்பு எல்லைமீறி அருளாக ஆகிவிடுமேயானால், அப்பொழுது என்ன நிலையைக் காண்கின்றோம் நாம்? மனித மனம் பக்குவப்பட்ட அந்த நிலையிலே மேன்மைபெற்ற அந்த நிலையிலே, பொருள்கள் வழங்கும் காட்சியே மாறிவிடுகிறது. அங்கே இவன் காணுகின்ற காட்சிக்கும், அன்பு இல்லாதவன் காணுகின்ற காட்சிக்கும் உள்ள வேறுபாட்டைக் காண்கின்றோம்.

மற்றவர்கள் காணுகின்ற காட்சிக்கும் அன்புள்ளவன் காணுகின்ற காட்சிக்கும் என்ன வேறுபாடு காணப்பெறும் என்பதை இராமகிருஷ்ண பரம ஹம்ஸர் அழகாகச் சொல்கிறார். அன்புடையவன் எல்லாவற்றையும் ஆண்டவனாகக் காணுகின்றான். அன்புடையவன் காணும்போது எல்லாம் ஆண்டவன் வடிவமாகவே காணுகின்ற காரணத்தால் வேறு பிரித்து என்ணுவதற்கே வேலையில்லாமல் போய்விட்டது. எல்லாம் ஆண்டவன் என்றால், பிறகு இரண்டாவது என்று எண்ணுவதற்குப் பொருள் இல்லையன்றோ? அன்பு இல்லாதவன் காணுகின்ற காட்சி எப்படித் தொடங்குகிறது? நான் என்று தொடங்குகிறது. நான் என்ற அந்த அகங்காரம் வந்துவிடுமேயானால், அடுத்தவன், அடுத்தது என்று விரிந்து சென்று கொண்டேயிருக்கும். உலகம் முழுவதிலும் வேறுபட்ட பொருள்களாகக் காட்சி தரும். எத்தனை எத்தனை பொருள்கள்! தாயுமானவர் அதனைக் கண்டு அஞ்சினார், "அருளால் எதையும் பார் என்றான்! அதனை அறியாது சுட்டி என் அறிவாலே பார்த்தேன். இருளான பொருளன்றிக் கண்ட என்னையும் கண்டிலேன். என்னடி தோழி' என்று பாடுகிறார். குருவாக வந்தவன், சொன்னான்: "அப்பா உலகத்தைப் பார்க்கின்ற பார்வை அருள் பார்வையாக இருக்கவேண்டும். அருளாகிய கண்களால் பார்த்துவிட்டால் உலகத்தில் தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றுமில்லை. 'அவன் அருளையே கண்ணாகக் கொண்டு பார்' என்று சொன்னான். நான் அதனைக் கவனிக்காது என் அறிவாலே சுட்டிப் பார்க்கத் தொடங்கினேன். என் அறிவாலே

சுட்டிப் பார்த்தவுடன் என்ன நடந்தது தெரியுமா? ஒவ்வொரு பொருளாக எண்ணிக்கொண்டே போனேன். முதலாவதாக நான் என்று எண்ணிய பிறகு எதிரே இருந்த பொருளை இரண்டு என்றேன். மூன்றாவதை எண்ணினேன். நான்காவது என்று எண்ணினேன். எண்ணிக்கொண்டே போய்க் கடைசியிலே கோடி கோடியாக விரிந்த அந்த எண்ணிக்கையிலே நானும் அமிழ்ந்து விட்டேன். இருளான பொருளன்றி காணத் தொடங்கிய என்னையும் கண்டிலேன் என்று சொல்லுகின்ற முறையிலே, அந்த அன்புப் பார்வைக்கும் அன்பு இல்லாத பார்வைக்கும் வேறுபாட்டைக் கூறுகிறார்.

அன்புப் பார்வையினாலே பெரியோர்கள் பார்க்கின்றார்கள் உலகத்தை. அப்படிப் பார்த்ததிலே இரண்டு பேர்கள் அந்த அனுபவத்தை வெளியிடுகின்றார்கள். முதலாவது அனுபவத்தை நமது வள்ளலார் பாடுகின்றார் !

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்று எழும் கண்ணீர்
அதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே
நல்நிதியே ஞான
நடத்தரசே என் உரிமை
நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம்
வம்மின்உல கியலீர்
மரணம் இலாப் பெரு வாழ்வில்
வாழ்ந்திடலாம் கண்டீர்
புனைந்துரையேன் பொய் புகலேன்
சத்தியஞ் சொல்லுகின்றேன்
பொற்சபையில் சிற்சபையில்
புகுந்தருணம் இதுவே,

அன்புடையவர்கள் காணுகின்ற காட்சி இந்தப் பாடலிலே விரிவாகப் பேசப்படுவதைக் காணுகின்றோம். 'அருளமுதே நன்றியே' என்று ஆண்டவனைக் காணுகின்ற காட்சி உண்மையான அன்பின் அடிப்படையிலே வாழ்வு தொடங்கப்பட்டால் இறுதியிலே இந்தக் காட்சி கிடைக்கும். அருள் அமுதாக என்றைக்கு ஆண்டவன் காட்சி தருகின்றானோ அன்று அந்த வாழ்கை உண்மையான அன்பின் அடிப்படையிலே தொடங்கப்பட்டது என்பது நன்றாக விளங்கும். ஆண்டவனைப்பற்றி அருளமுதே என்று பாடியதைக் கேட்கவும் ஓர் ஐயம் எழுகிறது. பல சமயங்களில் நாம் பாடுகின்ற பாட்டின் தொல்லை மிகுதியால் ஆண்டவன் பேரிலேயே ஐயமுறத் தொடங்கி விடுகிறோம். ஆண்டவன் ஒருவன் இருக்கிறானா என்று கேள்வி கேட்கிற அளவுடன் அந்த ஐயம் நிற்பதில்லையே! சில சமயங்களிலே நம்மில் சிலர் பிடிமண்ணை அள்ளி அவன் தலையிலே போடலாம் என்று கூடப்போடத் தொடங்கிவிடுகிறோமே! உண்மையாக ஆண்டவன் அருள் அமுதாக இருப்பனேயானால், அவன் நமக்கு வகுத்தது அன்பு வழியாக இருக்குமேயானால், இந்த அன்பின் வழியாகத்தான் தன்னை அடையலாம் என்று அவன் வகுத்தது உண்மையானால், ஏன் இப்படிப்பட்ட துன்பங்கள் உலகத்தில் தோன்றுகின்றன என்ற ஐயம் பிறக்கிறது.

உலகத்திலே ஆண்டவன்தான் எல்லாமே என்று அவனையே சரணம் அடைந்த அன்பர்கள், அன்புவழியிலே அப்படியே மூழ்கிவிட்டவர்கள் இருக்கின்றார்களே, அவர்களுக்குக் கிடைக்கின்ற பரிசு என்ன தெரியுமா? துன்பத்தின் மேல் துன்பம்; அடி மேல் அடி. "நினைந்து உருகும் அடியாரை நையவைத்தார்" என்று திருநாவுக்கரசர் கூறுவார். தொண்டு கிழவராகிய திருநாவுக்கரசருக்குக் கூட அந்தச் சந்தேகம் வந்துவிட்டது. யாருக்கய்யா துன்பம் உலகத்திலே? நினைந்து உருகும் அடியார்கட்கு. அன்பு வழிதான் சிவனிடத்திலே கொண்டு சேர்க்கிறது

என்று நம்பி, அந்த அன்பு வழியிலேயே போனவர்களுக்குக் கிடைத்த பரிசில் யாது? நைதல்; அதாவது பட்டுப் பட்டுத் துன்பம் தாங்காது வருந்துதல்தான் கிடைக்கின்ற பயன். அட, கிழவனாருக்குத்தான் இந்தச் சந்தேகம் வந்தது. இளைஞனாக இருந்திருந்தால் இந்தக் கேள்வி கேட்டிருக்க மாட்டார் என்று நினைத்தால், மிகவும் இளங் குழந்தையாகிய நம்மாழ்வாருக்கும் இந்தக் காட்சிப் பொறுக்க முடியவில்லை. இது என்ன உலகியற்கை என்று கேட்கின்றார் அவர். உன்னையே சரண் என்று வந்து அடைந்தவர்கள் இருக்கின் றார்களே, அவர்கள் அம்மியில் வைத்து அரைப்பது போன்ற அந்தப் பொறுக்கமுடியாத துன்பத்தைப் பெறுகிறார்கள். இது என்ன உலகியற்கை? என்ற பொருளில் ''நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்து ஏங்க என் ஆறாத் துயர் விளைக்கும் இவை என்ன உலகியற்கை?'' என்று பாடுகிறார். அப்படியானால் அன்பு வழியிலேயே சந்தேகம் வந்து விட்டதா அவர்கள் இருவர்க்கும்; நம் காலத்தில் வாழ்ந்த கவியரசர் பாரதியும் கண்ணன் பாடலில்

**"நல்வழி நடப்பவரைச் சற்று மனம்**
**நையும்வரை சோதனைசெய் நடத்தையுண்டு"**

என்று பாடுகிறார்.

அன்பு வழியிலே சென்றால் இதுதான் பயன் என்றால், அப்பப்பா வேண்டா அந்த அன்பு வழி என்றுகூடத் தோன்றும் சில சமயங்களிலே. அப்படி அச்சம் வரும் பொழுதுதான் பெரியவர்களுடைய வாழ்க்கை நமக்குப் பாடமாகிறது. நாம் படுகின்ற துன்பமெல்லாம் ஒரு துன்பமா? சிலுவையிலே வைத்து ஆணி அடிக்கின்ற துன்பத்தோடு ஒப்பு நோக்கினால், நமக்கு வந்த வயிற்றுவலி பிரமாதம் ஒன்றுமில்லை. தன்னுடைய பிள்ளையையே தான் அறுத்துக் கறி சமைத்துப் போடுகின்ற துன்பத்தை நோக்கினால், நம் வீட்டிலேயே 80 வயது இருந்து இறந்து போனவர்களைப் பற்றிப் படும் துன்பம் பெரிதன்று, [illegible]கைய பாடங்களை

அந்தப் பெரியவர்களுடைய வாழ்க்கையிலிருந்து நாம் கற்றுக்கொள்ளுகிறோம். உண்மையாக ஆண்டவன் அருள் உள்ளம் படைத்தவன் என்றால், ஏன் இப்படித் துன்பத்தைப் படைக்கவேண்டும்? அதையும் நம்மவர்கள் ஆய்ந்து அதன் காரணத்தையும் கண்டுபிடித்தார்கள். அதுதான் அன்பி னுடைய அடிப்படை என்றார்கள்,

''அறத்திற்கே அன்பு சார்பு என்ப அறியார், மறத்திற்கும் அஃதே துணை''—இந்தக் குறளுக்குப் பலர் பலவாறு பொருள் சொல்லுவார்கள் எனினும், இப்படியும் ஒரு பொருள் செய்யலாம்: மறத்திற்கும் அஃதே துணை என்றாரே, அதைத்தான் நம்மவர்கள் கண்ட பேருண்மை என்று சொல்ல வேண்டும். மருத்துவர் அறுக்கிறார். சின்னக் கத்தியில் கீறிவிட்டால்கூடப் பெருத்த குற்றமாகக் கருதுகின்ற இந்த நாட்டிலே பெரிய கத்தியினாலே வயிற்றைக் கிழித்துவிடு கின்றாரே, அவருக்கு எத்துணை மதிப்புத் தருகின்றோம். ஆயிரக்கணக்கான ரூபாய்களைக் கொட்டிக் கொடுத்து, வீழ்ந்து வணங்கி, உங்களால் எனக்கு உயிர் வந்தது என்று சொல்லுகிறோமே, அதனுடைய அடிப்படை என்ன? அறுக்கின்றதாகிய செயல் பெரிது என்றால் அவருக்குப் பெரிய தண்டனையல்லவா கொடுக்கவேண்டும்? இதைத்தான் தொடக்கத்தில் கண்டோம். செய்கின்ற செயலை வைத்து நம்மவர்கள் எதனையும் பெரிதாகக் கருதவில்லை. செயலின் பின்னே இருக்கின்ற மனோநிலை என்ன என்று கண்டார்கள். மருத்துவர் அறுக்கும்பொழுது என்ன கருத்தோடு அறுக்கின்றார்? நம்மை வாழவைக்க வேண்டுமென்ற கருத்தோடுதான். அந்த அடிப்படையைத்தான் இங்கே காணுகின்றோம்.

ஆண்டவன் பல சமயங்களிலே துன்பத்தைத் தருகிறான். நினைந்து உருகும் அடியவரை நைய வைக்கின்றான். எண்ணற்ற துயரத்தைத் தருகின்றான். ஏன்? நம்மை வாழ

வைப்பதற்காகத்தான். செம்பு இருக்கிறது. அதில் ஓரளவு பொன் கலந்தால் அதற்கு என்ன கிடைக்கிறது, தெரியுமா? அக்கினி திராவகத்தில் போட்டு விடுவார்கள்; ஏன் அந்தச் செம்பிலிருந்து பொன்னைப் பிரிப்பதற்காகத்தான். வெறுஞ் செம்பாக மட்டுமே இருந்துவிட்டால் யார் கவலைப்படப் போகிறார்கள்? அதுபோல், உய்நதி அடையக்கூடிய தகுதி ஒரு சிறிதாவது, திருந்தும் இயல்பு சிறிதாவது நம்மிடத்திலே இருக்குமேயானால், அறத்தினாலேயோ மறத்தினாலேயோ, துன்பத்தைத் தந்தோ ஆண்டவன் நம்மை ஆட்கொள்ளத் தவிக்கின்றான், திருந்துவதற்கு வழியே இல்லை என்றால், அதைப்பற்றி அவன் கவலைப்படுவதேயில்லை. இன்னும் எத்தனையோ பிறவிகள் இருக்கின்றன உனக்கு; ஆதலின் சாவதானமாக வந்து சேர்க என்று போய்விடுகின்றான். இத்தகையவர்கட்கு வாழ்க்கையிலே எவ்விதமான வளக் குறைவும் இல்லை; நலமாக இருக்கின்றார்கள். துன்பம் அவர்களை அண்டுவதுமில்லை.

ஆனால் துன்பத்தின்மேல் துன்பம் யாருக்கு வருகிறது? அவனை நம்புகிறவனுக்குத்தான் மேலும் மேலும் வருகிறது; ஏன்? அந்தத் திராவகத்தில் போடுகின்ற சோதனையிலே முன்னேறி வரவரத்தான், துன்பம் உழக்க உழக்கத்தான் சுடச்சுட ஒளிவிடுகின்ற பொன்னைப்போல் புனிதத்தன்மை அடைகிறான். ஆகவே, ஆண்டவன் கருணை துன்பத்தைக் கூடத்தருமா? உறுதியாகத் தரும். யார் இல்லை என்று சொல்ல முடியும்? குழந்தையைக் காலிலே போட்டு, இரண்டு கையையும் பிடித்துக்கொள்ளச் சொல்லித் தாய் மருந்து ஊற்றுகிறாளே! அந்தக் குழந்தை ஐயோ என் தாய்க்கு அன்பில்லை' என்று சொன்னால், அது பொருந்துமா? 'வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால் மாளாத காதல் நோயாளன்போல்'' துன்பந் தந்தாலும் இறைவனிடப் பக்தி குறையாது என்று என்றைக்கோ அந்த அனுபவத்தை ஆழ்வார் பேசுகின்றார். மருத்துவன் செய்ததெல்லாம் என்ன? கத்தியினாலே அறுத்தான்; நெருப்பினாலே

சுட்டான். பொறுக்கக்கூடிய துன்பமா? ஆனால், அவன் மாட்டு அன்பு குறையவில்லையே. அதுபோல, ஆண்டவனே, நீ எனக்குத் தருகின்ற துன்பங்கள் எல்லாம் எதனால் வந்தவை? அருளினால் வந்தவை. என்னை வாழவைக்க வேண்டுமென்று நீ கொண்டிருக்கிற அந்த அருள் காரணமாக எனக்கு இத் துன்பத்தைத் தந்தாய்' என்று ஆழ்வார் பேசும்பொழுது பெரிய பேருண்மையை உணர்ந்துகொள்கிறோம் நாம். உலகத்திலே இந்த ஒன்றைத் தவிர வேறு வழியே இல்லை. பல சமயங்களிலே துன்பம்போலக் காட்சி அளித்தாலும், ஆண்டவன் அருளே வடிவானவனாகலின் எனக்கு இத்தகைய துன்பத்தைத் தருகிறான் என்று நம்மையு மறியாமல் ஏற்றுக்கொள்கிறோம். என்னை வாழவைப்பதற் காக அவன் கைக்கொள்கின்ற பல்வேறு கருவிகளில் இந்தத் துன்பமும் ஒன்று என்று நினைக்கும்பொழுது மனம் அமைதியடைகிறது. பெரியோர்களுடைய வாழ்க்கையைப் பார்க்கும் பொழுது அவர்கள் எல்லாம் அனுபவித்த துன்பத்தை நம் துன்பத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, நம்மையும் அறியாமல் மனம் அமைதி அடைகிறது. அப்படி அமைதி அடையுமேயானால், மேலும் நம்மை அந்த அன்பு வழியிலேயே செல்லத் தூண்டுகிறது.

அன்பு வழியிலே சென்றவர்கள் இரண்டொருவர்களுடைய வாழ்க்கை நமக்குப் பெரியதோர் அனுபவமாகக் காட்சியளிக்கின்றது. கண்ணப்பரைப் பற்றிப் பாடி வருகின்றார் சேக்கிழார். காளத்தி மலையின் மேலே இருவர் ஏறிப் போனார்கள். கண்ணப்பரும், நாணன் என்பவனும் போனார்கள். சிவகோசரியார் என்ற அந்தணர் அம் மலையிலுள்ள இறைவனைத் தினமும் பூசை செய்கின்றார். ஆனால் நாணனும் சிவகோசரியும் கண்டது என்ன அங்கே? விக்கிரகம்; சிலை. ஆனால் கண்ணப்பர் செல்கிறார். அவர் கண்டது என்ன? விக்கிரமும் அன்று சிலையும் அன்று. "மலையிடை எனக்கு வாய்த்த மரகத மணியே" என்று போற்றுகின்றார். அந்த அளவோடு நிற்கவில்லை. அந்த

அன்பு இந் நிலையிலே என்ன ஆகிறது? கண்ணப்பருக்கும் அந்தப் பொருளுக்கும் வேறுபாடற்ற அத்வைத நிலை என்று சொல்லுகிறார்களே, அந்த நிலையை உண்டாக்குகிறது. கண்ணப்பருக்குப் பசிக்கிறது; ஆண்டவனுக்கும் பசிக்கும் என்று நினைக்கிறார். ஆண்டவன் அனைத்தும் கடந்தவன்; அவனுக்குப் பசி என்பது கிடையாது என்ற அந்த நினைவே அற்றுவிடுகிறது. அந்த அன்பு பெருகும்பொழுது, சிவத் தன்மை அடையும் பொழுது, அன்பே சிவமாக அமர்ந்து விடும் நிலை தோன்றுகிறது. என்ன நினைக்கின்றார் கண்ணப்பர்? ஐயோ, இவருக்குப் பசித்துவிடுமே, உணவு வேண்டுமே என்று நினைக்கின்றார். உடனே வில்லை எடுத்துக் கொண்டு புறப்படுகின்றார். 'ஒருகணப் பொழுதில் மீள்வேன். ஒரு கணமேனும் தாழேன்'' என்கிறார். அங்கே எதிரே இருக்கின்றவன் அனைத்தையும் கடந்த ஒரு முழு முதற் பொருளாக கண்ணப்பருக்குக் காட்சியளிக்கவேயில்லை. தன்னைப் போன்ற ஒருவன் என்றே நினைக்கின்றார். இறைவனை மனிதனாக நினைக்கும் நிலைமை கூட அன்பின் முதிர்வால் வந்து விடுகிறது: ''ஒரு விநாடி நேரத்திலே பசிக்கு அருமையான உணவு கொண்டுவந்து விடுகிறேன். அப்படி நான்போய் இருக்கும்போது உன்மேல் பாயப் புலி, சிங்கம் ஒன்றும் வராது. ஒருவேளை வந்துவிட்டது என்று வைத்துக்கொள்; ஒருசத்தம் போடு. ஓடிவந்து விடுகிறேன்'' என்கிறார் கண்ணப்பர். ஆண்டவனிடத்திலே பேசுகின்ற பேச்சா இது? முற்றிலும் கடந்து நிற்கின்றவனிடத்திலே பேசுகின்ற பேச்சா இது? ஆம். அன்பே சிவம் ஆன நிலைமையிலே பேசுகின்ற பேச்சு இதைத்தான் சேக்கிழார் உணர்ந்து, ''தன் பரிசும் வினை இரண்டும் சாரும் மலம் மூன்றும் அற அன்புப் பிழம்பாய்த் திரிவார் அவர் பெருமை அளவிற்றோ'' என்று பாடுகிறார். நம் போன்றோரிடம் காணப்பெற்ற பல பண்புகள் கண்ணப்பரிடத்தில் இல்லாமற் போய்விட்டன. ஆணவம் முதலிய உயிருக்கு இயற்கையான இயல்புகள் மறைந்து அவை அனைத்தும் இருந்த இடத்தில் ஒன்று நிறைந்து விட்டது. தன் பரிசாகிய அகங்

காரம், மமகாரம் முதலிய எல்லாம் இருந்த இடத்திலே அவை எல்லாம் அழிந்தன? எஞ்சியது யாது? அன்பு ஒன்றுதான். கண்ணப்பர் வடிவம் எவ்வாறு இருந்தது? தெரியாது நமக்கு. கண்ணப்பருடைய வடிவத்தை எழுத வேண்டுமானால் என்ன செய்ய முடியும்? அன்பை ஒரு வடிவாக எழுத முடியுமானால் அதுதான் கண்ணப்பர் என்று சேக்கிழார் சொல்லுகிறாரே, அந்தச் சூழ்நிலை அன்பே சிவம் ஆகிவிட்ட நிலை.

**"ஆடி ஆடி அகம் கரைந்து, இசை**
**பாடிப் பாடிக் கண்ணீர் மல்கி, எங்கும்**
**நாடி நாடி நரசிங்கா! என்று,**
**வாடி வாடும் இவ்வாள் நுதலே"**

(திருவாய்மொழி, 2818)

'ஆடி அகம் கரைந்து' என்று பாடுகிறார். ஆடுதல் எதை எதையோ நினைத்துக் கொண்டு ஆடுவதாக நினைக்கிறோம். அந்த ஆட்டம் அணுக்களின் ஆட்டம். ஆண்டவனுடைய ஆட்டம். உள்ளே இருந்து உந்துகின்ற ஆட்டம். கெட்டியான பொருள் கரைந்தால் என்ன ஆகும்? ஓட ஆரம்பிக்கும் அல்லவா? அதுபோன்று அகம் கரைந்த தனால் வருகின்ற ஆட்டம். நாம் வெறும் ஆட்டம் ஆடுகிறோம். உள்ளம் கரையவேயில்லை. ஆனால், ஆழ்வார் கூறும் அந்த ஆட்டம் அகம் கரைந்து வருகின்ற ஆட்டம். 'அகம் கரைந்து ஆடி ஆடி நரசிங்கா என்று அந்த பெயர் வெளிப்படும்பொழுது வாடி வாடும் இவ்வாள்நுதலே' என்று சொல்லுவார். வாள் நுதல் என்ற சொல்லுக்கு ஒளி பொருந்திய நெற்றியினை உடைய பெண் என்பது பொருள். வாடுதல் என்ற சொல்லுக்கு வாடிப்போதல் என்று பொருள். வாடிப் போய்விட்டால் ஒளி பொருந்திய நெற்றி எங்கே கிடைக்கும்? இந் நிலை ஏற்படு முன்னர் இருந்த ஒளி யிருக்கிறதே அது உடம்பினுடைய ஒளி. பின்னர் உடல் வாடி விட்ட நிலையில் ஏற்படும் ஒளி இருக்கிறதே அது இந்த

நாட்டுக்காரர்கள் கண்டுபிடித்த பேருண்மை. உள்ளத்திலே அன்பு ஏற்படும்பொழுது உடம்பு வாடுகிறதாம். இதனை மாணிக்கவாசகர் அழகாகப் பாடுகிறார், "ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி" என்று. வாள்நுதலே என்ற சொல்லிலே ஆழ்வார் என்ன பேருண்மையைக் கற்பித்தார்? இந்த உள்ளம் உருகுவதற்கு முன்பிருந்த நிலை வேறு. உள்ளம் உருகிற்று; ஆடினாள்; அகம் கரைந்தாள்; நரசிங்கா என்று சொல்லத் தொடங்கினாள். பிறகு என்ன ஏற்பட்டது? ஒளி ஏற்பட்டது; வாட்டமும் ஏற்பட்டது. ஆனால், அந்த வாட்டம் உடம்புக்கு; ஒளி ஏற்பட்டது உள்ளத்திற்கு. ஆகவே மாணிக்கவாசகர் எந்த உண்மையை "ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி" என்றாரோ, அதனையே இந்தப் பாடலிலும் அழகாகக் காண்கின்றோம். எனவே, இப்பொழுது அந்த 'அன்பே சிவம்' என்ற தலைப்பை மனத்திலே வாங்கிக்கொண்டு பார்ப்போமே யானால், பல உண்மைகளை நாம் அறியமுடியும். ஆண்டவன் நம்மைப் படைத்தபொழுது நம்மிடத்திலே முதலாக வைத்து வாணிபம் செய்வதற்குத் தரப்பட்ட விதை போன்ற ஒரு பொருள் அன்பு என்பதும், அந்த அன்பை வைத்துக்கொண்டு தன்னல அளவோடு அதனை நிறுத்தி விடாமல், பிறர்நலம் என்ற அளவுக்கு அதனை விருத்தி செய்வோமேயானால், அதுதான் ஆண்டவன் நமக்கு அந்த விதையைக் கொடுத்தற்குரிய பயனை உள்ளவாறு பெறுவ தென்றும், அப்படி உலகத்திலே தோன்றிய வாழ்வை யெல்லாம் எடுத்துப் பார்ப்போமேயானால், ஒரு சிலர் மிகப் பெரிதாக அதனை வளர்த்து, உலகம் முழுவதையும் தழுவிக் கொள்ளுகின்ற நிலைமையிலே அன்பை வளர்த்து அருளாக் கினார்கள் என்றும், அப்படி அருளாக ஆக்கிக் கொள்ளாமல், தங்களுடைய அளவிலேயே சிலர் நின்று விட்டார்கள் என்றும், அன்பை வளர்த்தால் சிவமாக முடியலாம், சிவமாக முடிதல் என்பதே வாழ்க்கையின் பயனைப பெறுதல் என்றும் கூறலாம்.




தலைமை நிலையம் :

154, டி. டி. கே. சாலை,
ஆள்வார்பேட்டை, சென்னை-18.

கிளை நிலையங்கள் :

79, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை-108.

திருநெல்வேலி-6. மதுரை-1.
கோயமுத்தூர்-1. கும்பகோணம்-1.
திருச்சிராப்பள்ளி-2. சேலம்-1.

அப்பர் அச்சகம், சென்னை-108.